# THE PRIMARY CLASSICAL LANGUAGE OF THE WORLD

– மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர்

# உலகின் முதல் செம்மொழி

தமிழில் – ம.சோ.விக்டர்

மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின்

**THE PRIMARY CLASSICAL LANGUAGE OF THE WORLD**

# உலகின் முதல் செம்மொழி

தமிழில்

ம.சோ.விக்டர்

**யாத்திசைப் பதிப்பகம்**

50, அண்ணா நகர், அரியலூர் - 621 713,

பேச : 9198432 73914

மின்னஞ்சல் : yaathisaibooks@gmail.com

இணையம் : yaathisaibooks.com

## மொழிபெயர்ப்பு நூல்...


| | | |
|---|---|---|
| முதல் பதிப்பு | : | ஜூலை 2018 |
| நூல் | : | மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூல் |
| | | **The Primary Classical Language of the world** |
| ஆசிரியர் | : | டாக்டர்.ம.சோ.விக்டர், எம்.எ.,பி.எட்.,பி.எச்.டி., |
| | | மொழிபெயர்ப்பாளர் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 1×8 டிம்மி |
| தாள் | : | மேப்லித்தோ 18.6 |
| பக்கம் | : | 404+28 |
| விலை | : | ₹. 400/- |
| | | யூ எஸ் டாலர் : $ 20 |
| | | மலேசியா டாலர் : RM 40 |
| ISBN | : | 978-93-5001-594-0 |
| அச்சகம் | : | மெர்க்குறி அச்சகம் & பதிப்பகம் |
| | | பெரம்பலூர் - 621 212. |
| | | அலைபேசி : 94437 65979 |
| | | Email : mercuryprint1@gmail.com |
| வெளியீடு | : | யாத்திசைப் பதிப்பகம் |
| | | 50, அண்ணா நகர், அரியலூர் - 621 713, |
| | | பேச : +91 98432 73914 |
| | | மின்னஞ்சல் : yaathisaibooks@gmail.com |
| | | இணையம் : yaathisaibooks.com |

# தந்துரை

புலவர் இரா.இளங்குமரன்
மதுரை.

முனைவர் திருமிகு.ம.சோ.விக்டர் அவர்கள் நூற்றுக்கு மேற்பட்ட ஆய்வு நூல்கள் வழங்கிய ஊற்றுக்கண்ணர். பாவாணர் ஆங்கிலத்தில் வரைந்த அரிய நூலாம் 'உலக முதன்மொழி' என்றும் நுலைப் பெரிதும் முயன்று எளிமையும் இனிமையும் தவழ மொழியாக்கம் செய்து தமிழுக்கு வழங்கியுள்ளார்.

"4- ஆம் படிவத்தில், பூதநூல் உடல் நூல் நிலைத்திணை நூல் (Botany) தொகுதியையும்,

5 - ஆம் படிவத்தில், சுருக்கெழுத்து தட்டச்சு கணக்குவைப்பு (Book - Keeping) த் தொகுதியையும்,

6 - ஆம் படிவத்தில், வரலாறு, தமிழ்த்தொகுதியையும் சிறப்புப் பாடமாக எடுத்துப் படித்தேன். அன்று ஆங்கிலப் பற்றாளனாகவும் பேச்சாளனாகவும் மாணவர் (ஆங்கில) இலக்கிய மன்றச் செயலாளனாகவும் இருந்ததனால் ஆங்கில இலக்கியத்தைக் கரைகாணவும் ஆக்சுப் போர்டு (Oxford) என்னும் எருதந்துறையில் பணிகொள்ளவும் விரும்பினேன்"

என்று "என் தமிழ்த் தொண்டு இயன்றது எங்ஙனம்?", என்னும் தொடரில் எழுதினார் பாவாணர்.

ஒரு சொல் தானும் வேற்றுச் சொல் கலவாமல் பேசவும் எழுதவும் வல்லார் பாவாணர். அவர் வைத்திருந்த நூல் தொகுதியில் செம்பாதிக்கு மேல் ஆங்கில அகர முதலிகளும் ஆங்கில நூல் களஞ்சியங்களுமேயாம்.

ஆசிரியர் விக்டர் அவர்கள், "பாவாணரை, இதுவரையில் ஒரு தமிழ்ப் பேராறிஞராகவே நான் அறிந்திருந்தேன். அவருடைய ஆங்கில நூலைப் படித்தபோது, ஆங்கிலேயருக்கு இணையான இன்னும் கூடுதலாக என்றும் கூறலாம்.

ஆங்கிலப்புலமை அவரிடம் இருந்ததை அறிந்து வியப்புற்றேன்" என்பதன் உண்மை தேங்கிக் கிடக்கும் சான்றே முன்னே அவர் எழுதிய எழுத்தாம்.

*1931* - இல் "மொழியாராய்ச்சி ஒப்பியன் மொழிநூல்" என்னும் கட்டுரை எழுதினார். (செந்தமிழ்ச் செல்வி) அதில் உலக மொழிகளொடு ஒப்பிட்டு சொற்களைக் காட்டுகிறார். பாவாணர்.

எடுத்துக் காட்டாகச் சிலசொற்கள் :

Abba - அப்பன்

Axis - அச்சு

Babe - பார்ப்பு, பாப்பா

Chew - சவை

Cry - கரை

Kid - குட்டி

Mur mur - முறு முறு

Sign - சின்னம்

Tank - தாங்கல்

War - போர்

இக்கட்டுரை எழுதி முப்பத்தைந்து ஆண்டுகளின் பின்வந்தது 'உலக முதன்மொழி' ஆங்கில நூல். ஆதலால், அதன்வளர் நிலை சுட்ட வேண்டியதில்லை.

"அருமை உடைத்தென்ற சாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்"

என்றும் பொய்யாமொழியை மெய்ப்பித்திருக்கிறார். மொழிபெயர்ப்பு செய்த பன்னூலாசிரியர் விக்டர் அவர்கள்

"தமிழை வடமொழியினின்று மீட்க வேண்டும் என்னும் குறிக்கோள் கொண்டே நான் கற்றாய்ந்தவன் இதற்கு மிகுந்த நெஞ்சுரமும் தற்சார்பு மனப்பான்மையும் வேண்டும். இவை பிறர்க்கு இல்லை" *(15.08.1971)*

"தமிழே திராவிடத்தின் தாயும் ஆரியத்தின் மூலமும்

என்னும் உண்மையை உலகறிய நாட்டற்கு வேண்டிய வாறெல்லாம் என்னைத் தகுதிப்படுத்தி வருகிறேன்.” *(28.09.1972)*

இவை போலக் கடிதங்கள் பலவற்றில் தம் குறிக்கோளைப் பாவாணர் வரைகின்றார்.

“தமிழ்நாட்டில் அரசியல் துறையில் தலைமை தாங்கி வழிகாட்ட எங்ஙனம் ஒருவரில்லையோ, அங்ஙனமே புலமைத் துறையிலும் இல்லை. தக்கார் ஒருவர் தலையெடுக்கா விட்டால் தமிழ்நாடு, அமிழ்நாடே” *(15.07.1951)* இதுவும் அவர் கடிதவரைவே

பாவாணர் வரையறுத்த கோட்பாடுகள் :

1. “தமிழன் பிறந்தகமும் தமிழ்தோன்றிய இடமும் மறைந்த குமரிக் கண்டமே”
2. “தமிழ் திரவிடத்திற்கும் தாய்”
3. “தமிழ் ஆரியத்திற்கு மூலம்”
4. “உலக முதன்மொழி தமிழே”

- இவற்றை நிலை நாட்டும் ஆவணமாம் ஆங்கில நூலைத் தமிழாக்கம் புரிந்து, தமிழ்மட்டுமே கற்றாரும் புரியச் செய்துள்ள ஆசிரியர் எண்ணமும், அவரை மொழி பெயர்க்கத் தூண்டிய பாவாணர் கோட்ட நிறுவனர் திருத்தகு நெடுஞ்சேரலாதரும் பாராட்டுக்கும் நன்றிக்கும் உரியராம்.

வாழிய நலனே ! வாழிய நலனே !

இன்ப அன்புடன்
இரா.இளங்குமரன்



## பாவாணர் தந்துள்ள கலங்கரை விளக்கம்

இருபதாம் நூற்றாண்டில் எண்ணற்றவர்கள், தங்களின் எண்ணங்களை இலக்கிய, இலக்கண, ஆராய்ச்சித் தடங்களில் பதிவு செய்துள்ளனர். அவற்றுள் ஒரு சிலரின் பாடல்களும், கண்டுபிடிப்புகளும், கருத்துகளும், நுண்மாண் மொழிப்புலமையுடைய நூல்களும், அறிவுலகம் மற்றும் ஆய்வுலகத்தாரால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன.

பன்முக ஆற்றல்களையும், பன்மொழிப்புலமையையும் கொண்ட பாவாணர் அவர்கள் மூலம், தமிழும், தமிழ் இனமும், தமிழர் வரலாறும், தமிழரின் மான மீட்பும் நடைபெற்றுள்ளதைக் காண்கிறோம். பாவாணரின் கண்டுபிடிப்புகள், நோய்க்குரிய மருந்து போல் அமைந்து, தமிழிய நல வாழ்வுக்கு உறுதுணை புரிந்துள்ளன. பாவாணரின், "The Primary Classical Language of the World", என்ற ஆங்கில நூல் எழுதப்பட்ட காலம், தமிழ் மொழிப் பகைவர்களை, இந்தி எதிர்ப்பு போராட்டம் மூலம், எதிர்கொண்டு, எழுச்சி பெற்றிருந்த காலமாகும்.

பாவாணரின் இவ்வாங்கில நூலின் முன்னுரையின் முடிவில், தன்னம்பிக்கையுடன் எழுதியுள்ள ஆங்கில வரியை, **அறிஞர் ம.சோ.விக்டர்** அவர்கள் தெளிவாக உள்வாங்கி, "நெய்யும் மெய்யும் போல, மூடி மறைக்கப்பட்ட எவையும் மேலெழுந்து வெளிச்சத்துக்கு வரும் ", என்றவாறு மொழி பெயர்த்துள்ளது, அவரின் ஆங்கில மற்றும் தமிழ்ப் புலமைக்குச் சான்றாகும். அறிஞரின் தமிழ்ச் சொல்லாளுமை, நூல் முழுவதும் விரவிக் கிடக்கின்றது. மிகவும் சிக்கலான,

நுட்பமான, ஆழமான செய்திகளைக் கூட, தமக்கே உரிய எளிய நடையில், அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில், எழுதியிருப்பது, பாராட்டுக்குரியதாகும்.

பாவாணர், தமிழ் என்ற சொல், முதன் முதலில், திரமிள என்று சமற்கிருதத்தில் திரிந்தது என்றும், திராவிட என்ற சொல், தமிழ் என்ற சொல்லின் திரிபே என்றும் உறுதிப்படுத்துகிறார். அறிஞர் கால்டுவெல், தமிழினின்றே திராவிடம் என்ற சொல் பிறந்த தோற்ற மூலத்தைக் கண்டறிவதில் தவறிழைத்தார். அவருடைய பல முடிவுகள், தலைகீழான, தவறானவைகளாகவே அமைந்தன என்பதை, பாவாணர், இந்நூலில் அடுக்கடுக்கான சான்றுகளைக் கொண்டு நிறுவுகிறார். பாவாணர் பார்வையில், கால்டுவெல், "சாண் ஏறி முழம் சறுக்கியவராகவே", தென்பட்டார்.

தமிழும் தமிழ் இனமும் தொன்மை மிக்கவை என்பதை, பாவாணர் பல்வேறு மொழியியல் வழக்குகள், வழக்காறுகளைக் கொண்டு, ஆய்வு செய்து நிறுவினார்.

ஆரியம் இந்தியாவுக்குள் நுழையுமுன்பாக, தொல் தமிழும், தொன்மைத் தமிழ் இனமும், எம்மொழிக் கலப்புமின்றியும், எவ்வினக் கலப்புமின்றியும் தனித் தன்மையுடன் விளங்கியதை, பல்வேறு எடுத்துக்காட்டுகள், சான்றுகள் மூலம் விளக்கியுள்ளார். அவை தொடர்பான அகச் சான்றுகளும் புறச்சான்றுகள், ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கப்பட்டுள்ள, அடுக்ககங்களைப் போல், உயர்ந்து உறுதியாக நிற்கின்றன.

உலகளாவிய தமிழை, ஒப்பாய்வளவில் ஏற்றவர்களையும் மறுத்தவர்களையும் ஆய்வு செய்து, ஏற்புகளுக்குப் பாராட்டும், மறுப்புகளுக்கு நேர் விளக்கங்களும் அளித்துள்ளார். மறுப்பாளர்கள், தமிழின் ஆழத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாதவர்கள் என்றவாறு பதிவு செய்துள்ளார். ஆங்கிலத்தில் எழுதியுள்ள இந்நூலில், மேற்கண்ட இரு கருத்தாளர்களுக்கும் விரிவான விளக்கங்களைத் தொகுத்து வழங்கியுள்ளார்.

கடந்த ஆண்டுகளில், இந்நூலைத் தமிழில் மொழி

மாற்றம் செய்ய பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டும் அது நிறைவேறாதது, ஒரு குறையாகவே இருந்தது. இச்சுழலில், அறிஞர், ம.சோ.விக்டர் அவர்களை அணுகி, மொழிபெயர்ப்பு செய்து தருமாறு கேட்டுக் கொண்டேன். தொடக்கத்தில் அவர் தயங்கினாலும், பின்னர் ஏற்றுக் கொண்டார். உலகெங்கும் வாழும் பாவாணரின் பற்றாளர்கள், தமிழ் உணர்வாளர்கள், பொதுநிலைத் தமிழர்கள், தமிழறிஞர்கள், மாணவர்கள் படித்துப் பயன்பெறும் வகையில், இந்நூல் வழியே, பாவாணரியல் கொண்டு செல்லப்படுகின்றது.

"பாவாணரின் கொள்கை பரப்புநர்" விருது உள்ளிட்ட பல விருதுகளைப் பெற்றுள்ள, வேர்ச்சொல் வித்தகர், மொழியியல் அறிஞர், வரலாற்று ஆய்வாளர், தக்கார் (டாக்டர்) ம.சோ.விக்டர் அவர்கள், இவ்வரிய மொழிபெயர்ப்பு நூலை வழங்கி வரலாறு படைத்துள்ளார்.

ஆங்கில மொழி அறிவாளர்கள் மட்டுமே படித்துப் பயன்பெற்ற இந்நூலைத் தமிழ் மொழி அறிவாளர்களும் படித்துணர வழிவகுத்த, பாவாணரின் வழித்தோன்றல், அறிஞர் ம.சோ.விக்டர் அவர்களுக்கு, பாவாணர் கோட்ட ஆட்சிப் பொறுப்பாளர் என்ற தகுதியில், எனது வாழ்த்துக்களையும், பாராட்டுகளையும் உரித்தாக்குகின்றேன்.

பாவாணரின் சிந்தனைகளையும், ஆய்வுகளையும் வெளிப்படுத்தும் இம்மொழி மாற்ற நூல், உலகத் தமிழர்களால் ஏற்றிப் போற்றப்படும் என உறுதியாக நம்புகிறேன். பெரும் பொருட்செலவில், இந்நூலை வெளியிட முன் வந்த, அரியலூர், யாத்திசைப் பதிப்பகத்திற்கும் என் நன்றி.

தமிழ், பிற மொழிக் கலப்புகள் இன்றி, நன்றாக வேண்டும், என்றும் வென்றாக வேண்டும்.

**தமிழாசிரியர், ஆ.நெடுஞ்சேரலாதன்,**
ஆட்சிப் பொறுப்பாளர்,
பாவாணர் கோட்டம் -
பாவாணர் பாசறை.

சீயோன் மலை,
முரம்பு, சோழபுரம் (தெற்கு)
இராசபாளையம் வட்டம்,
விருது நகர் மாவட்டம் - 626 139.
கைப்பேசி : 94432 84903

# மறைமலையடிகள் வாழ்த்துரை

பண்டிதர் ஞா.தேவநேயன், பி.ஒ.எல் அவர்களின், தமிழ்ச் சொற்கள் சார்ந்த ஆய்வுகளும் தமிழ்ப் படைப்புகளும், பொதுவான மொழியியல் அடிப்படைக் கூறுகளைக் கொண்டு, தமிழில் பல காலம் உணரப்பட்ட எதிர்பார்ப்புகளின் வெளிப்பாடுகளாக உள்ளன. என் இளமைக் காலத்தில், ஆர்ச் பிசப் ட்ரெஞ்சு, படைத்த சொற்களின் ஆய்வுகள், பேராசிரியர் மாக்சுமுல்லரின் மொழி அறிவியல், பேராசிரியர் சைசு எழுதிய மொழியியல் ஒப்பாய்வு போன்ற ஆங்கில நூல்களில் எனது கற்றலை மேற்கொண்டிருந்தேன். எனது கவனம், டாக்டர் கால்டு வெல்லின், திராவிட மொழிகளின் ஒப்பாய்வுகள் என்ற, மேற்கண்ட அறிஞர்களின் ஆய்வையொட்டியமைந்தி திருந்ததால், கால்டுவெல் நூலின் பக்கம் திரும்பியது. அப்போது அறியப்பட்டிருந்த, தமிழறிஞர்களுக்குக் கூட விரிவான வியக்கத்தக்க, பெரும் அறிவு செறிவு நிறைந்த தமிழின் பெருமைகள் தெரிந்திராமல், மறைக்கப்பட்டிருந்தன. இப்போதும் டாக்டர் கால்டுவெல்லின் ஆய்வுகள் அறியப்படாதிருந்த அனைத்து பகுதிகளையும் சொற்களையும் தொட்டு ஆய்வு செய்துவிட்டதாக எதிர்பார்க்க இயலாது. இதனால், தமிழ் மொழி பற்றி நான் இரண்டொரு கட்டுரை களை எழுதி, என்னுடைய இதழான ஞான சாகரத்தின் முதல் தொகுதியில் வெளியிட்டிருந்தேன். ஆனால் அப்பணியை என்னால் தொடர இயலவில்லை. சமயம், மெய்யியல், பிற இலக்கியம், வரலாறு போன்ற துறைகள் என்னையும் என் கவனத்தையும் உள்வாங்கிக் கொண்டன.

இப்போதும், மொழியியல் துறையில், தகுதியும் திறமையும் வாய்ந்த ஆய்வறிஞர் எவரேனும் கிடைப்பார்களாவென எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அருள்திரு யாழ்ப்பாணம் ஞானப்பிரகாச அடிகளார், தமிழ் மொழி பற்றிய தன்னுடைய ஆய்வுக் குறிப்புகளை எனக்கு அனுப்பியிருந்ததைக் கண்டு, படித்து, ஒரு வகையில் நிறைவடைந்தேன். இத்துறை மிக விரிந்த, நீண்டதொரு துறையாகும். மேலும் இத்துறையில் மிகுதியான ஆய்வுகளை,

விரிவான அளவில், குறிப்பாக தொன்மையான செம்மொழித் தமிழை ஆய்வு செய்யும் ஒருவரை நான் எதிர்பார்த்திருந்த போது, என்னுடைய எதிர்பார்ப்புகளை முழுமையாக நிறைவு செய்யும் வகையில் திரு. தேவநேயன் விளங்கினார் என்பதைக் கூறிக் கொள்வதில் மகிழ்ச்சியடைகிறேன். தமிழறிஞர்கள், தமிழ் மொழி ஆய்வுகளில், திரு. தேவநேயன் அவர்களைப் பின்பற்றலாம் என்றும் அவருடைய மிகச் சிறந்த ஆய்வுகளால் பயன்பெறலாம் என்றும் துணிந்து கூறுவேன். தமிழ்ச் சொல்லாய்வுகள் தொடர்பாக, திரு. தேவநேயன் முன்னிலையில் நிற்கிறார் என்றாலும், சில பகைமையும் தோன்றக் கூடும் என்பது என்னுடைய தாழ்மையான கருத்து.

மேலும் திரு.தேவநேயன் அவர்கள், செறிவுள்ள ஆசிரியர், ஆர்வமிக்க விரிவுரையாளர். நான் தலைமையேற்ற தமிழ்ச் சங்க ஆண்டு விழாக்களிலும், பிற நிகழ்வுகளிலும், திரு.தேவநேயன் அவர்கள் பெருங்கூட்டத்தினரை ஈர்க்கும் வகையில், நகைச்சுவை கலந்து பேசுவதைப் பலமுறை கண்டிருக்கிறேன். மிகுந்த உழைப்பை நல்கும் ஆய்வறிஞராக திரு.தேவநேயன் அவர்கள், அவர் பணியாற்றும் கல்வி நிறுவனங்களுக்குப் பெயரையும் புகழையும் சேர்த்து, தனது செயல்களை ஆற்றுவார் என்பதில், நான் முழு நம்பிக்கை கொண்டிருக்கிறேன்.

பல்லாவரம், 1949. மறை மலையடிகள்

## பாவாணர் உரை

உலக அளவில், இயற்கையினாலும், மாந்தக் குழுக்களின் அறநெறிப் பிறழ்வுகளாலும், வெளி நாட்டவருடைய கெடு முயற்சிகளாலும், உள்நாட்டுப் போலிகளாலும், எம் மொழிகளிலும் அமைந்திராத அழிவுகளை, தமிழ் மொழி சந்திக்க நேர்ந்தது. பொதுவாக, கலை மற்றும் அறிவியல் தொடர்பானவை, காலப் போக்கில் வளர்ந்தன என்பதைச் சிலர் ஏற்க மறுப்பர். மொழியியல் துறையில், அடிப்படையிலேயே பல தவறுகள் இழைக்கப்பட்டன. மேலை நாடுகளே தமிழருடைய தாய் நிலமாகச் சொல்லப்பட்டன. சமற்கிருதம் என்ற பிற்கால, அரை செயற்கை மொழி, பேச்சு வழக்கில் இல்லாத இலக்கியமாக இருந்தும், இந்திய-ஐரோப்பிய மொழிக் குடும்பத்துடன் இணைக்கப்பட்டு, இந்தியாவின் தொடர்பு மொழியாக்கப்பட்டது.

மேலை நாட்டவர், தமிழ் ஒரு பண்பட்ட செம்மொழி யென்பதையும், அது குமரிக்கண்டத்துத் தமிழர்களால் தோற்றம் பெற்றது என்பதையும் இந்நாள் வரை கூட அறிந்திருக்கவில்லை. திட்டமிட்ட ஒருங்கிணைந்த முயற்சிகள் வழியே, சமற்கிருத மொழியாளர்கள் தமிழ் மொழியை பொதுத்துறைகளிலும், தனியார் துறைகளிலும் அழிக்கவும் நசுக்கவும் முனைப்புக் காட்டினர். வேதச் சடங்காளர்கள், தென்னிந்தியாவுக்குள் புகுந்த காலத்திலிருந்து தங்களின் வெள்ளை நிறத்தால் தம்மை மக்களில் உயர்ந்தோராக் கூறி, அதன் பயன்களை அறுவடை செய்து கொண்டார்கள். தமிழ்நாட்டு மன்னர்கள், அவர்களின் தொன்மப் புனைவுகளைத் தயக்கமின்றி ஏற்றுக் கொண்டதின் பயனாக அவர்கள், தங்களை இப்புவியின் கடவுளராக வெளிப்படுத்திக் கொண்டனர். எங்களுடைய முன்னோர்களின் மொழியும் இலக்கியங்களும் தெய்வத்தன்மை வாய்ந்தவை அல்லது

தேவருலக மொழி என்று பொய்யாகக் கூறியதை, தமிழர்களும் நம்பினார்கள்.

கி.பி.1796 ஆம் ஆண்டிற்குப் பின், மதிப்பு மிகு வில்லியம் சோன்சு, சமற்கிருத மொழியைப் பல்வேறு ஆய்வுகள் வழியாக வெளிக் கொணர்ந்ததற்குப் பிறகு, தமிழ் மொழியின் நிலைப்பாடு கேடுற நேர்ந்தது. மாக்சு முல்லரின் சமற்கிருதம் தொடர்பான ஆய்வுகள், அம்மொழியின் மீது விரிவான முழுக் கவனத்தையும் செலுத்தின. சமற்கிருதப்பதிவுகள் கண்மூடித்தனமாக நம்பப்பட்டன. உள் நாட்டிலும், வெளிநாட்டிலும் அம்மொழியின் வளர்ச்சி முன்னெடுக்கப்பட்டு, விரிவான பரப்புரைகள் மேற்கொள்ளப்பட்டன. அதன் வழியில் வலிமையான அழுத்தங்களும் தரப்பட்டன. அவர்களுடைய முன்னோர்கள் பற்றிய குற்றத் தன்மையுள்ள அடையாளங்கள் மறைக்கப்பட்டன. அறிவுத் திருட்டு, மறைமுகமான வன்முறைகள் தொடர்ந்து நிகழ்வுற்றன.

தமிழகத்தில், அரை நுற்றாண்டுக் கால அளவில், கங்காணியார் கால்டுவேல் அவர்களின் திராவிட மொழிகள் பற்றிய ஆய்வுகள் தமிழின் தொன்மைப்பற்றி ஏற்றுக் கொள்ளக் கூடிய எந்த முன்னேற்றமான செய்திகளையும் வெளிப்படுத்தாமல், பழைய நிலையே தொடர்ந்தது. அறிவியல் மற்றும் இலக்கியத் துறைகளில் தவறான செய்திகளும், கொள்கைளும் பின்பற்றப்படும்போது மாந்த வளர்ச்சியின் வெளிப்பாடுகளை மறையச் செய்வதோடு, படைப்பாளிகள் அறிஞர்களின் உள்ளங்களில் நீண்ட நாள் நிலைத்திருந்து, எதிர் மறையான சிந்தனைகளைத் தோற்றுவிக்கும்.

ஆரியத் தாக்கங்கள் தமிழ் மொழியின் வளர்ச்சியை தடுத்து நிறுத்த முயன்றதோடுமட்டுமல்லாமல், மாந்த இனத்தின் விரிவான ஆர்வத் துறைகளான உலக வரலாறு, மொழிகள் பற்றிய ஒப்பாய்வுகள், இனங்களின் நாகரிகப் பண்பாட்டுக்

கூறுகளையும் தடை செய்தன. சமற்கிருதம். தமிழ் மொழி பெற்றிருந்த பெயரையும் புகழையும் பின்னுக்குத் தள்ளி, அவ்விடத்தில், தனது முறைகேடான, தவறான வழிமுறைகளால் அமர்ந்தது. தமிழ் மொழியின் எதிர்காலத்தையே கேள்விக் குறியாக்கிற்று.

மேலைநாட்டுப் பல்கழைக்கழகங்கள், குறிப்பாக மேற்கு செர்மானியப் பல்கலைக் கழகம், தனது கடந்த காலத்திய பல தவறுகளை உணர்ந்து, அந்த நிலையிலாவது, தமிழ் மொழிக்கான நட்பாய்வை மேற்கொண்டது. மேற்கத்திய பதிப்பாளர்கள் தங்கள் கடமையையும் பொறுப்பையும் உணர்ந்து தங்கள் வெளியீடுகளில் தென்னிந்திய வரலாற்றையும், திராவிட மொழியியல் பற்றிய செய்திகளையும் முடிந்த அளவில் அண்மைக்காலத்து ஆய்வுகளாக வெளிக் கொணர்ந்தனர்.

எனது நாற்பதாண்டுக் கால ஆய்வுகளின் முடிவில், மொழிகளுக்கிடையேயான ஒப்பாய்வுகளைப் பொதுவாகவும், திராவிட மொழிகளுக்கிடையிலான ஒப்பாய்வுகளைக் குறிப்பாகவும் அளித்ததன் பயனாக, குமரிக் கண்டத்தில் வழக்கிலிருந்த பழமையான தமிழ்மொழி, திராவிட மொழிக் குடும்பத்தின் தாயாகவும், இந்திய-ஐரோப்பிய மொழிகளின் மூலமாகவும் தெரிய வந்துள்ளது.

ஏறக்குறைய ஆறாண்டுகளாக, கையெழுத்துப் படியாகவே இருந்த இந்நூல், வெளியிடுவதற்கான பொருள் பற்றாக்குறையால் முடங்கிப் போயிருந்தது. அச்சூழலில், கொடைவள்ளல் கருணைத்திரு அரிராம் சேட் குடும்ப உறுப்பினர் குழு இந்நூலை வெளியிட முன் வந்தமைக்கு மகிழ்வையும், எல்லையற்ற என் நன்றிப் பெருக்கையும் தெரிவித்துக் கொள்கிறேன். உரிய காலத்துக்கு முன்பே, இளமையில் இயற்கை எய்திய முக்கூடல் கொடை வள்ளலின் மறைவுக்குப் பிறகும் இந்நூல் வெளியானதில், அவர்களின் கொடைத்தன்மை வெளிப்பட்டுள்ளது.

அச்சக உரிமையாளர் திரு. ஏ.என்.சம்பந்தன், இந்த மொழியியல் ஆய்வு நூலை, நூலில் கண்டுள்ள அடையாளக் குறிகள் மாறாமல், குறிப்பிட்ட கால வரையறைக்குள் அழகிய முறையில் அச்சிட்டுக் கொடுத்ததற்கு என் இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

மூடி மறைக்கப்பட்ட எதுவுமே வெளிச்சத்துக்கு வராமல் போகாது. நெய்யும் மெய்யும் இறுதியில் மேல் நோக்கி வெளிப்படும்.

காட்டுப்பாடி விரிவு

*21.3.66*

ஞா.தேவநேயன்

## ஆசிரியர் உரை

தமிழே உலகின் முதன் மொழி, தமிழினமே, உலகின் முதல் இனம் என்பதை அறுதியிட்டு உறுதிபட, பல்வேறு உலக மொழிகளோடு, தமிழைத் தொடர்புப்படுத்தி, தம் வாழ் நாளெல்லாம் உழைத்து, அம்முயற்சியில் வெற்றி கண்டவர், மொழி ஞாயிறு ஞா.தேவ நேயப் பாவாணர் ஆவார்கள். அவர் வாழ்ந்திருந்த காலம், தமிழுக்கு ஒரு பொற்காலமாகவே இருந்தது. பாவாணர் காலத்திலேயே வாழ்ந்திருந்த மறைமலையடிகள், அப்பாத்துரையார், கி.ஆ.பெ.விசுவநாதம், சேதுபிள்ளை, பெருஞ்சித்திரனார் போன்றவர்களும், தன்னிகரற்ற தொண்டினைத் தமிழுக்கு ஆற்றினர். தமிழ் இன உணர்வையும், தமிழ் மொழிப் பற்றினையும், அக்கால இளைஞர்களுக்கு விதைத்து, உரமேற்றி வளர்த்தார்கள். மேற்கண்ட அறிஞர் பெருமக்களின் மறைவுக்குப் பின், அவர்கள் விதைத்த பயிர்கள், நல்ல அறுவடையைத் தரும் என்று எதிர்பார்க்கப்பட்டது. அதனை எதிர்பார்த்தே அப்பெருமக்கள் உழைத்தார்கள். அவர்களின் உழைப்பெல்லாம் விழலுக்கிறைத்த நீராகிப் போனதோ என்று, இன்று எண்ணத் தோன்றுகிறது.

கடந்த ஐம்பது ஆண்டுகளில், அப்பெருமக்கள் தொடங்கி வைத்த தமிழுணர்வு, மங்கி மறைந்துள்ளது கண் கூடாகத் தெரிகின்றது. அவர்கள் வளர்த்த நாற்றுகள் நாற்றங்காலிலேயே நின்று போயின. பிராமணியத்தையும், சமற்கிருதத்தையும், இந்தியையும் எதிர்த்துப் போராடியவர்கள் அதில் வெற்றியும் கண்டனர். அவர்களின் மறைவுக்குப் பின், ஆங்கிலம் என்ற புறப்பகை, நம் தமிழைச் சிதைக்க ஆட்சியாளர்களால் வலிந்து வரவழைக்கப்பட்டுள்ளது. கடந்த 50 ஆண்டுகளில், அரசாங்கத்தின் ஒப்புதலுடன், புற்றீசல்கள் போல் புறப்பட்டுள்ள ஆங்கிலப் பள்ளிகள், இன்று குடிசைகளின் கதவையும் உடைத்து கொண்டு உள்ளே

நுழைந்து விட்டன. உணர்வுள்ள தமிழர்கள், போராடிப் போராடி ஓய்ந்துப் போய்விட்டனர். தாய்மொழியைப் புறக்கணித்த நாடு, என்றுமே உயர்வடைந்ததில்லை என்பதை அனைவரும் அறிந்திருக்கின்றனர். ஆட்சியாளர்களும் அதற்கு விதிவிலக்கன்று. ஆங்கிலம், உலகப் பொதுமொழி யென்று, பொய்யான செய்திகள் பரப்பப்படுகின்றன.

தமிழ் மொழியின் வளர்ச்சியிலும் தொய்வு நிலையே காணப்படுகிறது. மொழியை வளர்ப்பதற்கான எந்த உருப்படியான கொள்கையும் அரசுக்கு இல்லை. பல்கலைக்கழகங்கள், தங்கள் தகுதிகளையும் சிறப்புகளையும் இழந்து நிற்கின்றன. கல்விக்கென ஒதுக்கப்பட்ட தொகைகள், துணை வேந்தர்களால், வெளிப்படையாகவே, கையாடல் செய்யப்படுவதை காண்கிறோம். தகுதியான ஆசிரியர்கள், பேராசிரியர்கள், பணிகளுக்கு வர இயலவில்லை.

உலகில் தோற்றுவிக்கப்பட்ட, மொழிக்கான முதல் பல்கழைக்கழகம் இசறாயல் நாட்டில் தெல் அவிவ் நகரிலுள்ள எபிரேய மொழிப் பல்கழைக்கழகமாகும். அப் பல்கழைக்கழகம் எபிரேய மொழியை ஒவ்வொரு குடி மக்களிடமும் ஐம்பது ஆண்டுகளில் கொண்டு சென்றிருக்கிறது. எபிரேய மொழிக்கும் உலக மொழிகளுக்கும் உள்ள தொடர்புகள் அங்கு ஆய்வு செய்யப்படுகின்றன. அப்பல்கழைக்கழகத்தில் எபிரேய மொழி பேராசிரியராக பணியாற்றிய கைம்ராபின் என்பவர், எபிரேய மொழிச்செய்யுள் இலக்கியங்களில், சங்க இலக்கியங்களான அகநானூறு, புறநானூறு, கலித்தொகை, குறுந்தொகை ஆகியவற்றின் கருத்துகளும் செய்திகளும், உவமைகளும், காணப்படுவதாக ஆய்வு செய்தார்கள். அதற்கான செலவுத் தொகையை, அப்பல்கலைக்கழகம் ஆய்வாளர்களுக்கு வழங்குகிறது. தமிழ் நாட்டில் தமிழோடு தொடர்புடைய உலக மொழிகளைப் பற்றி ஆய்வு செய்ய, குறிப்பாக எபிரேய மொழியை ஆய்வு செய்ய, அரசுக்கு விண்ணப்பம் அளிக்கப்பட்டது. கடந்த 2015 ஆம் ஆண்டு, நான் அளித்த அந்த

விண்ணப்பம், 2018 ஆம் ஆண்டு சனவரியில் தான், நிதித்துறைக்கு சென்றடைந்தது. இந்தளவிற்கு என்னுடைய உழைப்பும் முயற்சியும் சொல்லக் கூடியவையன்று. இன்று, அவ்வாறு உலக மொழிகளோடு, தமிழை தொடர்பு செய்யவும், அதற்கான நிதியினை வழங்கவும், சட்டத்தில் இடமில்லை என்று சொல்லப்பட்டது. தமிழைப் பற்றியும், தமிழின் தொன்மையைப் பற்றியும், தமிழின் ஆழம் பற்றியும் அறியாத அதிகாரிகள், ஆட்சியாளர்கள் இருக்கும் வரை, தமிழ் வளர்ச்சிக்கு எந்த முன்னேற்றமும் ஏற்படப்போவதில்லை.

கடந்த 2017 டிசம்பர்த் திங்களில், பாவாணர் தோட்டத்தின் பொறுப்பாளர், தமிழ் ஆசிரியர் திரு. நெடுஞ்சேரலாதன் அவர்கள், பாவாணர் எழுதியுள்ள நூல்களில், "The Primary Classical Language of the World" என்ற ஆங்கில நூலை என்னிடம் அளித்து இந்த நூலைத் தமிழில் மொழிப் பெயர்த்துத் தருமாறு வேண்டுகோள் விடுத்தார். திரு. நெடுஞ்சேரலாதன் அவர்களுக்கு தெரியாத அறிஞர் பெருமக்கள் தமிழ்நாட்டில் இல்லை என்றே கூறலாம். முதலில் எனக்கு தயக்கமே தோன்றியது. என்னுடைய தயக்கத்தை அவரிடம் கூறினேன். பாவாணர் அவர்கள் இந்த நூலில் தமிழின் வேர்ச் சொற்கள் பற்றியும், அவ்வேர்கள், உலக மொழிகளில் எவ்வாறெல்லாம் விரிவடைந்துள்ளன என்பது பற்றியும், நுணுக்கமாக, ஆழமாக பதிவு செய்துள்ளார். ஆங்கிலப் புலமைப் பெற்றவர்களால், இந்நூலை மொழி மாற்றம் செய்ய இயலாது என்பதை அறிந்தே, உங்களிடம் இப்பணியை ஒப்படைக்கிறேன் என்றும் கூறினார். வேண்டுகோளை மறுக்க இயலாத நிலையில், ஏற்றுக்கொண்டேன்.

பாவாணருடைய தமிழ்ப் படைப்புகள் அனைத்தையும் நான் பல முறை படித்து தெளிந்திருக்கின்றேன். இந்த ஆங்கில நூலை முழுமையாகப் படித்ததில்லை. நூலைப்படிப்பதென முடிவு செய்து, தனிமையில் அமர்ந்து நூலைப் படித்தேன். என்னுடைய நம்பிக்கை முற்றிலுமாகத் தகர்ந்து போயிற்று.

பாவாணரை, இதுவரையில், ஒரு தமிழ்ப் பேரறிஞராகவே நான் அறிந்திருந்தேன். அவருடைய ஆங்கில நூலைப் படித்த போது, ஆங்கிலேயருக்கு இணையான, இன்னும் கூடுதலாக என்றும் கூறலாம், ஆங்கிலப்புலமை அவரிடம் இருந்ததை அறிந்து வியப்புற்றேன். சிறுசிறு சொற்றொடர்களை, தாம் கூற வந்த கருத்தை, ஆங்கிலம் படித்த எவராலும் எழுதிவிட இயலும். மிகவும் சிக்கலான, ஆழமான, மொழி ஆய்வுக் குறிப்புகளை ஒரு பகுதி (Paragraph) அளவில் ஏறக்குறைய 10 வரிகளில் கூட்டுச் சொற்களைச் சேர்த்து முற்றுப் புள்ளி வைக்காமல் எழுதியிருக்கிறார். இவ்வரிகளைத் தொடர்ந்து படிப்பதும், அதன் பொருளை நினைவில் வைத்திருப்பதும் எளிதானவையன்று. வள்ளலார்தான் இந்நூலைப் படிக்கும் போது என் நினைவுக்கு வந்தார். அவர்தான் முற்றுப் புள்ளி வைக்காமல் தொடர்ந்து எழுதியவர். பாவாணர் கையாண்டிருக்கும் பல ஆங்கிலச் சொற்களுக்கு, தமிழ் அகராதிகளில் பொருள் சொல்லப்படவில்லை. மிகப் பெரிய அளவிலான (concise) ஆங்கில அகராதிகளில் மட்டுமே, அவர் கையாண்ட சொற்களுக்கான பொருள் விளக்கப்பட்டிருந்தது.

தமிழ் இலக்கணச் சொற்களுக்கான, சரியான ஆங்கிலச் சொற்களை அவர் தேர்வு செய்திருக்கிறார். மேற்கோள்கள், உலக இலக்கியங்கள், உலக வரலாறுகளில் காட்டப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, ஆங்கிலேயர்கள் தமிழ் நாட்டில் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற காலத்தில் தமிழர்கள் தமிழ் நாட்டில் உரோமப் பேரரசு காலத்து அடிமைகள் போல் இருந்தார்கள் என்று குறிப்பிடுகிறார். தமிழ்நாட்டுச் சாதிகளின் எண்ணிக்கை, லின்னேயுசு என்ற தாவர, விலங்கியல் அறிஞர் கண்டுபிடித்த எண்ணிக்கையை விட கூடுதலாக இருந்திருக்கலாம் என்று எழுதி இருக்கிறார்.

(Linnanean classification of plants and Animals) இந்த விலங்கியல் அறிஞரைப் பற்றி நான் கேள்விப்பட்டதே இல்லை. அவர் யார் என்பதை, விலங்கியல் தொடர்பான நூல்களைத்

தேடிப் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது. (Carl von Linners 1707-78, Swedish botanist, researcher, Biromial nonenclature in the classification of animals and plants). மொழியியல் தொடர்பாக, பல்வேறு மொழி அறிஞர்களின் கூற்றுகளையும் பதிவு செய்துள்ளார். மொழிப் புலமை மட்டுமல்லாது, அத்துறைகள் சார்ந்த அறிவையும் பாவாணர் பெற்றிருந்தார். இவ்வாறெல்லாம், துறைச் சார்ந்த அறிவைப் பெற்றவர்களே, தமிழை ஆய்வு செய்ய இயலும் என்பதையும் பதிவு செய்துள்ளார். கருவிலேயே திருவுடையார் என்பதைப் போல, பிறப்பிலேயே மேதையாகப் பிறந்தவர் பாவாணர் என்பதை, ஓங்கி உரத்து, உரக்கச் சொல்வதில் தவறேதுமில்லை. இக்காலத்துத் தமிழறிஞர்களில் பலர் ஆங்கிலப் புலமையும் பெற்றுள்ளனர். அவர்களால் கூட, இத்தகைய ஓர் ஆங்கில நூலை எழுத இயலுமா என்பது கேள்விக் குறியே.

ஒவ்வொரு துறைக்கும், வெவ்வேறு வகையான கலைச் சொற்கள் உள்ளன. அனைத்துத் துறைகளுக்குமான கலைச் சொற்கள், முழுமையாக இதுவரை தமிழில் உருவாக்கப் படவில்லையென்பது வருந்தத்தக்கது அன்று வெட்கக் கேடானது. மூப்பு வாய்ந்த முதன் மொழிக்கு, வளமான சொற்களைக் கொண்ட தமிழ் மொழிக்கு, எத்துறைச் சார்ந்த பிறமொழிச் சொற்களையும், தமிழில் பெயர்த்தெடுக்க இயலும். பெல்சியம் போன்ற 40 இலக்கம் மக்கள் தொகை கொண்ட, முற்றிலும் 300 ஆண்டுப் பழமை வாய்ந்த பிளமிசி (Flamish) என்ற மொழிக்குக் கூட, அனைத்துத் துறைகளிலுமான கலைச் சொற்கள் அறியப்பட்டு, அவை பயன்பாட்டில் உள்ளன.

ஒவ்வொரு மொழிக்கும் தனிப்புலமையுண்டு. சொற்கூட்டு, வாக்கியக் கட்டமைப்பு, தொடரமைப்பு முறை, உட்கூறு, இலக்கணம் ஆகியவை மாறுபடும். தொடர்நிலை, தொடர் வடிவம், தொடர்மொழி, சொற்றொடர் குறியீடு, தனிக்குறியீடு, சொல் நடை ஆகியவையும் மாறுபட்டிருக்கும். ஆதலால், ஒரு மொழியின் மூலத்தை, மற்றொரு மொழிக்கு

மாற்றம் செய்யும் போது, மாற்றம் செய்யப்படும் மொழிக்கேற்றவாறு, மொழி பெயர்க்க வேண்டும். வரிக்கு வரி மொழி மாற்றம் செய்வதும் சரியாக அமையாது. தமிழ் மொழிக்கென, கட்டமைப்புகள், விதிமுறைகள் பல உள்ளன. அந்த வகையில் தான், இந்நூல் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. குறிப்பாக, தமிழில் பாவாணர் பயன்படுத்திய மொழித் தொடர்பான கலைச் சொற்கள், கூடுமான வரை பயன் படுத்தப்பட்டுள்ளன.

பொதுவாக, பாவாணருடைய மொழி நடை, தொடர்வதற்குக் கடினதாக உள்ளதெனக் கூறுவர். பேராசிரியர்கள் பலரும் கூட, பாவாணருடைய நூல்களைப் படித்துப் புரிந்து கொள்ள இயலவில்லை என்று என்னிடம் கூறியிருக்கின்றனர். பாவாணருடைய தமிழ் நடை, தனித்தன்மை வாய்ந்தது. பிறமொழிச் சொற்கள் கலவாத தனித் தமிழ்ச் சொற்களைக் கொண்டது. தமிழில் எக்கருத்தையும் வெளிப்படுத்த இயலும் என்று மெய்ப்பிப்பதற்காக எழுதப்பட்டது. ஓரிரு முறைகள் படித்தால், எதிர்காலத்தில் கை கூடலாம். அவருடைய நடையில் என்னாலும் எழுத இயலாது என்பதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். ஒவ்வொருவருக்கும் ஒரு நடை வாய்த்திருப்பதைப் போல, எளிய நடையே எனக்கு வாய்த்தது. இக்கால வேர்ச்சொல் விளக்கங்களையும், எளிதான தமிழ் நடையில் நான் எழுதி வருகிறேன். அந்த வகையில், இந்த நூலும் எளிமையான நடையில் எழுதப்பட்டதே.

தமிழின் முதல் நூல், கிறித்தியானி என்ற போர்த்துக் கீசிய மொழி நூலில் இருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. அருளாளர் பிரான்சிசு சேவியர் எழுதிய அந்நூலே, முதன் முதலாகத் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. தொடக்கக் காலக் கிறித்துவ விடையூழியர்கள், தமிழில் எழுதி அச்சிட்டு வெளியிட்ட நூல்கள் அனைத்தும், மொழி பெயர்ப்பு நூல்களே.

தமிழினின்றும் திருக்குறளின் முதலிரண்டு படிகளை, வீரமாமுனிவர், இலத்தீனில் மொழி பெயர்த்தார். சி.யு. போப் பையர், திருக்குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த போது, அறம் என்ற சொல்லுக்கான சரியான சொல், ஆங்கிலத்தில் இல்லை என்றும், ஓரளவுக்குப் பொருந்தி வரக்கூடிய, (Virtue) என்ற சொல்லையே தாம் பயன்படுத்தியதாகவும் கூறுகிறார். அறம் என்ற சொல்லுக்கு, தமிழிலேயே மாற்றுச் சொல் இல்லை என்பதே, அச் சொல்லின் சிறப்பை உணர்த்தும்.

பாவாணருடைய ஆங்கில நூலை, தமிழில் மொழி பெயர்ப்பதென்பது, என் தகுதிக்கு மீறிய செயலாகவே கருதுகின்றேன். முயன்று பார்த்துள்ளேன் என்று மட்டும் கூறலாம். குறைகள் இருப்பின், பூவின் புற இதழ்களைப் போல் கருதி விடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். இந்நூலுக்குத் தகுதியான தந்துரை அளித்துள்ள, முதுமுனைவர், புலவர், இரா.இளங்குமரானார் அவர்கள், இன்றைய தமிழறிஞர்களில் தலைமைப் பொறுப்பேற்கத் தகுதியுடையவர். தந்துறை தந்த தமிழ்ப் பேரறிஞருக்கு என் பணிவான வணக்கமும் நன்றியும். இந்த வாய்ப்பினை அளித்த, தமிழாசிரியர் திரு. நெடுஞ்சேரலாதன் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அழகிய வடிவத்தில் அச்சிட்டுக்கொடுத்த மெர்க்குறி நிறுவனத்துக்கும், பதிப்பித்த, அரியலூர் யாத்திசைப் பதிப்பகத்துக்கும் நன்றி.

ம.சோ.விக்டர்.

*19.02.2018*

## பொருளடக்கம்

# I. வரலாற்றின் சிறப்புத் தன்மை



## 1. வரலாற்றின் சிறப்புத் தன்மை

கலைகளுக்கும், அறிவியலுக்கும் வரலாறே முதுகெலும்பாக அமைந்துள்ளது. காலங்கள் தோறும் ஆய்வாளர்கள் தங்கள் பட்டறிவின் பயனாக அறுபடாத தொடர்ந்த சங்கிலிபோல் நிகழ்வுகளையும், உண்மைகளையும், ஒவ்வொரு அறிவியல் கூறுகளையும் கண்டறிந்துள்ளனர். வரலாறு என்பது, கலப்படமில்லாத எளிமையான சிறப்பான நிகழ்வுகளை காலம், இடம், குழுமம் ஆகியவை இணங்க நோக்கியும் முடிவுகளைத் தாங்கியும் பட்டியலிடும் போது அறிவியல் பொதுவாகப் பதிவுகளையும், அப்பதிவு களின் வழியே நிகழ்வுகளின் முடிவுகளை விளக்குகிறது.

அறிவியல் துறையானது இரு வகைப்படும். தற்சார்புடையதும் அற்றதுமாக அவை பிரிக்கப்படும். மொழியியல் என்பது தற்சார்புடைய மற்ற கூறுகளைச் சார்ந்ததாக இருப்பது. வரலாறு உடலியல், உளவியல், மாந்தவியல் ஆகியவை முதன்மையானவையாகக் கருதப்படும். மொழியியல், விளக்கம், ஒப்பீடு, வரலாறு ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றோடு முரண்படும் போது, அறிவியலை ஆய்வு

செய்ய இயலாது. அறிவியல் ஆய்வு நிலையினின்றும், தரம் குறைவது, மிகவும் இரங்கத்தக்கது. டாக்டர். கால்டுவெல் காலத்திற்குப் பிறகு விளக்கமான சொல்லாய்வுகள் குறிப்பாக, மேலைநாடுகளில் வரலாற்றுடன் தொடர்பற்றவைகளாகவே அறியப்படுகின்றன.

## 2. தொன்மைக் காலத் தமிழ்நாட்டு வரலாற்றின் போக்கு :

ஒரு நாட்டின் வரலாறு, எழுதப்பட்டு பதிவானவைகளாகவோ, அல்லது எழுதப்படாமல் கூட இருக்கலாம். எழுதப்பட்ட வரலாறு உண்மையாக, பொய்யாக, அல்லது அரைகுறையான உண்மை நிகழ்வுகளைக் கொண்டிருக்கலாம். எழுதப்படாத வரலாறு, வழக்கில் இல்லாதவையாகவோ, வியாணகரமாகவோ வாய் உரை விளக்கமாகவோ இருக்கலாம். தமிழ்த் தேயம் குமரி நாட்டின் தோற்றத்தினின்றும் அறியப்படுவது, குமரிக் கண்ட அழிவில் பல தமிழ் இலக்கியங்கள் மறைந்து போயின. சங்க காலத்துக்கு முந்திய இலக்கியங்கள், வேதகாலத்துக்குப் பிந்தியவை, ஒரு சில நீங்கலாக கிறித்துப் பிறப்பாண்டுகளுக்கு முன்பே அழிக்கப்பட்டன. அவ்வாறு அழிக்கப்பட்டவைகளில், ஏராளமான விளக்கங்கள் பதிவாகி இருந்தன.

கிறித்துப் பிறப்பாண்டுகளுக்குப் பிறகான தமிழ் நாட்டின் வரலாற்றை, வரலாற்று ஆசிரியர்களும், ஆய்வாளர்களும் முறைப்படிப் பதிவு செய்துள்ளனர். தென்னிந்திய வரலாற்று ஆசிரியர்கள், தங்கள் நுண்ணறிவால், கிறித்துவ ஊழிக்குப் பிறகுள்ள தமிழ் நாட்டு வரலாற்றை போற்றத்தக்க அளவில் எழுதி வைத்துள்ளனர். ஆனால் கிறித்துவ ஊழிக்கு முற்பட்டுள்ளவை, செயலற்றவைகளாகவும், ஊக்கமற்றவைகளாகவும் உள்ளன. திடீரென, வடபுலத்துக்குத் திரும்பி, அனைத்தும் வேதங்களைச் சுற்றியே எழுதப்பட்டுள்ளன. அவர்கள், தலைகுப்புறக் கவிழ்ந்து, உண்மைக்குப் புறம்பானவற்றைப் பதிவு செய்துள்ளனர். தொல்தமிழனின் பெருமைகளும், தமிழ் நாட்டின் தொன்மைத்தன்மையும், அவர்களால் அறியப்பட்டிருந்தும், அவற்றை வெளிப்படுத்தவில்லை. அவர்களுடைய வழிகாட்டு

நெறிமுறைகள், சமற்கிருதத்தையும், வேதகால நாகரிகத்தையும், தூக்கிப் பிடிப்பதிலேயே இருந்தன. விதிவிலக்காக, சென்னைப் பல்கலைகழகத்தில் வரலாற்றுத்துறைத் தலைவர்களாக வெவ்வேறு கால அளவுகளில் பணியாற்றிய, பேராசிரியர் வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதரும், திரு.பி.வி.சீனிவாச அய்யங்காரும், டி.ஆர்.சேசஅய்யங்காரும் போற்றப்பட வேண்டியவர்களாயிருந்தனர்.

மற்றபடி, துறைத்தலைவர்களாக இருந்தவர்கள் அனைவரும், தங்களின் நிலைகளைத் துறந்து சமற்கிருதத்தின் பக்கமே சாய்ந்து நின்றனர். ஆரியத்தைப் பெருமலையாகவும், தமிழினத்தைச் சிறு குன்றாகவும் வெளிப்படுத்தினர். இத்தகையச் சூழலில், உண்மையான, நம்பகத்தன்மையுள்ள ஆரியருக்கு முற்பட்ட தமிழருடைய வரலாற்றை சமற்கிருதச் சார்பாளர்களால் எழுத முற்படுவது, குள்ளவாத்துகளுக்கு குள்ளநரியைக் காவல் வைத்தது போலாகிவிடும்.

### 3. பண்டைத் தமிழரின் பண்பாட்டு வரலாற்றுக்கானச் சான்றுகள் :

தமிழ் உலக மொழிகளைக் காட்டிலும், மிகத் தொன்மையான காலத்தே பண்பட்டு வளர்க்கப்பட்ட மொழியாகும். கணிக்கவியலாத காலத்தில் நிலையெற்றிருந்த குமரிக்கண்டமே, தமிழர்களின் தோற்றத் தாய் நிலமாகும். தமிழருடைய தொன்மை, பண்பாடு, நாகரிகம், ஆகியவற்றை தொல்லியல் சான்றுகளைக் கொண்டு நிறுவ முயல்வது வீணான வேலையே. ஆழ்கடல் ஆய்வியல், புவியியல் ஆகியவை கொண்டே தொல்தமிழ் நாட்டின் வரலாற்றை உறுதியாக அறிய இயலும். இச்சூழலில், தமிழ் மொழியும் அதன் இலக்கியங்களுமே, கிறித்துவ ஊழிக்கு முன்னுள்ள ஆரியர் வருகைக்கு முற்பட்ட தமிழர் வரலாற்றை வரையறுக்க உதவும் காரணிகளாக உள்ளன.

### 4. தமிழ் என்ற சொல்லின் சிறப்புத் தன்மை :

பல தமிழ்ச் சொற்களுக்கான மூலமும், வேரும், பொருளும் அறியப்படாத நிலையைப் போன்றே தமிழ் என்ற

சொல்லும், கமுக்கமாக மூடப்பட்டுள்ளது. தற்பொழுது, எவ்வகையான அச்சம் தவிர்த்தும், முரண்பாடுகளை விடுத்தும் உள்ளது, எனவும் தமிழ் என்பது நல்ல, தூய, தமிழ்ச் சொல்லே எனவும், அது தற்காலத்திலும் வழக்கில் உள்ள தெனவும், தமிழர்களின் தாய் மொழியெனவும், கடலில் மூழ்கிப் போன குமரிக் கண்டத்து, பஃறுளி ஆற்றங்கரையிலிருந்த தென்மதுரையில், முதல் சங்க காலத்திலிருந்து தொடர்ந்து வழக்கில் உள்ளதெனவும் உறுதியாகக் கூறலாம்.

வேத ஆரியர்கள் தென்னாட்டிற்குப் புலம் பெயர்ந்து வந்தபின், தமிழ், தென்மொழியெனவும், அதாவது தென்பகுதியின் மொழி யெனவும், தமிழருக்கு எதிர் மறையான வேதமொழி அல்லது சமற்கிருதம் வடமொழியெனவும், அதாவது வடபகுதியின் மொழியெனவும் விளக்கமளிக்கப் பட்டது.

தமிழ் அல்லது தமிழன் என்ற சொல், த்ரமிள-த்ரமிட-திராவிட என, இயல்பாக வட இந்தியாவில் மாற்றம் பெற்று, அது முதலில் தமிழ் மொழியையே குறித்தது. கிறித்துவ ஊழிக்குப் பிறகு, தமிழினின்றும் பிரிந்த திராவிட மொழிகள் நடைமுறைக்கு வந்து, ஒவ்வொன்றாக நிலை பெற்றன. அதுபற்றியே, சமற்கிருதமும் தமிழும் வடமொழி மற்றும் தென்மொழி என்று அழைக்கப்படுகின்றன. வடக்கிலும், தெற்கிலுமாக மேற்சிறப்பு பெற்ற இவ்விரு மொழிகளும் ஒன்றையொன்று தொடர்பு கொள்ளத் தொடங்கின. கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில், மதுரையில் தொடங்கப்பட்ட புத்த தமிழ்ச் சங்கம் திராவிடச் சங்கம் என அழைக்கப்பட்டது. கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த வைணவ ஆசாரியர் பிள்ளை லோகாச்சாரியார், தமிழ் இலக்கியங்களை திராவிட சரித்திரம் என்று கூறினார். கி.பி.18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த தாயுமானவர் என்ற தமிழ் நெறியர், தமிழை, திராவிடம் என்ற சொல்லால் தெளிவுபடுத்தி, சமய இலக்கியங்களிலும் அச்சொல்லின் பயன்பாட்டை உருவாக்கினார்.

தெலுங்கு மொழியே, தமிழினின்றும் முதலில் பிரிந்த திராவிட மொழியென்பதால்,கி.பி.ஏழாம் நூற்றாண்டில்

வாழ்ந்திருந்த புகழ்பெற்ற பிராமண ஆசிரியர் குமாரில பட்டர் என்பவர், ஆந்திர திராவிட மொழி அதாவது, தெலுங்கு-தமிழ் மொழி என்ற சொற்களைப் பயன்படுத்தி, முதன் முறையாக தமிழில் திராவிட மொழிகள் என்றவாறு அடையாளம் காட்டினார்.

தமிழில், ரகரம் என்ற எழுத்து இணைக்கப்பட்டு ழகரம் மறைக்கப்பட்டு பல்வேறு வெளிநாட்டவராலும், வடஇந்திய சமற்கிருத மொழியாளர்களாலும், எவ்வாறு எழுதப்பட்டது என்று கண்டறிய இயலவில்லை. பியூட்டிங்கருடைய அட்டவணையில், தமிரிகே (Dimirica) தைமரிகே (Dymarice) என்று தமிழ் பதிவு செய்யப்பட்டுள்ளது. புவியியல் அறிஞரான இரேவண்ணாவின் காயகவமைப்பியலில் (Cosmography), திமிரிக (Dimirica) என்ற பெயர் உள்ளதை அறிகிறோம். மேற்கண்ட சொற் பெயர்கள் அனைத்தும் தமிழகம் என்ற பெயராலேயே, அக்காலத் தமிழ் நிலம் அறியப்பட்டிருந்தது.

சீனத் திருப்பயணி யுவாங் சுவாங், ட்சி-மோ-லோ (Tchi-mo-lo) என்று தமிழகத்தைக் குறிப்பிடுகிறார். இதனை, டிமலா (Dimila) அல்லது டிமரா (Dimara) என்றும் படிக்கலாம். தேனிய விடையூழியர்கள் (Danish missionaries), லிங்குவா- டமுலிகா (Lingua-Damulica) என்று குறிப்பிடுகின்றனர். அச்சொல், தமிழ் மொழி அல்லது தமிழ் நாட்டின் மொழி என்றவாறு பொருள் கொள்ளப்படும். பாலி மொழியிலுள்ள மகாவம்சம், டா்மிலோ (Damilo) என்ற சொல்லைப் பயன்படுத்துகிறது. சில ஐரோப்பிய கட்டுரையாளர்கள், தமிழ் என்ற சொல்லை, டமுல் (Tamul) என்றும், தென்னிந்திய திராவிட மொழிகளை, டமுலியன் (Tamulian) என்றும், அவ்வப்போது குறிப்பிட்டு எழுதியிருந்தனர்.

திராவிட என்ற சொல்லின் பழமையான சொல்லுருவாக, ட்ரமில அல்லது ட்ரமிள என அறியப்படுகின்றது. கி.பி. 1573 இல் அறியப்படும் திபேத்திய தாரநாதரின், இந்திய புத்த சமயத்தின் பரப்புரை வரலாறு என்ற நூலில்,திராவிடர்களை ட்ரமிலா(Dramila) என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார். இச்சொல்லே, மீண்டும் மீண்டும் சமற்கிருதத் தொன்மங்களின்

மலையாள வரிகளின் காணப்படுகின்றது. பழையதும், பரவாலனதுமான மற்றொரு பயன் பாட்டுச் சொல்லாக, ட்ரமிட (Dramida) என்ற சொல்லே, திராவிட என்ற சொல் வழக்கானது. உண்மையில், ட்ரமில என்ற சொல்லே, தமிழ் என்ற சொல்லுக்கு நெருக்கமாகக் காணப்படுகின்றது.

சமற்கிருதம் எப்பொழுதும் உயிரெழுத்தை அல்லது உயிர்மெய் எழுத்தைப் பிரித்து, சொல்லுக்கு முதலான உயிர்மெய் எழுத்தை உடைத்து, ரகரத்தை இரண்டுக்கும் இடையில் இணைக்கும் அல்லது உயிரெழுத்தின் இறப்பைக் குறைக்கும். ரி (Ri) என்ற ஒலியை நுழைத்து தமிழ்ச் சொற்களைத் தமதாக்கிக் கொள்ள முனையும். எடுத்துக்காட்டு:

மேற்கண்ட முறைப்படியே, தமிழ் என்ற சொல், முதன் முதலாக, த்ரமிள என்று சமற்கிருதத்தில் திரிந்தது. வரலாற்று அடிப்படையில், நாம் அனைத்து சமற்கிருதச் சொற்களையும் அதன் திரிபுகளையும் எடுத்துக் கொண்டால் திராவிட என்ற சொல், தமிழ் என்ற சொல்லின் திரிபே என்பதை அறிய முடியும். டாக்டர் கால்டு வெல், இந்த ஒற்றுமையைச் சரியாகக் கண்டறிந்தார். ஆனால், தமிழினின்றே திராவிடம் திரிந்தது என்ற தோற்ற மூலத்தைக் கண்டறிவதில் தவறிழைத்தார். அவருடைய முடிவுகள் தலைகீழான தவறான முடிவுகளாக அமைந்தன. உண்மையில் அவருக்கு சங்க இலக்கியங்கள் பற்றிய புரிதலும் தெளிவும் இல்லாமையால், தமிழ், குமரிக்கண்டத்தில் தோன்றிய மொழி என்ற சிந்தனை இல்லாமற் போயிற்று. வேத ஆரியர்கள், கி.மு.2000 ஆண்டுகளில் இந்திய மண்ணில் காலடியைப் பதித்தனர். முதல் தமிழ்ச் சங்கம், கி.மு.5000 ஆண்டுகளுக்கு முன்பே பொலிவடைந்திருந்தது. அப்போது, அச்சங்க கால மொழி தமிழென்றே சொல்லப்பட்டு, அப்பெயரையே கொண்டிருந்தது. இக்காலக் கணக்குமுறை டாக்டர், கிரியர்சன் கண்டுணர்ந்து இந்தியாவின் மொழியியல் அளக்கை (Linguistic Survey) என்ற நூலில் வெளிப்படுத்தியுள்ளார்.

மிகச் சிறந்த, உயர்ந்த நாகரிகத்தைக் கொண்டு தென் கோடியில் வாழ்ந்திருந்த தமிழர்கள், தாங்களே தங்கள் மொழிக்கு பெயரிட்டுக் கொள்ள வேண்டும் என்ற

சிந்தனையில்லாமலிருந்து, ஆரிய வந்தேறிகளே சமற்கிருத மொழியில் தமிழுக்குப் பெயர் வைத்தார்கள் என்பதை நிகழ்தல் இயலாதது என அறியலாம்.

நான் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போல, தமிழ் என்ற சொல்லுக்கான வேர் இன்னும் அறியப்படவில்லை. சிலர், இதன் பொருளை லகர ஒற்றுடன் இணைக்கையில் மேலும் சிலர், இனிமை என்ற சொல்லுடனும் பொருளுடனும் தொடர்புபடுத்துகின்றனர். இவையிரண்டுமே ஏற்புடையன அல்ல. முன்னவர் உலக மொழிகளோடு ஒப்பிட்டு, அதனை முற்படு தேவை (Prerequisite) என்று கருதினர். பின்னவர், மிக உயர்ந்த சிறப்பை அளித்து தமிழைப் பேசிய மக்கள் தங்கள் விருப்பத்தை வெளிப்படுத்தினார்கள். தமிழ் என்ற சொல்லுக்கான சரியான ஏற்கக்கூடிய பொருளைப் பெற, இரண்டு கூட்டுக் சொற்களான தம்-இல் (Tam-il) அதாவது, ஒருவருடைய வீடு அல்லது இல்லம் அல்லது ஒருவருடைய நாடு என்ற பொருளைப் பெறலாம். தொடக்கத்தில், மொழி என்ற சொல்லுக்கான முன் அடைமொழியாகச் (epithet) சொல்லப்பட்டிருக்க வேண்டும். எவ்வாறெனில், வீட்டின் மொழி அல்லது நாட்டின் மொழி என்று பொருள் கொள்ளப்பட்டிருக்க வேண்டும். தமிழ் நாட்டில் பண்பட்டு விளங்கிய தமிழ் மொழி, வடக்கே தொடர்பற்று இருந்ததால், “மொழிப் பெயர் தேயம்” என்று சொல்லப்பட்டது. இதற்கு மொழி மாறிய அல்லது மாற்றம் பெற்ற நாடு என்று பொருளாகும். காலப் போக்கில் அடைமொழியே, ஒரு மொழியைக் குறித்திருக்க வேண்டும். தொடந்து படிப்பாக, இன்றைய நிலைக்கு தமிழ் வளர்ந்திருக்க வேண்டும். லகரம்,ழரகமாக மாறுவது இயல்பானதே. எ.கா. ஒப்புமை: மால்-மழை: கல்-கால்-காள்-காழ். முன்னது முகில் அல்லது மழையையும், பின்னது கறுமையைக் குறிக்கும்.

தமிழ் என்ற சொல். தொன்மைக் காலத்து அனைத்துத் தமிழ் இலக்கியங்களிலும், பொதுவாகவும், பொதுப் பெயராகவும் தமிழ் மொழியையும், அம்மக்களையும் குறித்தது. இந்திய இலக்கியங்களும் அவ்வாறே குறிப்பிடுகின்றன. தமிழ்

மொழியைப் போலவே, தமிழ் என்ற சொல்லும் மிகப் பழமையானது என்பதால், திராவிடம் மற்றும் பிற மொழிகளிலிருந்து தமிழ் என்ற சொல் பிறந்திருப்பதற்கான சூழல் இல்லை. பலரும் தமிழ்-திராவிடம் ஆகிய இரண்டு சொற்களும் வேறுபாடானவையென்பதையும், அவை ஒன்றையே குறிப்பன என்பதையும் அறிந்திருக்கவில்லை. எருதுப் பல்கலைக்கழக அகரமுதலி (Oxford) தமிழ் என்ற சொல்லை, தமிழ் நாட்டுக்குரியது எனவும் திராவிடம் என்ற சொல்லை தென்னிந்தியாவைக் குறிப்பதற்கும் பயன்படுத்துகிறது. மேலும் திராவிடம் என்பது, சமற்கிருதச் சொல்லே என்றும் கருதுகிறது.

**5. தமிழை, மற்ற திராவிட மொழிகளின்றும் வேறுபடுத்திக் காட்டுவதற்கான தேவை,**

திராவிடம் என்ற சொல், தமிழைக் குறிக்கும் மாற்றுச் சொல் என்றாலும் கூட, காலப்போக்கில் தென்னிந்திய மொழிகளைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டது. அதற்கானக் காரணம் யாதெனில், தமிழருக்கும் தென்னிந்திய மொழிகளுக்கும் இடையே, இலக்கணம் மற்றும் அடிப்படையான வேர்ச்சொற்களும் பொதுவாகவே அமைந்துள்ளன என்பதே. அதனால்தான் டாக்டர் கால்டுவெல், திராவிட என்ற சொல்லிருந்து, திராவிடம் என்ற இருபொருள் தரும் சொல்லைக் குறிப்பிடும் போது, தமிழே தென்னிந்திய மொழிகளும் தாய்மொழி என்ற கருத்து பொருந்தாமல் போகிறது.

இருப்பினும், டாக்டர் கால்டுவெல்லே, திராவிட மொழிகள் பற்றிய ஆய்வுகளின் முன்னோடி எனக் கருதலாம். அவர்காலத்தில், தமிழுக்கும் திராவிட மொழிகளுக்கும் இடையிலான தனித்தன்மை மற்றும் தொடர்புகள் பற்றி அறியவேண்டிய தேவை இருந்திருக்க வில்லை. ஆனால் தற்போது அடியிற்கண்ட காரணங்களுக்காக, அத்தேவைகள் எழுகின்றன.

1. உயர்கல்வியும் ஆய்வுகளும், திராவிட மொழியியல் தொடர்பாக டாக்டர் கால்டுவெல்லுக்கு முன்பாகவே,

தமிழகத்தில் அறியப்பட்டிருந்தன.

2. இந்திய மாநிலங்களில், மொழிகளின் வேர்ச் சொல்லாய்வுகள் தொடர்பான மறு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு, அத்துறை சார்ந்த பெருமளவிலான பங்களிப்புகள் தரப்பட்டு, மொழித் துறைகளுக்கான தனித்தன்மையும் தன்னம்பிக்கையும் வளர்க்கப்பட்டுள்ளன.

3. திராவிட மொழிகளில், தமிழ்மட்டுமே இலக்கிய வளமை கொண்டு தனித்தன்மையுடன் அறியப்படுகின்றது.

4. திராவிட மொழிகளில் தமிழ் மட்டுமே சமற்கிருதத்தை நேரிடையாக எதிர்க்கும் மனப்பான்மையும் திண்மையையும் கொண்டுள்ளது.

5. தமிழல்லாத திராவிட மொழிகள் அனைத்தும் ஆரிய மயமாக்கப்பட்டு, தமிழினின்றும் தொலைவில் சென்று விட்ட நிலையில் அவை திரும்பவும் தமிழின்பால் திரும்ப வாய்ப்பில்லை.

6. மொழியில் கலப்பற்ற தூய்மையென்பது, தமிழுக்கு உயிரும் உடலுமாக உள்ளது. இத்தூய்மை பற்றி பிற திராவிட மொழிகள் ஏறக்குறைய அறிந்திருக்கவே யில்லை.

7. தமிழ் மொழியின் தன்னிகரில்லாத எளிமையே, தமிழைத் தன்னளவில் உயர்த்திக் கொண்டுள்ளது.

மேற்கண்டவற்றின் அடிப்படையில், திராவிட மொழிகள் தங்களுக்கான பெயர்களைப் பெற்றுவிட்ட நிலையில், திராவிடம் என்பது தமிழ் அல்லாத குடும்பங்களின் மொழிகளாயின. நான் ஏற்கனவே குறிப்பட்டிருந்தபடி, ஐரோப்பியர்கள் தமிலிக் என்பதிலிருந்து தமிலிக்கன் என்றவாறு தமிழைக் குறித்தது, தமிழ் என்ற சொல்லின் திரிபே எனலாம். வடக்கில், பலவாறான நிலையில் தமிழ் பரவியபோது, தமிழன் என்பது குறிப்பாகவும், திராவிடன் என்பது பரவலாகவும் அறியப்பட்டது.

தற்காலத்தில் தமிழ்மொழி பழைய திராவிடத்துக்கு முன்பிருந்த நிலையிலிருந்து, பல மாற்றங்களைப் பெற்றுவிட்ட போதிலும், இப்போதும் திராவிட மொழிகளுக்குத் தாயாக தமிழே விளங்குகிறது. டாக்டர் கால்டுவெல் தமிழே திராவிட மொழிகளில் முப்புடைய மொழியெனக் கருதி, தமிழ் முன்னரே பண்பட்டு விட்டதெனவும், பல கூறுகளில் திராவிட மொழிகளுக்கு முகவராக உள்ளதெனவும் கூறினார். திராவிட மொழிகளின் பெருங்கூறுகளைக் கொண்டுள்ள தமிழ் மொழி, காலம் காலமாக மரபுவழியில் வளமையுடையதாகவும், பெரும்பாலான பகுதிகள் உயர்ந்தும், செழுமைபெற்றும், சரியான ஐயத்துக்கிட மற்றனவாக சொற்கள் உள்ளன. பெரு முயற்சி செய்தே தொல் திராவிட மொழியின் பேச்சு எழுத்து வழக்குத் தனிமைகளை உறுதிசெய்ய முடிகின்றது. தொல் திராவிடத்தினின்றே பல்வேறு மொழிகளிலும் விரிந்தன என்று மேலும் கூறுவார்.

இப்போது, மேற்கண்ட வரிகள் எழுதப்பட்டு 87 ஆண்டுகளாகின்றன. பழமையான நூல்கள் பற்றிய ஆசிரியரின் முடிவுகளும், கால அளவுகளும் கிடைக்காமலும் வழக்கில் இல்லாமலும் உள்ளதாக இந்திய ஆய்வாளர்களும் தொல்லியல் துறையினரும் கூறுகின்றனர். டாக்டர். கால்டு வெல்லின் காலத்தில் சங்க இலக்கியங்கள் பற்றி தமிழறிஞர்களே அறியாதிருந்தனர். சங்க இலக்கியங்கள் ஒருபெரும் நிலப்பரப்பு தென்னிந்தியாவுக்கும் தெற்கில் நிலைபெற்றிருந்ததையும், அந்நிகழ்வை அகற்ற இயலவில்லையென்றும் விரிவாகப் பேசுகின்றன. இச்செய்திகள் அனைத்தும் டாக்டர் கால்டுவெல்லின் காலத்துக்குப்பிறகே வெளிப்பட்டன. தற்கால திராவிட மொழிகள் பற்றிய ஆய்வுகளின் படி, தமிழ் திராவிட மொழிகளுக்குத் தாயாக உள்ளதென்பதையும், மற்ற மொழிகளோடு உடன்பிறந்தவள் அல்லள் என்பதையும் அறிய முடிகின்றது என மேலை நாட்டு மொழியியலாளர்களே ஏற்றுக் கொண்டுள்ளனர். தமிழுக்கும் மற்ற திராவிட மொழிகளுக்கும் உள்ள நெருக்கம் இன்று மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.



## 2. தமிழே திராவிட மொழிகளுக்குத் தாயாக உள்ளது



1. தொன்மைக் கால திராவிடத்தின் பேச்சு வழக்கு, தமிழில் சிறப்பாகப் பாதுகாக்கப்பட்டுள்ளது.

### 1. தமிழ் மொழியின் எளிமை:

முதல் நிலைச் செம்மொழியான தமிழ் மொழியின் ஒலிகளில் முப்பது அடிப்படையானவைகளாகவும், மூன்று துணைகளாகவும் உள்ளன. இவ்வொலிகளை ஒலிக்க அல்லது பேச மிகவும் எளிமையாக அமைந்துள்ளன. சிறு குழந்தைகளும், இளைஞர்களும், கல்லாதவர்களும் கூட, இவற்றை எளிமையாக ஒலிக்க இயலும். இதன் ஒலிகள் 31-ஆகக் குறைக்கப்பட்டன. இரண்டு ஒலிகள் மாற்றொலிகளாக (allophones) இ-உ என்பவை உள்ளன. இவ்வாறு, உலகின் மிகச் சிறந்த செம்மொழியான தமிழ் மிக எளிமையான மொழியாகவும் உள்ளது.

### 2. தமிழின் தூய்மையான சொற்றொடர் (Vocabulary)

தொன்மையான செம்மொழித் தமிழை, செந்தமிழ் அல்லது நிறைவான, சரியான தமிழ் என்பர். அதன் வழியில்

தான், அனைத்து இலக்கியங்களும் எழுதப்பட்டன. மக்கள் பேசுகின்ற கொச்சை மொழி, உரை நடை முறை ஆகியவை விலக்கப்பட்டன. தனித்த ஆளுமையுடன் தன் வழியில் வளர்ந்த தமிழ், சமற்கிருதத் திரிபுகளையும் நடை முறைகளையும் ஏற்கவில்லை. தன்னிடமே அறியப்பட்ட வேர்ச் சொற்களையும், கொண்டிருந்தது. முற்றிலுமாக சமற்கிருதப் பரவலைத் தடுத்து, கற்றறிந்த தமிழரின் உள்ளங்களில், நல்ல செய்யுள் நடையைத் தோற்றவித்து, அழகும் பொருளும் நிறைந்த செம்மொழியாக விளங்கியது. மற்ற மொழிகள், சமற்கிருதத்தை ஏற்றுக் கொண்ட நிலையில், தமிழ் அதனின்றும் தன்னை விடுவித்துக் கொண்டது. தமிழகத்தினின்றும் தொடர்புகள் அற்றுப் போன வடபகுதிகளில் வாழ்ந்திருந்த ஏழைகளும், கல்வியறிவற்றவர் களும், தமிழினின்றும் சமற்கிருதத் திரிபுச் சொற்களைப் பேசலாயினர். தொன்மைக் காலத்தில் செய்யுட்களும், நாட்டுப் புற வழக்குகளும் கவனமாக ஆய்வு செய்யப்பட்டுள்ளன. சமற்கிருதம், தமிழில் கலந்ததைவிட, இலத்தீன் மொழி, ஆங்கிலத்தில் பெருமளவு கலந்திருப்பதை அறியலாம்.

சமற்கிருதம், தமிழ் மொழிக்குக் கடன்பட்டிருப்பதைப் போன்றே, ஆங்கிலம், இலத்தீன் மொழிக்குக் கடன்பட்டுள்ளது. தமிழில் சமற்கிருதம் ஓரளவு கலந்திருந்தாலும், அச்சொற்களை நீக்கிவிட்டு தமிழ் தனித்தும், தூய்மையாகவும் செயல்பட இயலும். ஆனால், இலத்தீன் மொழிச் சொற்களை நீக்கிவிட்டு, ஆங்கிலத்தால் தனித்தியங்க இயலாது. ஆங்கிலோ சாக்சன் என்ற ஆங்கிலத்துக்கான முன் மொழியும் கூட, இலத்தினின்றும் பெருவாரியான சொற்களைக் கையாள வேண்டிய சூழல் இல்லை. பிராமணர்களின் சமயநூலில், சமயக் கருத்துகளை விளக்கும் பெரும்பாலான சொற்கள், தமிழ் மூலத்தையே கொண்டுள்ளன. இத்தமிழ் மூலச் சொற்களே, சமற்கிருதச் சொற்களின் பொருளை விளக்க உதவுகின்றன. சமற்கிருதச் சமய நூல்களில் பயன்படுத்தப்பட்டுள்ள பல தமிழ் சொற்கள் இன்று வழக்கிழந்து போயுள்ளன. ஆனாலும், அவை பல தமிழ்ச்

செய்யுட்களில் அறியப்பட்டுள்ளன. அவ்வாறு வழிபாட்டுச் சொற்களாக உள்ளன.

தமிழ்ச் சொற்களின் எளிமையும், வினைச் சொற்களின் வலிமையும், பிறமொழிகளின் நெருக்கத்தைத் தவிர்க்கவும், குறிப்பாக சமற்கிருதச் சொற்களை விலக்கவும் வாய்ப்புகளைத் தந்துள்ளன. சில நேரங்களில் தவிர்க்க இயலாத சூழல்களில் கலந்துவிட்ட பிற மொழிச் சொற்கள் இடைக்காலம் தொட்டு வழக்கில் இருந்தன. அருஞ்சொற்கோவையான அகராதியிலும், உருபனியலிலும் (Glossarily and morphologically) தனது தனித்தன்மை மற்றும் தூய்மையை, ஆரியத்துக்கு முன்புள்ள தமிழ் இலக்கியங்களிலும், குறிப்பாக வெள்ளக் காலத்துக்கு முன்பிருந்த பாண்டிய நாட்டிலும், தமிழ் மொழி பெற்றிருந்தது. திராவிட மொழிகளில் உள்ள சொற்களின் மாற்றங்களும் ,திரிபுகளும் தமிழ் மொழியின் சொற்களினின்றே பெறப்பட்டுள்ளன.

கி.மு.ஏழாம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டதாகக் கருதப்படும் தொல்காப்பியம், தமிழில் ஏற்கனவே அறியப்பட்டிருந்த, பல்வேறு காலங்களில், இலக்கிய வளமையைக் கொண்டிருந்த தொகுப்புகளை, மீண்டும் தொகுத்தளித்த நூலாகவே கருதப்படுகின்றது. கிறித்துக்கு 6000 ஆண்டுகளுக்கு முற்பட்டு செயல்பட்ட முதல் தமிழ்ச் சங்கத்தின் இலக்கிய மரபுகள், புதிய இலக்கியங்களை படைக்க உதவின. மூன்று தமிழ்ச் சங்கங்களுக்கான, கால இடைவெளி நீண்டிருந்தாலும், குமரிக் கண்டத்தில் நிலை பெற்றிருந்த முதல் இரண்டு தமிழ்ச் சங்கங்களும் அடுத்தடுத்து அழிந்து போனாலும், மூன்றாம் தமிழ்ச் சங்கத்தின் இலக்கியங்கள், முதலிரண்டு தமிழ்ச் சங்க இலக்கியங்களின் தொன்மையையும் முதன்மையையும் உறுதி செய்கின்றன.

திராவிட ஒப்பிலக்கண நூல் தந்துள்ளவை பற்றிய செய்திகள் குறித்த வினாக்கள் ஒருபுறம் இருந்தாலும், தமிழின்

தொன்மையான இலக்கியப் படைப்புகள் எவ்வாறு தன்னிலே வளமையும், ஈர்ப்பையும் கொண்டுள்ளன என்பது பற்றிச் சில சான்றுகளை அளிக்க விரும்புகிறேன்.

செம்மொழித் தமிழ், அனைத்துத் தகுதிகளையும் பெற்றிருப்பதோடு, தொன்மையான மொழியாகத் தன்னை வெளிப்படுத்துகின்றது. கொச்சை மொழியினின்றும், உயர்ந்த செம்மொழியாகவும், மற்ற திராவிட மொழிகளுக்கெல்லாம் சிறந்தும் மாறுபட்டதாகவும் உள்ளது. செம்மொழித் தமிழின் சொற்கள் அனைத்தும் புலவர்களால் கண்டறியப்பட்டவையன்று. மாறாக, மெல்லவும் படிப்படியாகவும் செய்யுள் இயற்றும் நிலைக்கு உயர்ந்தது. மற்ற மொழிகளைப் போல் சோம்பியிராமல், விரைந்து முன்னேறியது. தமிழின் இலக்கிய அறுவடை, அம்மொழி தொன்மையாக விளங்கியதற்குச் சான்றாகும்.

இத்தகைய பழமையான இலக்கியப் படைப்புகள் பற்றிய செய்திகள் தமிழ்க் கல்வெட்டுகளில் ஏராளமாகக் காணப்படுகின்றன. கர்நாடகத்திலும், தெலுங்கானாவிலும் உள்ள ஒவ்வொரு கல்வெட்டுகளிலும், சமற்கிருதத்தில் குறிப்பிட்டுள்ளதோடு, அவை பெரும்பாலும் தற்காலக் கல்வெட்டுகளாகவே உள்ளன. ஆனால், தமிழ் நாட்டிலுள்ள, தமிழ்க் கல்வெட்டுக் குறிப்புகள் மற்றவையை விட மிகப் பழமையானவை.

மேற்கண்ட விளக்கங்களின் படி, தமிழ்மொழி மற்ற திராவிட மொழிகளை விட முன்னைப்பக்குவம் பெற்று மற்ற திராவிட மொழிகளுக்கு முன்னோடியாய் அமைந்து, பல்வேறு சொற்களை அவற்றிற்கு வழங்கித் துணை செய்ததை அறியலாம். கன்னட, தெலுங்கு, மலையாள மொழிகளின் இலக்கியப் படைப்புகள், கி.பி.9,10,14 ஆம் நூற்றாண்டுகளில் அறியப்படுகின்றன.

**3. மிகவும் வளம் செறிந்த சொல்லடைவுகளைச் கொண்டுள்ள தமிழ்மொழி:**

தமிழின் பெருமைகளையும் சிறப்புகளையும் உணர்த்த, அதன் வளமை, செழுமை எண்ணற்ற சொற் தொகுதிகளைக் கொண்டிருப்பதும் வகைவகையான இலக்கண நெறி முறைகளைக் கொண்டிருப்பதும் செந்தமிழின் பெருமைகளுக்குச் சான்றுகளாகும். தமிழில் வழக்கிழந்து போன இலக்கண விதிகளும், சொற்திரிபுகளும், பொருத்தமின்மை களும் ஏராளமாக உள்ளன. ஆனாலும், திராவிட மொழிகளின் அகராதிகளை ஆய்வு செய்யும் போது அம்மொழிகளின் சொற்கள் தமிழோடு கொண்டுள்ள தொடர்புகளை தமிழறிஞர்களுக்கு தெளிவுபடுத்துகின்றன. தமிழ் மொழியிலுள் சொற்தகுதிகள், தமிழுக்கே உரியதாகவும், தமிழோடு பொருந்தியதாகவும் இருப்பதோடு, தமிழில் மட்டுமே அவை பயன்படுத்தப்படுகின்றன. மேலும், தமிழ்ச் சொற்களே தெலுங்கு, கன்னடம் போன்ற மொழிகளின் வளமைக்கும் அடிப்படைகளாக உள்ளன. தமிழில், பொதுவாக இல்லத்தைக் குறிக்கும் வீடு என்ற சொல், தெலுங்கில், இல்-இல்லு எனப்படுகிறது. தமிழில் அறியப்படும் மனை, மனெ என்று கன்னடத்தில் உள்ளது. குடி என்ற தமிழ்ச் சொல், அதே ஒலியில் சமற்கிருதம் மற்றும் பின்லாந்து மொழியிலும் காணப்படுகிறது. தமிழ் இலக்கணமும் சொல்லடைவுகளும், மிகவும் பரந்து விரிந்தஅளவில், திராவிட மொழிக் கூறுகளின் வேர்களாகவும் உள்ளன. எனவே, தமிழ் இலக்கியப் படைப்புகள், மற்ற திராவிடப் படைப்புகளுக்கு முற்கால அளவில் படைக்கப்பட்டிருந்தன என அறியலாம்.

**4. தற்சார்புடைய தமிழ் மொழியும், இலக்கியங்களும்:**

இந்திய மொழி ஆய்வாளர்கள் சமற்கிருதத்திலிருந்தே திராவிட மொழிகள் கிளைத்தன என்று கருதினர். வளர்ச்சியடையாத திராவிட மொழிக் குடும்பம் பற்றிய

புரிந்துணர்வு அவர்களுக்கு இருந்திருக்கவில்லை. திராவிட மொழிகளில் அனைத்து சொற்களும், சமற்கிருதச் சொற்களே எனக் கருத இயலாது. ஒரு சிலச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அச்சொற்களும், அடிப்படையான சொற்களாக அமையாமல், அழகான மேலெழுந்த வாரியான பொருளையுணர்த்தும் சொற்களாகவே உள்ளன. தெலுங்கு மொழியை பொறுத்தவரை, சமற்கிருதப் பிடிப்பிலிருந்து விலக முயல்வது கடினமாகவுள்ளதென்பது உண்மை நிலையாகும். தெலுங்கைப் போலவே கன்னடமும் ,மலையாளமும் அவ்வாறே உள்ளன. இம்மூன்று மொழிகள் உள்ளிட்ட திராவிட மொழிகள், சமற்கிருத்தினின்றும், பெருவாரியான சொற்களைக் கடன் பெற்றுள்ளதால், தங்களை சமற்கிருத்தினின்றும் விடுவித்துக் கொள்ள இயலாத நிலை உள்ளது. தமிழ், உயர்வான பண்படுத்தப்பட்ட மொழியாதலால், திராவிட மொழிகளைப் போல் அல்லாமல், சமற்கிருதத் தொடர்புகளைத் துண்டித்துக் கொள்ள இயலும். மேலும், தமிழ் தனித்தும், தன்னளவில் நின்று வலம் பெறவும் முடியும். தேவைக்கேற்ப, அவ்வாறே தனித்தும் இயங்கி வருகின்றது.

ஆரியத்துக்கு முன்பு அறியப்பட்ட தமிழ் இலக்கியங்களில் காணப்பட்ட கலைச்சொற்கள், பொதுச் சொற்கள் ஆகியவை சிந்தனைத் தெளிவு பெற்றும், தூய்மையுற்றும், சிறப்புற்றிருந்தன. அவையாவும் வழக்கிழந்து போயின அல்லது அழிக்கப்பட்டன. பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் சமற்கிருதக் கலப்பின்றி தனித்தன்மையுடன் விளங்கின என்பதற்கு நிறையவே போதுமானச் சான்றுகள் உள்ளன.

**தமிழின் வியப்புக்குரிய தனித்தன்மைகளாவன.**

1. இயல் ,இசை, நாடகம் என்ற முத்தமிழ்.
2. இலக்கணப் பகுதிகள் மற்றும் வரிவடிவ இயல்.
3. தமிழ்மொழியின் தொடரியல், அணியிலக்கணம், அதன் பகுப்புகள்.
4. அகத்திணை, புறத்திணை.

5. ஐந்நிலப் பிரிவுகளான குறிஞ்சி,முல்லை, மருதம், நெய்தல், பாலை.

6. அடிப்படைச் சீர்களைக் கொண்ட வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா மற்றும் அதன் வகைகள்.

7. எட்டு வகையான செய்யுள் இலக்கணம் பொதுவில் அவை, வனப்பு,அம்மை, அழகு, தொன்மை, தொள், விருந்து, இயைபு,புலன், இழைபு எனப்படும்.

8. தொல்காப்பியம் குறிப்பிடும் 20 ஒத்திசை நடைகள்.

9. அவிநயம் குறிப்பிடும் 100 வகையான பல்வேறு நடைகள்.

10. அருணகிரி நாதர் குறிப்பிடும் பல்வேறு நிலைகளிலான சொல் நடைகள்.

**5. திராவிட வரலாற்றை மறு கட்டமைப்பு செய்ய, தமிழில் மட்டுமே சான்றுகள் உள்ளன.**

சிலப்பதிகாரமும் புறநானூறும் தரும் செய்திகளும், அடியார்க்கு நல்லார் உரையும், கடலில் மூழ்கிப் போன பாண்டிய நாட்டில், பஃறுளியாறு பாய்ந்தோடினது பற்றியும், பாண்டியநாடு 49 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது பற்றியும், முதல் தமிழ்ச் சங்கம் நடைமுறையில் இருந்தது பற்றியும் விரிவாகத் தெரிவிக்கின்றன. முறையான திராவிடர் வரலாறு தொகுக்கப்படாத நிலையில், அவ்வரலாற்றைத் தொகுப்பதற்கான சரியான செய்திகள் திராவிட இலக்கியங்கள் எவற்றிலும் காணப்படவில்லை. மாறாக, தமிழில் மட்டுமே அச்செய்திகள் உள்ளன.

**6. இந்தியா என்றால் அது தென்னிந்தியாவே.**

1. நிலவியல் அடிப்படையில், தென்னிந்தியாவே இமயமலைப் பகுதிகளுக்கு மூப்புடையது. தென் கண்டமான கோண்டுவானா பிளவுபட்டுப் பல்வேறு நிலப்பிரிவுகளான போது, அப்பிரிவுகளும் பெயர்ச்சி கண்ட நிலையில், தென்னிந்திய தீவக்குறை சிறிதளவே சிதைக்கப்பட்டாலும், வலிமையான கண்ட நிலைப்பகுதியாகத்

தனித்திருந்தது. அக்கால முடிவில், தொன்மையான கடற்பகுதி வடஇந்தியா திபேத், சீனா ஆகிய பகுதிகளில் அறியப்பட்டிருந்த தெத்திசு (Tethys) என்ற கடற்பரப்போடு இணைந்திருந்தது. கோண்டு வானாவின் பிளவுபட்ட நிலப்பரப்பில், தென்னிந்தியா தன்னளவில் நாயமாகத் திகழ்ந்ததோடு மடகாசுக்கர், தென் ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா, என்றவாறு ஒரு பக்கமும், மலேசியா முதல் ஆசுத்திரேலியா வரையிலான தீவுத்திட்டுகள் மறுபுறமும் அமைந்திருந்தன. கோண்டுவானா நிலத்தின் அடிப்பகுதிகள் அல்லது தாழ்வான பகுதிகள் கரியம் நிறைந்து 300 மில்லியன் ஆண்டுகள் அளவில் காணப்பட்டன.

கோண்டுவானாவிலிருந்த பாறை அமைப்புகள் ஆசுத்திரேலியா, தென் ஆப்பிரிக்கா, தென்அமெரிக்கா, அண்டார்டிக்கா ஆகிய நாடுகளின் பாறை அமைப்புகளோடு ஒற்றுமைபடுத்தப்படுகின்றன. இதன் அடிப்படையில், மேற்கண்ட நாடுகள் இந்தியப் பெருங்கடல் பகுதிகளை மையமாகக் கொண்டு இந்தியாவை நடுவே கொண்டு தென் அமெரிக்காவையும், மலேசியா ஆசுத்திரேலியத் தீவுகளையும் இணைத்து பெரும் நிலப்பரப்பாக விளங்கின. விலங்கியல் தொடர்பான செய்திகள், இந்தியாவின் பெருமை சேர்க்கும் விலங்கினங்கள், மைய ஆப்பிரிக்கா, மடகாசுக்கர் பகுதி விலங்கினங்களோடு ஒற்றுமைப்படுவதாகக் கூறுகின்றன. இந்திய- ஆப்பிரிக்கா நிலவியல் கூறுகள், ஒன்றையொன்று ஒற்றுமைப்படுவதாக் கூறுகின்றன. இந்திய- ஆப்பிரிக்க நிலவியல் கூறுகள், ஒன்றையொன்று ஒற்றுமைப்பட்டு இருப்பதாகக் கூறப்பட்டாலும், சில மாற்றுக் கருத்துகளும் உள்ளன. ஒரு கொள்கையின்படி, கரிமம் நிறைந்திருந்த காலம் முடிவுற்ற போது, ஆசுத்திரேலியா முதல் தென் ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா வரை, தென்னிந்தியத் தீவக்குறையை மையப்பகுதி, பெருங்கண்டம் இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளது. மற்றொரு கொள்கையின்படி, மேற்கண்ட பகுதிகள் இரு பெருங்கண்டங்களாகப் பிரிந்திருந்தாகவும், இடையில்

கடற்பகுதிகள் இருந்ததாகவும் கருதப்படுகின்றது. பிற்காலத்தில், பல நிலப்பகுதிகள் கடலுள் மூழ்கியதால் வங்கக்கடலும், அரபிக்கடலும் தோன்றி தென்னிந்தித் தீவக் குறையைத் தோற்றுவித்ததாகவும் கூறுவர்.

**2. ஆரியர் வருகைக்கு முற்பட்ட நாகரிகம் தென்னிந்தியாவில்தான் உள்ளது.**

நீண்ட நாட்களாக வடக்கும், சமற்கிருத நூல்களும், இந்திய-ஆரியச் சிந்தனைகளும் கருத்தில் கொள்ளப்பட்டு வருகின்றன. ஆரியரல்லாதவரின் வரலாறு, கவனத்தில் கொள்ளப்பட வேண்டிய நேரம் இது.

இந்தியாவின் அரசியல் வரலாற்றை விரிவாகவும் விளக்கமாகவும் முன் வைக்கும் வகையில் இந்நூலை நான் அளிக்கின்றேன். அடியிற்கண்ட பரிந்துரைக்கப்பட்ட ஆய்வுகளை, இளமையிலேயே இயற்கை எய்திய அறிஞரின் இந்திய வரலாற்றுப்பார்வையை அடிப்படையாகக் கொண்டு, அவற்றில் தகுதியானவற்றைத் தேர்வு செய்து, அளித்துள்ளேன். அவை வருமாறு;

**உண்மையான இந்தியா தென்னிந்தியாவே :**

சமற்கிருத நூல்கள் வாயிலாக, இந்து தத்துவத்தையும், சமற்கிருத மொழியின் வரலாற்றையும் சமற்கிருத நூல்கள் வாயிலாக, இந்தியாவின் மேல்பகுதி சிக்கல்கள் நிறைந்ததாகவும், தவறான முடிவுகளைக் கொண்டதாகவும் உள்ளதை அறியலாம். விந்தியத்துக்குத் தெற்கில் உள்ளதும், இந்திய தீவக் குறையுமான தென்னிந்தியாவே, இப்போதும் உண்மையான இந்தியாவாக உள்ளது. இங்கே பெருவாரியான மக்கள் ஆரிய கொள்கைகளுக்கும், மொழிகளுக்கும், சமூகக் கூட்டமைப்புக்கும் மாறுபட்ட நிலையில், தங்களின் தொன்மையான மரபுகளைப் பேணிக் காத்து வருவதோடு, அவற்றைத் தக்க வைத்துக் கொண்டும் உள்ளனர். வரலாற்று ஆய்வாளர்கள், ஆரியம் இந்தியாவில் பரவலாக

அறியப்பட்டிருந்ததாகக் கூறினாலும், தென்னிந்தியா வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம், அதனின்றும் முறித்துக் கொண்டுள்ளதையும், தென்கோடியில் அத்தன்மை வளர்ந்துள்ளதையும் அறியலாம்.

அறிவியல் சிந்தனையுள்ள வரலாற்று ஆசிரியர்கள், தங்கள் ஆய்வுகளை, கங்கைச் சமவெளியிலிருந்து தொடங்கியதை விடுத்து கிருட்டிணா, காவிரி, வைகை ஆறுகளின் சமவெளிகளில் தொடங்கியிருக்க வேண்டும். ஆனால் தற்போது, வடக்கிலிருந்து வரலாற்றைத் தொடங்குவதே, காலக் கோலமாக உள்ளது.

உண்மையான இந்தியாவின் தொன்மையான வரலாறு, சமூகக் கட்டமைப்பையும், காலக் கோலத்தில் பதிவு செய்யப்பட்ட தவறான அரசியல் நிகழ்வுகளையும் பெருமளவில் சுட்டிக் காட்டும் வகையில் எழுதப்பட வேண்டும். கற்றறிந்த பேராசிரியர்கள் அவ்வாறு தங்கள் பணிகளைத் தொடங்கினால், அவர்கள் தெற்கிலிருந்தே இந்திய வரலாற்றைத் தொடங்க வேண்டும்.

## 7. தமிழர்களே, தென்னிந்தியாவின் தொன்மைக் குடிகள்:

ஓரிடத்தைத் தாயகமாகக் கொண்டு, அம்மண்ணின் மக்களாக வாழ்ந்து வந்தாலும், மற்றவர்களுடன் அவர்கள் தொடர்பு கொண்டாலும், அவர்களின் பண்பாடும் நாகரிகமும், அம்மண்ணுக்கேற்ற சூழலையும், தன்மைகளையுமே கொண்டிருக்கும். அம்மக்கள் வாழ்ந்து வரும் நிலவியலைச் சார்ந்தே அவர்களின் வாழ்க்கை முறை அமைந்திருக்கும். வரலாற்று நிகழ்வுகளால் அவை மாறுபடுவதுமில்லை, கணிக்கப்படுவதுமில்லை. வரலாற்று நிகழ்வுகளாக, வெளிநாட்டவரின் படையெடுப்பு, வணிகம், அல்லது உடன்பாட்டு முறையில் ஏற்கப்படுவது என்று அறியப்படும். தமிழ் நாட்டில் மாந்தவியல் வளர்ச்சி ஒவ்வொரு நிலையிலும், தொன்மைகாலம் தொட்டு, நிலவியல் சார்ந்த சூழல்களில்

எவ்வாறு வளர்ந்தது என்பதை தற்போது அறிய முற்பட்டுள்ளோம். பல வரலாற்று ஆய்வாளர்கள், இந்திய வரலாற்றின் தொன்மையைத் தொடுவது போல் தோன்றினாலும், இந்தியாவின் வளமான நிலங்கள், நிலத்திற்கடியிலுள்ள வியக்கத்தக்க கனிம வளங்கள் நிலத்தில் என்றும் குறைவுபடாத மாவினங்கள், மரவினங்கள் தட்பவெப்பநிலை, இந்திய நிலப்பரப்பு குறிப்பாக தீவக் குறையின் சிறப்புகள், மக்களை அச்சூழல்களுக்கும் பொருத்தும் சிறப்புகள். குறிப்பாக, தொன்மைக் கால அளவிலான வளர்ச்சி, பெருக்கம், எல்லை கடந்து வந்த வெளி நாட்டினரின் நுழைவு, அவர்களால் அறிமுகம் செய்யப்பட்ட பல்வேறு கூறுகள், இந்திய வரலாற்றுப் பக்கங்களை அழகு செய்கின்றன என்பதை முற்றிலுமாக வெளிக்கொணரவில்லை.

மேலும் சிலர் தொன்மைக் காலத் திராவிடர்கள். வட மேற்கு மற்றும் வடகிழக்குக் கணவாய்கள் வழியே இந்தியாவுக்கு வந்தவர்கள் என்றும், எப்போதும் சொல்லப்படும் தங்கள் கொள்கைப்படி காவிரி, வைகை ஆற்றுச் சமவெளிகளில் குடியேறினர் என்றும் கூறுகின்றனர். இதற்கான முதன்மையான அடிப்படைக் காரணம் என்னவெனில், வடகிழக்குப் பகுதியில் பேசப்படும் பிராகூய் என்ற மொழியிலுள்ள பல சொற்கள், தமிழ்ச் சொற்களோடு தொடர்புடையனவாக இருப்பதே. இதன்மூலம் தெரியவருவது யாதெனில், தமிழோ, தமிழுடன் தொடர்புடைய மொழியோ, வடமேற்கு மாநிலங்களில், தொன்மைக் காலத்திலிருந்து பேசப்பட்டு வருவதேயாகும். இந்நிலை, மற்றொரு எடுத்துக் காட்டாலும் நிறுவப்படும். தற்காலத்தில் வடஇந்தியாவில் பேசப்படும் மொழிகளும், சமற்கிருதம் குவாதி போன்றவையும், அடிப்படையான இலக்கணக் கட்டமைப்புகளிலும், தொடரியல் மொழி நடைகளிலும், திராவிட மொழிக் குடும்பத்தை ஒத்திருக்கின்றன. ஒரு திராவிட மொழியின் சொற்றொடர்கள், மற்றொரு மொழிக்கு மொழி மாற்றம்

செய்யப்படும் போது, பயன்படுத்தப்படும் சொற்கள், பெரும்பாலும் திரிபுபடாமலும், உடைக்கப்படாமலும் உள்ளதை அறியலாம். இந்த உண்மைகள் புலப்படுத்துவது யாதெனில், இந்தியாவில் வாழ்ந்திருந்த மக்கள், தமிழையோ, தமிழோடு தொடர்புடைய மொழிகளையோ பேசிவந்திருப்பதால், இந்தியாவின் தொன்மக்குடிகள் அனைவரும், வெளி நாட்டினின்றும் புலம் பெயர்ந்தவர்கள் அல்லர் என்பதை அறியலாம். ஒரு சிறு உண்மையான தரவு கூட, இந்தியப் பழங்குடியினர், வெளி நாட்டவரே எனக் கருத அல்லது தூண்டப்பட இடமளிக்கவில்லை.

மேலும் தென்னிந்தியாவில் அறியப்பட்டுள்ள, பழங்காலக் கலைப் பொருட்களும் மற்ற தொல்லியல் சான்றுகளும், தடைப்படாத நாகரிக வளர்ச்சியை உறுதிப்படுத்துகின்றன. பழைய கற்காலம் முதல் அண்மைக் கனிமக் காலம் வரை எந்தப் பேரழிவுகளாலும், அவை சிதைக்கப்படவில்லை. அக்கால அளவில் தமிழ் மொழியே, தொடர்ந்து தனது வளர்ச்சிப் பாதையில் நிலைத்திருந்தது. அந்நாகரிகத்தின் செயல்களும், வெளிப்பாடுகளும், ஒவ்வொரு கால அளவிலும், வழக்குகளிலும், வழக்காறுகளிலும், தமிழ் இலக்கியங்களிலும், நிறைவாக, வளமையுடன் வள்ர்ந்துள்ளன என்பதை அறியலாம்.

முன்னைத் திராவிடர்கள் பற்றியும் முன் திராவிடர்கள் பற்றியும், 20 ஆம் நூற்றாண்டில் பழங்கதையான கொள்கை இருக்கின்றது. தென்னிந்தியாவின் தொல்லியலாளரோ அல்லது வரலாற்று ஆசிரியரோ, பண்பாட்டுக் கூறுகளைக் கொண்ட மக்கள், ஒரு காலத்திலிருந்து மற்றொரு காலத்துக்கு, பேரழிவுகள் மற்ற காரணங்களால் புலம் பெயர்ந்தது பற்றி, தெளிவான ஏற்கத்தக்கச் சான்றுகளைத் தர இயலவில்லை. ஆனால் அதற்கு மாறாக பழங்கற்காலம் தொடங்கி, இரும்புக் காலம் வரை, தொடர்ச்சியான பண்பாட்டுக் கூறுகள், அமைதியாக வழிவந்துள்ளதைப் பற்றிச் சார்புடையச் செய்திகள் உள்ளன. தொல்லியல் துறைச் சார்ந்த கண்டுபிடிப்புகள் பண்பாட்டு

வளர்ச்சியில் ஓர் ஒழுங்கு காணப்படுவதை உணர்த்துகின்றன.

காட்டு மக்களும், மலைப் பழங்குடி மக்களும், திராவிட இனத்துக்கு மாறுபட்டவர்கள் என்று சொல்லப்படுவதை, தவறானது என அறிந்திருக்கிறோம். தக்காணத்து மாந்தவியல் பற்றி ஆய்வு செய்யும் மாணவர்கள், ஐந்து வகையான பண்பாட்டுக் கூறுகள் புதிய கற்காலம் தொடங்கி, இந்நிலத்தில் நிலைப் பெற்றிருப்பதை அறிந்துள்ளனர். இம்மக்களில் வேட்டையாடுதலையும், மீன் பிடித்தலையும் மேற் கொண்டவர்கள் புதிய கற்காலத்தின் இறுதியில் அத்தொழில்களை மேற்கொண்டனர். காடுகளிலும், கடற்கரைப் பகுதிகளிலும் காலம் காலமாகத் தொடர்ந்து வாழ்ந்து வந்த மக்கள், தங்கள் வாழ்க்கை முறைகளையும், அறிவுத் திறனையும் வியக்கத்தக்க அளவில் விரித்துக் கொண்டார்கள். நிறச் சேர்க்கைப் பற்றி நாம் இடர்ப் படவில்லை. அவ்வாறான நிறச் சேர்க்கை, தட்ப வெப்பச் சூழல், செய்த தொழில் ஆகியவை பிறகாரணங்களால் மாறுபடுகின்றன.

வேளாண்மையின் அறிமுகம் முன் செய்த தொழில்களை விடுத்து உருவானதாகக் கருதவியலாது, கருதவும் கூடாது. மக்கள் தங்கள் வாழ்க்கைக் கேற்ற சூழலில் தங்கி, தங்கள் தொழிலையும் வாழ்க்கை நெறிகளையும் வளப்படுத்திக் கொண்டனர். மற்றும் தொழில்கள், வேளாண் மக்களாகிய வெள்ளாளர், காராளர், ஆகியோரால் மேற்கொள்ளப்பட்டன. முல்லை நிலத்து மக்களாகிய ஆயர்கள், கால் நடைகளை வளர்த்தல், பாதுகாத்தல் ஆகிய தொழிலைச் சார்ந்திருந்தனர். பாலை என்ற நிலம், தனியாக அறியப் படவில்லை யென்றாலும், அந்நில மக்கள், குறிஞ்சி மக்களுடன் கலந்திருந்தனர், கால் நடை வளர்ப்பு என்பது, பொதுவான சமூகத் தொழிலாக வேடர்களாலும், மீனவர்களாலும், வேளாண்மக்களாலும், இடையர்களாலும், நிலை பெற்றிருந்தது. எனவே, குறிஞ்சி, முல்லை மக்களை முன் திராவிடர்கள் என்றோ, நடுத்தரைக் கடற்பகுதி மக்கள் என்றோ, மற்றவர் என்றோ கருத

வேண்டியதில்லை. நடுத்தரைக் கடல் பகுதியில் வாழ்ந்திருந்த மக்கள், இந்தியத் தீவக் குறையின் பழங்குடி மக்களே யாவர். திராவிடத்தின் ஒரு பகுதி கடலில் மூழ்கிய காலத்துக்கு முன்பு, தென்னிந்தியாவும் ஆப்பிரிக்காவும் இணைந்திருந்தன. அப்போது, கங்கைச் சமவெளி தோற்றம் பெற்றிருக்கவில்லை.

உலக நிலப்பரப்பில் சிறு கூறாக அறியப்படும் விந்திய மலைத் தொடருக்குத் தெற்கில் அறியப்படும் தென்னிந்தியாவில், இயல்பாக உருவான ஐந்து நிலப்பகுதிகளும், ஒன்றையொன்று சார்ந்தே இருந்தன. இதனால், இங்கு மக்கள் பெருக்கமும், மாறுதல்களும், இயற்கையில் கிடைத்த உணவுப் பொருட்களும், பல படிநிலைகளில் வைத்து நிலப்பகுதி மக்களும், தங்கள் வாழிடங்களை மாற்றிக் கொள்ளுதலும், நிகழ்வுற்றன என்பதை எளிதாகப் புரிந்து கொள்ள இயலும். வேடர்களும், சூழல்களுக்கேற்றவாறும், தங்களை மாற்றிக் கொண்டு மாந்த நாகரிகத்தை வளர்த்தனர். இவ்வளர்ச்சி, உலக வரைபடத்தின் ஒரு குறுகிய நிலப்பகுதியில் மேற்கண்டவை நிகழ்வுற்றன. இந்தியாவிற்கு வெளியே இவ்வைந்து நிலங்களும் மிகவும் பரந்த அளவில் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக முல்லைநிலம், ஸ்டெப்பி வெளியாக கார்பத்தியம் முதல் அல்டேயில் மலையடிவாரம் வரையிலும், குறிஞ்சி பிரெண்ணே மலைத் தொடர் முதல் இமயமலை வரையிலும் நெய்தல், நடுத்தரைக் கடலின் கடற்கரைப் பகுதியின் மற்றும் இந்திய அட்லாண்டிக் கடலையொட்டிய பகுதிகளிலும், பாலை, சகாராவின் தொடர்சியாக, அரேபியா, பாரசீகம், மங்கோலியா போன்ற இடங்களிலும் அறியப்படுகின்றன.

எனவே, தென்னிந்திய மக்கள் நாம் குறிப்பிடும் திராவிடர்கள், புதிய கற்காலத்தின் வழிவந்த மக்கள் என்றும், அழுத்தமான பண்பாட்டுக் கூறுகளையும் நாகரிகத்தையும் கொண்டு, தனித்தன்மையுடன் அவற்றை வளர்த்தெடுத்தவர்கள் என்றும், காலங்கள் தோறும் அவற்றைப் பாதுகாத்து வந்தவர்கள் என்றும் கூறலாம். இவர்கள், முற்றிலும் மண்ணின் மக்களேயன்றி, வெளிநாட்டவரல்லர் என்க.

## ૩. பேச்சு வழக்கிலான தமிழ், தமிழ் நாட்டின் தென் கோடியில், திருத்தமாகப் பேசப்படுகின்றது



1. தொன்மைக் காலத்துத் தமிழ் ஒலிப்பு, வேளாண் மக்கள் வாழும் திருநெல்வேலியில் சிறப்பாகவும், நல்ல முறையிலும் பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

திருநெல்வேலியிலுள்ள வேளாண் மக்களின் பேச்சு மற்றும் ஒலிப்பு, மாறுபடாத தொன்மைத் தமிழன் பேச்சாகவும், ஒலிப்பாகவும் உள்ளது. ஒரு சொல்லைத் தொடர்ந்து ஒலிக்க நேர்ந்தாலும், ஒலியில் மாற்றம் இன்றியே கூறுவர். சமற்கிருதத்தினின்றும் சில சொற்களைச் சொல்ல நேர்ந்தாலும், நன்னூல் விதிப்படியே, ஜாதியைச் சாதி என்றும், சாட்சியைச் சாச்சி என்றும் கூறுவர். உண்மையில், இச் சொற்களின் தன்மைப்பற்றி அவர்களுக்குத் தெரியாது. கடினமான, தேவையற்ற, சமற்கிருத ஒலிகளைக் கூட, மென்மைப் படுத்திவிடுவர். இவற்றையெல்லாம் எவரும் சொல்லிக் கொடுப்பதில்லை. இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் யாதெனில், தொன்மையான நிலமும், தொன்மைக் காலத் தமிழும் அவர்களோடு இணைந்திருப்பதே. மேலும், ஆரியத்தின் தாக்கங்களிலிருந்து முற்றிலுமாக அவர்கள் விடுபட்டுள்ளனர் எனவும் அறியலாம்.

## 2. வளமையும் தூய்மையுமான திருநெல்வெலித் தமிழ்

தமிழ் நாட்டிலுள்ள மாவட்டங்களில், மாவட்ட நிலப்பகுதிகள், தமிழில் பேச்சு வழக்குகளை மாற்றிவிடுவதால், மாவட்டம் அமைந்துள்ள பகுதியும், அதற்கு ஒரு காரணமாக அமைந்து விடுகின்றது. ஆனால், எவ்வகையான புறத்தாக்கங்களும் இல்லாத தென் மாவட்டமான திருநெல்வேலி, தமிழில் வளமையும் தூய்மையும் நிறைந்ததாக் காணப்படுகின்றது. சில எடுத்துக்காட்டுகள்:

### 1. வளமைச் சான்றுகள்:

| | | |
|---|---|---|
| இலக்கு | : | நிலையான இடம். |
| இறங்கொற்றி | : | ஒத்திக்கு விடப்பட்ட நிலம். |
| ஊருணி | : | குடிநீர்க் கண்மாய் அல்லது குளம். |
| காம்புதல் | : | வலுவிழத்தல், நீண்ட நாள் பாதுகாக்கப்பட்ட உணவுப்பண்டம். |
| நின் | : | உங்கள் |
| தக்கணை | : | சரிக்கட்டிப் பொருத்தல் |
| வாழ்வரசி | : | கணவனுடன் வளமாக வாழும் மணமான பெண். |

தவசங்களைத் தூற்றுதல் தொடர்பான நான்கு நிலைகள்.

நாவுதல். கொழித்தல், புடைத்தல், தெள்ளுதல், இவையனைத்தும் ஒரு செயலையே குறிக்கும், திருநெல்வேலித் தமிழ்ச் சொற்களாகும்.

### 2. தூய்மைச் சான்றுகள் :

| திருநெல்வேலி | வடமாவட்டங்கள் |
|---|---|
| உருமம், உச்சிவேளை | மத்தியானம், (சமற்கிருதம்) |
| தவசம் | தானியம் (சமற்கிருதம்) |
| துப்புறவு | சுத்தம் (சமற்கிருதம்) |
| பண்ணையர் | மிராசுதார்(உருது) |
| பகுடி | கிசுத் ( உருது) |
| மிதி வண்டி | சைக்கிள் (ஆங்கிலம்) |
| வங்கி | பிச்சுவா (உருது) |

**வேளாண் தொடர்பாவன:**

தேறி - மணற்குன்று

காயல் - குறுங்குடா

காடைக்கண்ணி- காடைக் கண்ணையொத்த நிறம் கொண்ட தவசம்.

குதிரைவாலி : குதிரைவால்

மேற்கண்ட தவசங்கள், திருநெல்வேலிக்கு அருகிலுள்ள மாவட்டங்களிலும் உண்டு, நடுமாவட்டங்களிலும் வட மாவட்டங்களிலும் இல்லை.

திருநெல்வேலியின் வேளாண் தமிழில், மிகச்சிறந்த வளமையும், மரபுக் கூறுகளும், சொற்களும், சொற்களின் இணைகளும், அழகான பழமொழிகளும் நிறைந்துள்ளன.

தமிழ் இலக்கிய மரபுகள் வழியே அறியப்படும் தொன்மையான வாழ்க்கைப் பதிவுகள்.

புலநெறி வழக்கம் என்ற வியப்புக்குரிய சொல்லாட்சி முறை, தமிழில் தொடக்ககாலத்திலிருந்து பின்பற்றப்பட்டு வருகின்றது. வழமை மாறாத கூறுகளும், இலக்கிய மரபுகளும், பழைய கற்காலம் தொட்டு, புதிய கற்காலம் வரையிலான வாழ்க்கை முறை பற்றிய சில செய்திகளை விளக்குவதாக உள்ளன.

தமிழரின் தொன்மையான வாழ்வியல் கூறுகளை, தமிழ் இலக்கியங்களின் வாயிலாக அறிய முடிகின்றது. தமிழ்நாட்டில், இயற்கையாகவே அமைந்துள்ள ஐந்து புவியியல் பகுதிகளில், மலை நிலத்தின் வேடர்களும், பாலையில் வழிப்பறிக் கொள்ளையரும், காட்டுப்பகுதிகளில் இடையர்களும், சமவெளிகளில் வேளாளர்களும், கடற்கரைப் பகுதிகளில் மீனவர்களும் வாழ்ந்திருந்தனர்.

இந்த வாழ்க்கை முறை ஐயத்துக்கிடமின்றி, நாகரிக வளர்ச்சிக்கு முற்பட்டது. இம்முறையே, தொன்மையான மண்ணின் மைந்தர்களாக, ஐந்நிலத்தாரையும் அடையாளப்

படுத்துகின்றன. தமிழர்கள் அல்லது திராவிடர்கள் என்று சொல்லப்படும் தமிழ் நிலத்தின் மக்கள் தங்கள் வட இந்தியத் தாயகத்திலிருந்து ஆரியர்களால் துரத்தப்பட்டார்கள். அவர்களே ஐந்து நிலப் பிரிவுகளிலும் குடியேறினார்கள் என்பதற்கானச் சான்றுகள் இல்லை.

ஐந்து நிலப்பிரிவுகளில், தொன்மைக் காலத் தமிழர்கள், தொடக்கத்தில் மலைப்பகுதிகளிலேயே வாழ்ந்திருந்தனர். பின்னர் ஒரு நிலத்தினின்றும் மற்றொரு நிலத்துக்கு ஆறுகள், கடலை நோக்கிச் செல்லும் வழிகளில் அமைந்திருந்த கரைகளில் தள்ளப்பட்டனர். அங்கே, மக்கள் தொகை பல்கிப் பெருகியதோடு, நாகரிகமும் முன்னேற்றமடைந்தது.

தமிழர் வாழ்ந்திருந்த ஐந்து நிலத்துக்கேற்றவாறு குடிகள் தோன்றின.

1. குறிஞ்சி, மலைநாடு 2. பாலை, வறண்ட நீரற்ற நிலம் 3. முல்லை, மேட்டு நிலப்பரப்புக்கும், தாழ்வான நிலப்பரப்புக்கும் இடைப்பட்ட குறுங்காட்டுப் பகுதிகள்4.மருதம், ஆறுகளின் வடிகால் நிலங்கள் பரப்பளவைக் கொண்டு, பண்பாட்டுக் கூறுகளை வளந்திருந்த நிலையில், தமிழகத்தில் குறுகிய அளவிலேயே ஐந்து நிலப்பகுதிகளும் அமைந்திருக்கின்றன.

வேட்டுவன், காடோடி, இடையன், மீனவன், வேளாளன் என்ற நிலைகளின் இறுதியாக, தொழில்கள் என்ற நிலை உருவாயிற்று, ஒவ்வொரு நிலத்துக்கேற்ற கூறுகளின் தன்மைகளுக்கு ஒப்ப, அந்நிலத்தின் சிறப்பும் பண்பாடு வளர்ந்தன.

பழங்காலத் தமிழ் இலக்கியங்களில் காட்டப்பட்டுள்ள, தமிழ் நாட்டின் தட்ப வெப்ப நிலைகள், புவியியல் கூறுகள், இப்போதும் அத்தன்மைகளிலேயே தென்னிந்தியாவில் அறியப்படுகிறன.

தமிழ் நாட்டின் இயற்கையான, புவியியல் அமைப்புகளை ஐந்நிலப் பிரிவுகளிலும், தற்போதும், தமிழ் இலக்கியங்கள்

கூறியவாறு அமையப் பெற்றுள்ளன. தற்கால சமூக, சமய மாற்றங்களும் வாழ்க்கை முறைகளும் ஒன்றையொன்றைத் தழுவி மாறுபட்டு வந்துள்ள போதும், புவியியல் கூறுகள் மாறுபடாமல், அந்தந்த நிலப் பிரிவுகளிலேயே, நாட்டுப் புறங்களும் நகரங்களும் வளர்ந்து, நாகரிகத்தைப் பெற்றுள்ளன.

*1. மலைப் பகுதி:*

| | | |
|---|---|---|
| மாந்தக் குடியேற்றம் | : | சிறுகுடி, முன்னது சிறு குடியிருப்பையும், பின்னது மலையைச் சார்ந்துள்ள ஊர் எனவும் அறியப்படும். |
| குடியேறியவர்கள் | : | குறவர்கள் (வருங்காலம் உரைப்பவர்கள்), கானவர், குன்றவர், இறவளர் (மலைச் சரிவுகளில் வாழ்பவர்). |
| தொழில் | : | வேட்டையாடுதல், சிறு தவசங்களைப் பயிரிடுதல், தேன் திரட்டுதல், கிழங்குகளைப் பறித்தெடுத்தல். |
| உணவுப் பொருட்கள் | : | மலைநெல், சிறு தவசங்கள், கிழங்குள், பழங்கள், மூங்கில் அரிசி. |
| வழிபாடு | : | சேயோன் ( முருகன் ) வழிபாடு. |
| நீரைப் பெறுதல் | : | மலைத் தடாகங்கள், நீர் வீழ்ச்சிகள். |
| இசைக் கருவிகள் | : | முருகன் வழிபாட்டில் ஒலிக்கப்படும் பறை, குரவை நடனத்துக்கும் பயன்படுத்தப் பட்டது. |
| இசையின் வகை | : | குறிஞ்சி யாழ். |
| விலங்குகள் | : | யானை, புலி, கரடி, பன்றி, குரங்கு, மான், கலைமான், மலைஆடு. |

| | | |
|---|---|---|
| பறவைகள் | : | மயில், கிளி முதலியன. |
| மரங்கள் | : | சந்தன மரம், தேக்குமரம், குறிஞ்சி, காந்தள், கருங்கவளை, வேங்கை, முதலியன. |

**2. குறுங்காட்டுப் பகுதி :**

| | | |
|---|---|---|
| மாந்தக் குடியேற்றம் | : | பாடி (மலையடிவாரக் குடியேற்றம்), சேரி (குடிசை வாழ்க்கை) பள்ளி, (தனித்து வாழ்ந்த குழு). |
| குடியேறிவர்கள் | : | ஆயர்கள், இடையர் என்றும் போதுவர் என்றும் கூறுவர். |
| தொழில் | : | கால் நடை வளர்ப்பு, சிறு தவசங்களைப் பயிரிடுதல். |
| உணவுப் பொருட்கள் | : | சிறு தவசங்கள், துவரை, அவரை, மொச்சை. |
| வழிபாடு | : | மாயோன் (திருமால்) வழிபாடு. |
| நீரைப் பெறுதல் | : | காட்டருவிகள். |
| இசைக் கருவிகள் | : | காளைப் போரில் ஒலிக்கப்படும் பறை. |
| இசையின் வகை | : | முல்லையாழ். |
| விலங்குகள் | : | தவிட்டு நிறமான, புள்ளிமான், முயல் முதலியன. |
| பறவைகள் | : | காட்டுக் கோழி, கதுவாலிப் புறா, காடை முதலியன. |
| மரங்கள் | : | முல்லை, மரக்காரை, பொன்முல்லை, கொன்றை, சரக்கொன்றை, காட்டு எலுமிச்சை முதலியன. |

**3. பாலைப் பகுதி:**

| | | |
|---|---|---|
| உருவான நிலை | : | குறிஞ்சியும் முல்லையும் கூடுமிடத்து, வறட்சி, வெப்பம் காரணங்களால் தோன்றும் குறுங்கால நிலை. நீர்வற்றிப் பயிர்கள் கருகி நிலம் பாலை யாகும் காலம். |
| மாந்தக் குடியேற்றம் | : | பரந்தலை ( பழைய போர்க்களம்) நத்தம் (கைவிடப்பட்ட நிலப் பகுதி), குடிக்காடு. |
| குடியேறிவர்கள் | : | மறவர் (படைஞர், வல்லாளர்கள்) கள்ளர், எயினர் (வில்லாளிகள்) வேட்டுவர். |
| தொழில் | : | பெருவழிக் கொள்ளை, போர். |
| செல்வம் | : | வழிப்பறியால் கிடைத்தவை. |
| வழிபாடு | : | காளி |
| நீரைப் பெறுதல் | : | வறண்ட குட்டைகள், கிணறுகள். |
| இசைக் கருவிகள் | : | ஆநிரைக் கடத்தும் போது அடிக்கப்படும் பறை. |
| இசை | : | பாலையாழ் |
| விலங்குகள் | : | வலமற்ற யானை, புலி, செந்நாய். |
| பறவைகள் | : | கழுகு, வல்லூறு, பருந்து, புறா. |
| மரம், செடிகள் | : | திருநா (bottleflower), கூரைமலர், இருப்பை, உழிஞை, சால், நேமை முதலியன. |

**4. மருத நிலம் :**

| | | |
|---|---|---|
| மாந்தக் குடியேற்றம் | : | ஊர் (நிலையான குடியிருப்பு) |

| | | |
|---|---|---|
| குடியேறியவர்கள் | : | உழவர், களமர். |
| தொழில் | : | நெல், பருப்பு வகைகள் |
| நீரைப் பெறுதல் | : | கிணறுகள், ஆறுகள், கண்மாய்கள் |
| வழிபாடு | : | வேந்தன் ( நீர்கடவுள்) |
| இசைக் கருவிகள் | : | மண முழவு, அறுவடைப் பறை |
| இசை | : | மருத யாழ் |
| விலங்குகள் | : | காளை, எருமை, நீர்நாய். |
| பறவைகள் | : | வாத்து, நீர்க்கோழி. |
| மரம் செடிகள் | : | நீர் அல்லி, தாழை, பீநாறி. |

ஓராண்டின் ஆறு பருவங்களான இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என்றவாறு சொல்லப்பட்டுள்ளன. இவை, ஆங்கில மாதம் ஏப்ரலில் தொடங்கி, இரண்டிரண்டு மாதங்களாகத் தொடரும். தமிழ் இலக்கியங்கள் இப்பருவங்களைப் பற்றி விரிவாகக் கூறுகின்றன.

பழங்காலத் தமிழ் இலக்கியங்கள் எங்கும் எப்போதும் குளிர்மையையே வரவேற்றுள்ளன. வெப்பத்தைத் தவிர்க்கவே விரும்பியுள்ளன. ஆசியாவின் குளிர் நாடுகளைப் போலவே, புவியின் தென்வட முனைப் பகுதிகளில் உள்ள பனிப் போலவே, பனிபடர்ந்த கல்தேயப் பகுதிகளைப் போலவே அல்லாமல், தமிழ்நாடு தண்மையும் குறைந்த வெப்பமும் கொண்டுள்ள நாடாகும்.

விலங்கினங்களில் யானை, புலி போன்றவைகளும், பறவைகளில் மயில், கிளிபோன்றவைகளும், தவசங்களில் தினை, வரகு போன்றவைகளும், மரங்களில் வேங்கை போன்றவையும், தமிழ் நாட்டின் மலை மற்றும் சமவெளிகளில் காணப்படுகின்றன. இவை இம்மண்ணிற்கே உரியவை என்பதோடு, இந்தியாவுக்கு வெளியே இவற்றை அறிய இயலாது. கிரேக்கம், சிரியா, பாபிலோன் போன்ற நாடுகள்

தமிழகத்தின் செல்வங்களை அறிந்து அக்காலத்தில் தேக்கு, சந்தனம், முத்துக்கள், மிளகு, மயில், ஒளி ஊடுருவித் துணிகள் ஆகியவற்றைப் பெறத் தமிழகம் வந்து போயினர்.

பழங்காலத் தமிழ் இலக்கியங்கள் சமவெளிப் பகுதிகளின் நிகழ்வுகளையும், வாழ்க்கை நடப்புகளையும், சரியாகவும் திருத்தமாகவும் விளக்குகின்றன. குறிப்பாக, தமிழர்களின் அகவாழ்க்கையைப் பற்றி, இலக்கியங்களின் ஒவ்வொரு வரிகளும் பதிவு செய்துள்ளன. தமிழகத்தின் புலவர் பெருமக்கள், ஐந்து நிலப்பிரிவுகளிலும் வாழ்ந்திருந்தனர். அறிவார்ந்த, தனிச் சிறப்புகள் கொண்ட தமிழ் இலக்கியங்கள், ஆரியர்களின் வருகையை, தாக்கங்களை, கடுமையாக எதிர்த்தது பற்றி படம் பிடித்துக் காட்டுகின்றன. அதன் விளைவாக, தமிழர்களைப் பற்றியும், தமிழ் இலக்கியங்களைப் பற்றியும், தொடக்க காலக் கிறித்துவ ஊழியின் போதே, படிக்கவும் அறிந்து கொள்ளவும், ஆரியர்கள் ஆர்வம் கொண்டிருந்தனர். மூன்றாம் தமிழ்ச் சங்கத்துப் புலவரான கபிலர், ஆரிய இளவரசன் பிரகதத்தன் பற்றிக் குறிப்பிடும் குறிஞ்சிப் பாட்டில் தமிழர்களின் வாழ்க்கை முறைகள் பற்றியும் தமிழ்நாட்டில் அறியப்படும் விலங்குகள், மரங்கள், செடி கொடிகள், மலர்கள் பற்றியும் குறிப்பிடுவது, பலரும் அறிந்ததே. தாங்களே, பஃறுளி குமரியாற்று நாகரிகங்களை வளர்த்த குமரிக் கண்டத்தின் மூப்புடைய இனம் என்றும், அந்நிலப் பரப்பு அழிந்த பின்பு, இரண்டு பக்கம் கடலை மேற்கு, கிழக்கு எல்லைகளாகவும், வேங்கடத்தை வட எல்லையாகவும், குமரியைத் தென் எல்லையாகவும் கொண்ட தமிழகத்தில் வாழும் மூத்த குடியென்றும், தமிழர்கள் நம்புகின்றனர்.

தொல் தமிழ் நாட்டில், ஐந்து நிலப்பிரிவுகளிடையேயும் தமிழே பொது மொழியாக இருந்தது. தொல் தமிழ் நாட்டின் ஐந்து நிலப்பிரிவுகளிலும் வாழ்ந்திருந்த தமிழர்கள், ஆப்பிரிக்கா, ஆசுதிரேலியா, அமெரிக்கா, போன்று பன்மொழிகளைப் பேசுகிறவர்களாக இல்லாமல், தமிழையே தங்கள் மொழியாகக்

கொண்டிருந்தனர். அதற்கான காரணம் யாதெனில், அவ்வைந்து நிலப்பிரிவுகளிலும் வாழ்ந்திருந்தவர்கள் தமிழ் மண்ணின் மூத்த குடிகளே எனலாம். அவர்கள் வாழ்ந்திருந்த சூழலுக்கேற்ப, தமிழில் அறியப்பட்டிருந்த சொற்களில் சிலவற்றை, குறிப்பாக, தொழில் மற்றும் வினைகள் சார்ந்த சொற்களை, சிறப்புக்குரியதாக்கிப் பேசிவந்தனர். பிற்காலத்தில் இவ்வைந்து நிலப்பிரிவுகளையும் ஆளுகின்ற சூழல் மன்னர்குடிக்கு ஏற்பட்ட போது, தமிழ் பொது மொழியாகி பரவலாகப் பேசப்பட்டது. வட்டார வழக்குகளாகப் பேசப்பட்ட சில சொற்கள், வரலாற்றில் எவ்வகையான வேற்றுமைகளையும் உருவாக்குவில்லை.

# 4. தொல் தமிழர் வரலாறு பற்றிய தொல்லியல் சான்றுகள்



தென்னிந்தியா முழுவதிலும், பழைய தற்காலச் சுவடுகள் மறைந்து விட்டதற்கான நிலவியல் குறிப்புகள் எவையும் இல்லாத நிலையில், புதிய தற்காலச் குடியிருப்புகள் பல இடங்களில் அறியப்பட்டுள்ளன. புதிய கற்காலம், பழைய கற்காலத்தின், படிப்படியான, தொடர் வளர்ச்சியைக் கொண்டுள்ளது. பாறைக் கற்களைச் சீர்படுத்தி, அழகான வடிவத்தில், கருவிகளைச் செய்ய புதிய கற்காலத் தமிழர்கள் அறிந்திருந்தனர். காட்டு நாய்களை நட்பாக்கி, வீட்டு நாய்களாக்கினர். மலை நெல்லைப் பயிரிட்டனர். கரடு முரடான, சரியாக வடிவமைக்கப்படாத, பழைய கற்காலக் கருவிகள், எளிமையாகக் கையாள சீர் செய்யப்பட்டன. பழைய கற்காலத்தின் நாடோடி வாழ்க்கை, புதிய கற்காலத்தில் நிலையான குடியிருப்புகளைக் கொண்டிருந்தது.

தென்னிந்தியாவின், வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பழைய நாகரிகம், ஒவ்வொரு கால அளவிலும், பழுதடையாமல் வளர்ந்து வந்துள்ளன. புறத்தாக்கங்கள் எவையுமின்றி சீரான, அமைதியான வளர்ச்சியைக் காண முடிகின்றது.

புதிய கற்காலக் குடியிருப்புகளை ஆய்வு செய்கின்ற

போது, கற்காலத்திலிருந்து இரும்புக் காலம் வரையிலான கருவிகள், தனித்தனி வடிவங்களில் அமையாமல், ஒன்றையொன்று தழுவியே அமைந்துள்ளன. இரும்புக் காலத்திலும் தமிழர்கள், பழைய கற்கருவிகளை, வழிபாட்டு நிகழ்வுகளில் வைத்து வழிபட்டு வந்துள்ளனர். தமிழகத்தில் இரும்புக் காலத்தில் புதிய பழைய கற்காலக் கருவிகள் ஏராளமாக் கண்டறியப்பட்டிருந்தன.

**தமிழின் தொன்மை.**

சில தமிழ் இலக்கிய மரபுகள் தமிழின், தமிழரின் தொன்மையை நினைவு கூர்கின்றன. தமிழ் மொழி தொடர்பான மரபுகள்.

1. கி.பி.12 ஆம் நூற்றாண்டின் பெரும்புலவரான கம்பர், தமிழ் மொழியானது, நேற்றும் இன்றும் நாளையும் வாழும் வளரும் என்று குறிப்பிடுகிறார்.

2. **புலவரின் பெயர் அறியப்படாத பழைய தமிழ்ப் பாடல்:**

“ ஓங்கிலிடை வந்து உயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலி நீர் ஞாலத்து இருளகற்றும்-ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரோன் ஒன்று, ஏனையது
தன்னேர் இலாத தமிழ்.”

விளக்கம் : மலையிடத்தே இரண்டு தோன்றி, பெரியோர்களால் போற்றப்பட்டு தொழப்பட்டன. முதலாவது, முழக்கமிடும் கடலால் சூழப்பட்ட இவ்வுலகில் இருளைப் போக்கும் சூரியன், தனது ஒற்றைச் சக்கரத்தில் வலம் வருவது. இரண்டாவது, உலகின் அறியாமை என்ற இருளைப் போக்குவது, தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தமிழ்மொழி.

**தமிழ் மொழி தொடர்பான மரபுகள் ;**

1. புறப்பொருள் வெண்பாமாலை என்ற தமிழ் இலக்கியத்தின் 34-ஆம் பாடலின்படி, குறிஞ்சி நிலத்தில் தொன்மையான தமிழ் இனத்தின் முதல்

குடியாக மறவர் மரபு சொல்லப்பட்டுள்ளது.

2. திருக்குறளுக்கு உரையெழுதிய பரிமேலழகர் சேர,சோழ, பாண்டியர் என்ற மூன்று மன்னர் மரபுகள், படைப்புக் காலம் தொட்டு, தமிழகத்தில் வளமையான ஆட்சிகளை நடத்தி வந்ததாகக் கூறுகிறார்.

**நீண்ட நெடிய தமிழ் மொழியின் பேச்சு முறை பற்றிய டாக்டர் கால்டுவெல்லின் பார்வை:**

கால்டுவெல்லின், திராவிட ஒப்பிலக்கண நூலில், தமிழின் தொன்மை பற்றிய அவருடைய கருத்துரைகள் சில:

"திராவிட மொழிக் குடும்பம் இந்திய ஐரோப்பிய மற்றும் சித்தியன் மொழிக்குடும்பங்களுக்கும் இடையே பலவகையான தொடர்புகளைக் கொண்டிருந்தாலும், குறிப்பாகவும் சிறப்பாகவும் பகரப் பெயர்ச் சொற்கள், திராவிட மொழிகளில் திராவிட இனத்தின் பேச்சு வழக்கு மேற்கண்ட மொழிக் குடும்பங்களை விட, சிறந்திருப்பதோடு வரலாற்று அடிப்படையில் அவ்வினத்தின் உயர்வை எடுத்துக் காட்டுகின்றன".

"பல திராவிட மொழிச் சொற்களின் அமைப்புகளும், வேர்ச் சொற்களும், அம்மொழிகளின் உள்ளார்ந்த கட்டமைப்பில், அறியப்படவில்லை என்பது வினா நிலையிலேயே உள்ளது. அவை, திராவிட இனத்தின் முன்னோர்கள் வழியில் சொல்லப்பட்டு, பேசப்பட்டு வந்தவையாகத் தெரிகின்றன. திராவிட மொழியியலின் உள்ளார்ந்த கட்டமைப்பை எனக்குத் தேவைப்பட்ட தெரிந்த எளிய மிகவும் தேவையான முறைகளிலேயே அணுகியுள்ளேன். மிகத் தொன்மையும் அதற்கேற்ற பேச்சுக் கூறுகளும், முழுமையாக என்னால் அணுக முடியாமைக் கான காரணங்களாகும்".

தற்போதுள்ள கருத்துகளின்படி, திராவிட மொழிகளுக்கும் சமற்கிருதத்துக்கும் உள்ள தொடர்புகள் சமற்கிருதம் உள்ளிட்ட இந்திய ஐரோப்பிய

மொழிகளுக்கிடையேயான தொடர்புகள் பற்றிய கருத்து சமற்கிருதத்தை விட திராவிட மொழிகளே, இந்திய ஐரோப்பிய குடும்ப மொழிகளோடு தொடர்புடையனவாக உள்ளன எனலாம். அக்கருத்துகளுக்கான காரணம் திராவிட மொழிகளில் உள்ள ஆர்வத்தைத் தூண்டும் ஒப்புவமைகள், சொற்களில் உள்ள இலக்கண அமைவுகள், இந்திய ஐரோப்பிய மொழிகளிலும் காணப்படுவதே. இதே ஒப்புவமைகள், ஆரியர்களுக்கே முற்பட்ட பின்னிய துருக்கிய மொழிகளிலும் காணப்படுகிறது.

மொழிகளுக்கிடையே மாற்றுப் பெயர்ச் சொற்கள் குறித்த தொடர்புகளுக்கு அழுத்தம் தரப்பட்டு குறிப்பாக தன்மை, முன்னிலை, ஒருமைகளில் உள்ள சொற்கள் மற்ற பேச்சு வழக்கைவிட சிறப்பாக அறியப்பட்டுள்ளன. காலப்போக்கில் அவை குறையவும் தொடங்கின. எண்கள், குறியீடுகள், வினை வெளிப்பாடுகள் ஆகியவை மேற்கண்ட வற்றினின்றும் மாற்றங்களுக்குள்ளாகி வந்துள்ளன. திராவிட மொழிகள் சமற்கிருத்துக்கு முற்பட்ட தனித்தன்மையைப் பாதுகாத்து வருவதை நான் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளேன். திராவிட மொழிகளில் காணப்படும் சுட்டுயிர்கள் தரும் விளக்கங்கள் இந்திய ஐரோப்பிய மொழிகளில் இல்லை. (தவிர்ப்பு, புதிய பாரசீகம்)

அது போலவே, வினாவுயிர்ச் சொற்களும், இந்திய ஐரோப்பிய மொழிகளுக்கு, தொடர்பற்றவைகளாகவே உள்ளன. இந்திய ஐரோப்பிய மொழிகள் விளக்கச் சொற்களை சமற்கிருதத்தினின்றும் பெற்றதற்குப் பதில் பழைய யாவன் மொழி அடித்தளத்திலிருந்தே (Old Japhtic) பெற்றுள்ளன என்பதை உணர முடிகின்றது.

| | அண்மைச் சுட்டு | சேய்மைச் சுட்டு | இடைச் சுட்டு | வினா |
|---|---|---|---|---|
| ஒருமை | இவன் | அவன் | உவன் | எவன்? |
| ஒருமை | இவள் | அவள் | உவள் | எவள்? |

| | | | | |
|---|---|---|---|---|
| ஒருமை | இது | அது | உது | எது? |
| பன்மை | இவர் | அவர் | உவர் | எவர்? |
| பன்மை | இவை | அவை | உவை | எவை? |

நான் இந்த ஒப்பாய்வை மொழித் தொடர்புகள் பற்றிக் கவனமாகவும், முற்காப்புடனும் செய்த போது, திராவிட மரபுக் கூறுகள் ஆரியத்துக்கு முன்னும் பின்னும், நிலையாக அமர்ந்துள்ளதையும், இந்திய ஐரோப்பிய சித்திய, உக்ரைன் மொழிகளிலும் பரவலாகவும், நெருக்கமாகவும், தவிர்க்க இயலாதச் சொற்களாகவும் உள்ளன என்பதை அறிய முடிந்தது. அதே போல், திராவிட மொழிகளுக்கும் எபிரேய மொழிகளுக்கும் உள்ள தொடர்பு, தொன்மையான வரலாற்றை உறுதிப்படுத்துவதோடு, செமிட்டிக் மொழிக் குடும்பதுடனான உறவுகளைத் தெளிவுப்படுத்துகின்றது. ஒரு வேளை, நோவாவின் மரபினர் பேசிய முன்மொழியோடு, திராவிட மொழிகள் தொடர்பு கொண்டிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

**எகிப்து தொன்மைக்கால வணிகம் :**

தமிழ் நாட்டுக்கும் மெசபடோமியாவுக்கும் இடையே வணிகத் தொடர்புகள் மட்டுமின்றி, கி.மு.3000 ஆண்டுகளில் தென்னிந்தியாவுக்கும் எகிப்துக்கு வணிகத் தொடர்புகள் இருந்ததற்கானச் சான்றுகள் உள்ளன என்று டபிள்யூ.எச். சுகோப் கூறுகிறார். " கிரேக்கர்கள், விலங்காண்டிகளாக இருந்த காலத்துக்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, பழங்காலத்து இந்தியா பாரசீக வளைகுடாவின் தலைமையான இடங்களில், பொருளியல் கூறுகளின் அடிப்படையிலான பண்ட மாற்று வணிகத்தை மேற்கொண்டிருந்தது. குறிப்பாக, அரேபியப் பழங்குடியினரின் முன்னோர்களான போணிசீயர்கள் மரக்கலக் கடல் வணிகர்களாகவும், இடை வணிகர்களாகவும் துடிப்புடன் செயல்பட்டு வந்தனர். இந்திய நாகரிகத்தின் வளர்ச்சி இடையறாத கடல் வணிகத்தை மெசபடோமியா மற்றும் ஆப்பிரிக்காவில் மேற்கொள்ள உதவியது. அரேபிய வணிகர்கள் உண்மையில் இந்திய

வணிகர்களின் வருகையை ஏற்றுக் கொண்டிருந்தனர் என்றாலும், செங்கடல் பகுதிகளில் மிகுந்த வருவாயுள்ள பொருட்களான விலையுயர்ந்த மணிக்கற்கள், மணம் மற்றும் நறுமணப் பொருட்களை எகிப்தியர் கடவுளரின் வழிபாட்டுக்கென அளித்து வந்தனர். எகிப்திய பாரோ மன்னர்களின் சிறப்புச் சலுகைகளால் தங்கள் வணிகத்தைத் தொடர்ந்து வந்தனர். இந்திய வணிகர்களிடமிருந்து வாங்கப்பட்ட அல்லது பண்ட மாற்று முறையில் பெறப்பட்ட மஸ்லின் துணிகளையும், நறுமணப் பொருட்களையும், ஏடன் வளைகுடாவின் இருபுறங்களிலும் பெற்று அவற்றை நைல் ஆற்றின் மேட்டு நிலப்பகுதிகளிலும், பாலைவனத்துக்கு அப்பாலிருந்த திபேசு, மெம்பிசு நகரங்களிலும் விற்று வந்தனர். செங்கடல், அவர்களது வணிகத்துக்கு ஏற்ற பகுதியாகவும், வழியாகவும் இருந்தது. அராபியர்களால் எகிப்துக்குக் கொண்டு செல்லப்பட்டவை யனைத்தும் தென்னிந்தியாவின் மரக்கலம் செலுத்தும் பரதவரிடமிருந்து பெறப்பட்டவையே. பரதவர்கள், தங்கள் வணிகப் பொருட்களை, படகுகளின் வழியாக ஏடனுக்கும், கிழக்கு ஆப்பிரிக்கக் கடற்கரைப் பகுதிகளுக்கும் கொண்டு சென்றனர்.

கி.மு. 2600 களில், ஆறாம் மரபின் எகிப்திய மன்னரான மெர்னரை காலத்தில் அறியப்படும் அர்க்கப் (Harkhuf) என்ற அசுவான் பெருநிலக் கிழாரின் குறிப்புகளின் படி, "நான் , யன் நாட்டிலிருந்து (நூபியாவின் தென்பகுதி) 300 கழுதைகளில், நறுமணப்புகைப் பொருட்கள், கருங்காலி மரங்கள், தவசங்கள், சிறுத்தைக் குட்டிகள், யானைத் தந்தங்கள், எறிகோல்கள், மற்றும் ஒவ்வொரு நல்ல பொருட்களையும், எடுத்து வந்தேன்". கருங்காலி மரங்களில், ஆப்பிரிக்க வகையை விட, இந்தியக் கருங்காலி உயர்ந்தும் உறுதியானதுமானது. இந்தியாவிலிருந்து அரேபியர்கள் அவற்றை வாங்கி, பாரசீக வளைகுடாவிலிருந்து, ஆப்பிரிக்கக் கடற்கரைப் பகுதிகளுக்கு எடுத்துச் சென்று, அங்கிருந்து எகிப்து நாட்டின் மேட்டு நிலமான நைல் ஆற்றுப் பகுதிகளில் விற்பனை செய்து வந்தனர். கி.மு.1500

ஆண்டுகளிலும் அதன் பிறகும், இந்தியக் கருங்காலி மரங்கள் பரவலாக அறியப்பட்டிருந்தன. வெர்சில் (Virgil) என்ற கவிஞர். எகிப்திய மன்னன் தியோ பிராசுதசு (கி.மு.400) காலத்துக் குறிப்புகள், இந்தியக் கருங்காலி மரங்களின் உறுதித் தன்மை பற்றிக் கூறுவதாகத் தெரிவிக்கின்றார். (Georgica II/ 116,117) மேலும் இம்மரம் இந்தியாவுக்கே சிறப்பைத் தருவதென்றும் குறிப்பிடுகிறார். பிற்காலத்திலும் தவசங்களும் சிறுத்தைக் குட்டிகளும், தென்னிந்தியாவிருந்து ஆப்பிரிக்காவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது தொடர்பான செய்திகளும் உள்ளன.

ஆறாம் மரபினர் காலத்து பெப்பி II (கி.மு.2600) என்ற எகிப்திய மன்னனின் அரசு உயர் அலுவலர் செப்னி என்பவரின் குறிப்புகளில் திக் மர மேட்டு நிலத்துக்கு கிரி என்ற உதவியாளரையும் கூடவே இருவரையும் அனுப்பிவைத்த செய்தியோடு நறுமணப் பொருட்களையும், பருத்தித் துணிகளையும் ஒரு மருப்பு (tusk) விலங்கின் புறத்தோல் ஒன்றையும் அனுப்பியதாகச் செய்திகள் கூறுகின்றன. அக்கால அளவில் நறுமணப் பொருட்களும், பருத்தி ஆடைகளும் தமிழகத்தில் மட்டுமே விளைவிக்கப்பட்டு நெய்யப்பட்டன என்பதை அறியலாம்.

யானைத் தந்தம் பற்றி மேலே சொல்லப்பட்டது. ஆப்பிரிக்கத் தந்தமாகவும், இந்திய யானைத் தந்தமாகவும் இருக்கலாம் என்பர். தொடக்க காலத்திலிருந்து இந்தியத் தந்தங்கள் மற்றவற்றைக் காட்டிலும் அழகுடன் இருந்ததால், அதற்கு நல்ல வரவேற்பு இருந்தது. மேலும், யானைகளை இந்தியக் காடுகளில் பிடிப்பதும் கொல்வதும் எளிமையாகக் கையாளப்பட்டன. மாறாக, பரந்த அடர்த்தியான ஆப்பிரிக்கக் காடுகளில் அதற்கான வாய்ப்புகள் குறையாகவே இருந்தன. அபிசீனியா மற்றும் சோமாலியா நாடுகளின் வேட்டைக்காரர்கள் எகிப்திய மன்னர்களுக்கு குறுங்கோடரி, கோடரி, சுத்தியலுக்கான தந்தங்களைக் கொடுத்து வந்தனர். இந்தியர்கள் இரும்பையும் அதனால் உருவாக்கப்பட்ட வாள்களின் கைப்பிடிகளாக தந்தங்களையும் அளித்திருக்க

வாய்ப்புகள் உண்டு. இதற்கு மாற்றாக, இந்தியர்கள் ஆப்பிரிக்காவிலிருந்து சில நறுமணப் பொருட்கள், மணம் தரும் மெழுகுகள் பெற்றிருந்தனர் என்றும், பாண்டிய மன்னர் மரபே சோழ, சேர மன்னர்கள் மரபுகளுக்கு முற்பட்டது என்றும், பின்னிரண்டு மரபுகளும் பாண்டிய மன்னனின் இரண்டு உடன் பிறப்பாளர்கள் என்றும், அவர்களைத் தன் ஆட்சியின் வடபகுதிக்கான ஆளுநர்களாகப் பாண்டியனே பணித்தான் என்றும், பிற்காலத்தில் அவ்விரண்டும் தன்னாட்சி உரிமைகளைப் பிற்காலத்தில் பெற்றன என்றும் மரபுச் செய்திகள் கூறுகின்றன. எனவே, கடலில் மூழ்கிப் போன பெரு நிலப் பரப்பான குமரிக் கண்டமே, தொன்மைக் காலப் பாண்டிய நாடென்றும், அதுவே, தமிழரின் தாயகம் என்றும் அறியப்படும்.

பாத் தொகையான புறநானூற்றின் 9 ஆம் பாடல் கி.பி.இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படுகின்றது. அப்பாடலில், வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட நெடியோன் என்ற பாண்டிய மன்னன் ஆண்டிருந்த குமரி நாட்டின் பல பகுதிகள், பஃறுளி ஆற்று நீரால் வளம் பெற்றிருந்ததாகக் கூறுகிறது.

இறையனார் அகப்பொருள் உரை, கி.பி.2ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த நக்கீரர் தந்த செய்திகளின் அடிப்படையில் விளக்கவுரையாக, கி.பி,7ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. அவ்வுரை, இலக்கியங்கள் பலவற்றைப் படைக்கக் காரணமாக இருந்த மூன்று தமிழ்ச் சங்கங்கள் பற்றிய செய்திகளைத் தருகின்றது. மேலும், தொடர்பற்று கலப்புகள் நிறைந்த மிகப் பழமையான காலத்தில் பல நூறு, நூறாயிரம் ஆண்டுக்கால பல தொன்மங்களையும் முன் வரையறுக்கப்பட்ட பட்டியலையும், செவி வழிச் செய்திகளாகத் தருகின்றது. இச்செய்திகளையெல்லாம் பயனற்றவை அல்லது சிறப்பாற்றவை என சில தென்னிந்திய வரலாற்று ஆசிரியர்கள் புறம் தள்ளுவதைப் போல் புறக்கணிக்க இயலாது. அச்செய்திகளில் உள்ள பதிவுகளை வரன் முறை செய்து

மீட்டெடுக்க வேண்டியது வரலாற்று ஆசிரியர்களின் கடமையாகும்.

நடைமுறையில் இருந்த மூன்று தமிழ்ச் சங்கங்களில், முதலிரண்டு சங்கங்களும் கடலில் மூழ்கிப் போன குமரிக் கண்டத்திலும் மூன்றாம் தமிழ்ச் சங்கம் தற்கால மதுரையிலும் இருந்தன என்பதை இந்நூற்றாண்டின் தமிழறிஞர்களான டாக்டர், உ.வே. சாமிநாத அய்யர், பேராசிரியர் ஆர். இராகவ அய்யங்கார் போன்றோரும் மற்றும் பல தமிழறிஞர்களும் ஏற்றுக் கொண்டுள்ளனர். இம்மூன்று தமிழ்ச் சங்கங்களையும் புரந்த மன்னர்கள் பற்றிய குறிப்புகள் கிடைக்க வில்லையாயினும், நம்பவியலாத அளவில் பலர் போற்றிப் புரந்தனர். மேலும், மூன்று சங்கங்கள் நிலை பெற்றிருந்த கால அளவுகள் தமிழைப் பொருத்தவரை மிகப் பழமையான காலம் என்றும் கடலில் மூழ்கிப் போன குமரிக்கண்டத்துடன் தொடர்புடையது என்பதும், ஐயப்பாட்டுக்கு இடமில்லாத செய்திகளாகும். பட்டியல் துல்லியமாக இல்லாவிட்டாலும், அடிப்படையான உண்மைகள் நம்பதக்கனவாகவும் வலிமையாகவும் உள்ளன என்பதை மறுப்பதற்கில்லை.

கடலில் மூழ்கிய குமரிக் கண்டத்து வரலாறு பலவாறாக, பல காலங்களில் அக்கண்டம் மூழ்கியதாகக் கருதப்படுகிறது. முதல் தாக்கம், குமரிக் கண்டத்தின் தென் பகுதிகளை அழித்து, முதல் தமிழ்ச் சங்க நடை முறைகளை முடிவுக்குக் கொண்டு வந்தது. முதல் சங்கம், பஃறுளி ஆற்றங்கரையிலிருந்த அக்காலப் பாண்டியரின் தலை நகரமான தென் மதுரையில் அறியப்படுகின்றது. இரண்டாம் அழிவு, குமரிக் கண்டத்தின் இடைப்பகுதியில் அப்போதைய பாண்டியரின் தலை நகரமான கபாடபுரத்தில் அறியப்பட்டிருந்தது. அங்குதான் இரண்டாம் தமிழ்ச் சங்கம், குமரியாற்றங்கரையிலிருந்த கபாடபுரத்தில் அறியப்பட்டிருந்தது. கபாடபுரம் என்று, சமற்கிருதக் குறிப்புகளில் காணப்படுகின்றன. மூன்றாம் பேரழிவு, தென்னிந்திய தீவக்குறைக்குக் கிழக்கேயிருந்த நிலப்பகுதியில் தோன்றியது. அதுவே, வங்கக் கடலையும் தோற்றுவித்தது.

நான்காம் அழிவு, காவிரிப் பூம்பட்டினத்துக்கு அருகில் நிகழ்ந்தது. குமரியாறும் அக்கால அளவில் மறைந்து போனது. குமரியாறு மறைந்து போன நிலையில், அதன் அருகே அறியப்பட்டிருந்த நிலப்பகுதி, குமரி என்ற பெயரையே தாங்கி நிற்கின்றது.

கபாடபுரம் கடலில் மூழ்கியப் பின்னர் பாண்டிய மரபினர், சேர சோழ மன்னர்கள் மீது படையெடுத்து, தமிழகத்தின் தென்பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டனர். இக்குறிப்பு மேலெழுந்த வாரியாக, கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட கலித்தொகையின் 104 ஆவது பாடலுக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரை மூலம் தெரிய வருகின்றது.

கைலாயத்தில், சிவன்-உமையாள் (மலை மகள்) திருமணத்தின் போது, பதினெட்டு வகையான தேவர்கள், கைலாயத்தில் குவிந்தனர். இதனால், கைலாயப் பகுதி தாழ்ந்து, தென்னிந்தியப் பகுதிகள் உயர்ந்தன. இதனைச் சரிசெய்யும் பொருட்டு, ஆரிய முனிவன் அகத்தியனை விந்திய மலையைக் கடந்து தென்முனைக்குத் தேவர்கள் அனுப்பிவைத்தனர். அதுவரை எவரும் கடந்துவராத விந்திய மலையைத் தாழ்த்தி அகத்தியன் கடந்து வந்தான் என்று தொன்மக் கதைகள் கூறுகின்றன. தமிழ்நாட்டின் பொதிகை மலைக்கு வந்த அகத்தியன் வட, தென் நிலப்பகுதிகளைச் சமன் செய்தான் என்பர். இது, தொன்மக் கதையாயினும் அக்கதையில் ஓர் உண்மை வெளிப்பட்டுள்ளது. கோண்டுவானா என்ற தென்கண்டம், குமரி என்ற உயர்ந்த மலைத் தொடரால் மேட்டு நிலமாக இருந்தது. அக்காலத்தில் இமயமலை, நிலத்தினும் தாழ்ந்து கடலாக இருந்தது. குமரிக் கண்டம் நிலைபெற்றிருந்த போது, இமயமலை தோன்றி நிலப்பகுதி உயர்ந்தது. விந்தியம் தாழ்ந்து போனதாகக் கருதப்பட்டது. இந்த நிலவியல் உண்மையையே அகத்தியன் கதை கூறுவதகாக் கொள்ளலாம்.

# 5. தென்மொழி, தென்புலத்தார் என்ற சொற்களின் சிறப்புகள்



1. தமிழுக்கு மாற்றாக, தென்மொழி என்ற சொல் பயன்படுத்தப்படுவதால், தமிழ் தென்பகுதியில் தோன்றி வளர்த்த மண்ணின் மொழியென அறியலாம். தமிழைத் தென்மொழி என்ற போது சமற்கிருதத்தை வடமொழி என்றனர். தென்மொழி என்ற சொல் விரிந்து பரந்த கண்ணோட்டத்திலும் பொருளிலும் சொல்லப்பட்ட போது, திராவிட மொழிகள் தமிழினின்றும் கிளைத் திருக்கவில்லை.

குமரிக் கண்டத்தில் கடல் அழிவினால் மாண்டு போன, தமிழர்களின் முன்னோர்களை தென்புலர், தென்புலத்தார், தென்புல வாழ்நர் என்றவாறு தமிழில் அழைத்தனர். அச்சொற்கள் தென்திசையில் வாழ்ந்திருந்தவர்கள் என்ற பொருளைத் தரும். அவ்வாறு மாண்டு போன உயிர்களுக்கு நாளும் படைக்கும் சடங்கினை, தென்புலத்தார் வேள்வி என்றனர். இந்த சொற்கள், தமிழரின் தாய் நிலம் குமரிக் கண்டமே என்பதை வலியுறுத்துகின்றன. தமிழ் நாட்டில் ஒரு பழமொழியுண்டு, குறத்தி பிள்ளையைப் பெற்றெடுத்தவுடன் குறவன் மருந்து சாப்பிட்டான் என்பர். பேறு காலத்துக்குரிய

மருந்தை குறவனும் உண்ணும் நடை முறை, தென் ஆப்பிரிக்கப் பழங்குடியினரிடம் காணப்படுகிறது. இந்நிகழ்வு, குமரிக் கண்ட நிலப்பகுதியில் ஆப்பிரிக்காவும் இணைந்திருந்ததைக் காட்டுகிறது.

## 2. புறச்சான்றுகள்

இந்தியா, ஆப்பிரிக்கா, ஆசுத்திரேலிய தொல் குடிகளின் முன்னோர்கள் திராவிடர்களே என்ற கருத்துக்கு வலு சேர்ப்பவர் திருவாளர்கள் கீன் மற்றும் மோரீசு ஆகியோராவர். இந்தியப் பெருங்கடல் நிலை பெற்றிருந்த பெரும் நிலப்பரப்பு, தென்னிந்தாவுடன் இணைந்திருந்த காலத்தில் தோன்றிய பெருவெள்ளதால் அழிந்து போனதாக தமிழ் மரபுகள் தெரிவிக்கின்றன. எபிரேய மொழியின் இலக்கியச் செய்திகளின் படி, 40 நாட்கள் இரவும் பகலுமாகப் பெய்த பெரு மழையில் வெள்ளம் தோன்றி, கடல் நீரின் உயரத்தை இரு மடங்காக்கி, நிலப்பரப்பினை அழித்ததாக சிறப்பாகக் குறிப்பிடுகிறது. நிலவியல் தொடர்பான சான்றுகளும், இந்தியப் பெருங்கடல் பகுதியில் ஒரு பெரு நிலப்பரப்பு இருந்தது பற்றிய செய்திகளைத் தருவதோடு, ஒரு காலத்தில் அது கடலில் மூழ்கிப் போனதாகவும் கூறுகின்றன. குமரிக்கண்டம் என்று சொல்லப்படும் அப்பெருங்கடல் பகுதியில்,ஒரு பெருநிலப்பரப்பு இருந்தது பற்றிய செய்திகளைத் தருவதோடு, ஒரு காலத்தில் அது கடலில் மூழ்கிப் போனதாகவும் கூறுகின்றன. குமரிக்கண்டம் என்று சொல்லப்படும் அப்பெரும்நிலப்பரப்பு, தொடக்கத்தில் மடகாசுகர் முதல் மலேயத் தீவக்குறை வரை பரவியிருந்து. தென்னிந்தியா, ஆப்பிரிக்கா, ஆசுத்திரேலியப் பகுதியையும் இணைத்துக் கொண்டிருந்தது. எசுகிலேட்டர் என்பவரின் கூற்றுப்படி, திராவிடர்கள் குமரிக் கண்டம் கடலில் மூழ்குவதற்கு வெகுகாலத்துக்கு முன்பே, தென்னிந்தியாவில் குடியேறி விட்டனர் என்பதை அறிய முடிகின்றது.

தமிழ் மரபுகளின் தெளிவான குறிப்புகளின்படி, கடலுள் மூழ்கிப் போன குமரிக்கண்டம் தமிழகத்தோடு இணைந்த

பகுதியாகவே இருந்தது. அதனால், தமிழர்கள் தங்களை வெள்ள அழிவின்றும் காத்துக் கொள்ள வடபகுதியான தமிழகத்திலும் குடிபெயர்ந்தனர். நிலவியல் ஆய்வாளர்களின் கருத்துப்படி குமரிக்கண்டம், சீனா, ஆப்பிரிக்கா, ஆசுத்திரேலிய எல்லைகளோடு விரிந்திருந்தாலும் தமிழர்கள், அப்பகுதியினின்றும் தென்னிந்தியாவுக்குக் குடிபெயர்ந்தனர் எனக் கூற இயலாது. தமிழர்களின் தாயகம், குமரிக்கண்ட அழிவிற்குப் பின்னர், தென்னிந்தியாவாகவே இருந்தது. மரம், செடி,கொடிகள், விலங்குகளைப் பொருத்தவரை தென்னிந்தியாவுக்கும் ஆப்பிரிக்காவுக்கும் இருக்கும் தொடர்புகளை திரு.ஓல்டம் என்ற ஆய்வாளர் உறுதி செய்கிறார். மிகப் பழங்காலம் தொட்டே, இந்தியாவையும் ஆப்பிரிக்காவையும் வறண்ட நிலப்பகுதி இணைந்திருந்ததாகக் கூறுகிறார். ஆசுத்திரேலியாவின் பழங்குடியினர், இந்தியாவின் திராவிடப் பழங்குடியுடன், இன அடிப்படையில் ஒன்றுபட்டுள்ளனர் என்று, இனங்கள் பற்றி ஆய்வு செய்த அறிஞர்கள் தெரிவிக்கின்றனர். இத்தொடர்கள், அவ்விருவரும் பேசுகின்ற மொழியாலும், சொற்களாலும் உறுதிப்படுத்தப்பட்டுள்ளன. இவ்விருவரின் உடற்கூறுகளும் ஒற்றுமைப்படுகின்றன. வளைதடி என்ற கருவியை இவ்விரு இனத்தாரும் பயன்படுத்தி வந்தனர் என்பது மற்றுமொரு எடுத்துக் காட்டாகும்.

தற்போது, மண்ணின் மக்கள் அல்லது உள்நாட்டுக் கொள்கை என்ற அளவில் ஒரு கொள்கையைப் பற்றி ஆய்வு செய்ய முற்படலாம். அக்கொள்கையின் படி, மிகப் பழமையான காலத்திலிருந்தே திராவிடர்கள், தென்னிந்தியாவில் வாழ்ந்து வந்திருக்க வேண்டும் எனலாம். அதுவே, தமிழர்களின் நம்பிக்கையாகவும் உள்ளது. இத் தென்னாட்டுக் கொள்கை, பழங்காலத்துத் தமிழ் இலக்கியங்களில் எவ்வாறெல்லாம் சொல்லப்பட்டுள்ளது என்பதை உட்புகுந்தும் பார்க்கலாம். தொல்காப்பியம்,

புறநானூறு உள்ளிட்ட மேலும் சில தமிழ் இலக்கியங்கள், கிறித்துவ ஊழிக்கு முற்பட்டவை எனக் குறிப்பிடலாம்.

தமிழ் இலக்கியங்கள் கூறும் செய்திகளின் படி, தமிழகத்துக்கு வெளியே வெளிநாட்டைத் தாயகமாகத் கொண்டு தமிழர்கள் வாழ்ந்திருந்தார்கள் என்ற செய்தி காணப்படவில்லை. தமிழ் இலக்கியங்களில் அறியப்படும் இயற்கைக் சூழல்கள், மரங்கள், கொடியவிலங்குகள், பறவைகள் ஆகியவற்றிற்கான சொற்கள் தமிழ் வேரினைக் கொண்டவைகளாகவே உள்ளன. புகைப்பனி மூடுபனி பற்றிய சொற்களே தமிழில் உள்னன. பனிக்கட்டிகள், பனிப்பாளங்கள் குறித்த சொற்கள் தமிழில் இல்லை எனலாம்.

வாலசு என்ற ஆய்வாளர், தென்னிந்தியாவின் ஆனை மலைபற்றிய ஆய்வுகளில், ஆனை மலையில் குடியேறிய காடர்கள் என்ற இனத்தவர் மரங்களில் ஏறுவதைப் பற்றிக் குறிப்பிடுகையில், இவர்களைப் போன்றே அதே நுணுக்கங்களைக் கையாண்டு போர்னியாவில் உள்ள தையக் என்ற இனத்தவர், மரங்களில் ஏறுகின்றனர் என்று விளக்குகிறார். மற்றொரு கவனிக்கத்தக்க வழக்கு, காடர்களும், திருவாங்கூர் மலை வேடர்களும், குறிப்பாக தென்னிந்தியத் தீவுக்குறையில் நான் அறிந்தவரை வெட்டும் பற்களைத் தீட்டிக் கூர்மையாக்கிக் கொள்வதைக் கண்டிருக்கிறேன் என்பார். சிறு அரம் அல்லது உளிகொண்டு 18 அகவையில் இளைஞர்களுக்கும் 10அகவைகளில் பெண்களுக்கும் காடர்கள் பற்களைத் தேய்த்து கூர்மையாக்குகின்றனர். இந்நிகழ்வுகளை கீட் மற்றும் பிளாக்டன் என்ற ஆய்வாளர்கள், மலாயத் தீவக் குறையிலுள்ள சாகுன் என்ற இனத்தவரின் பற்கள் தேய்ப்பு நிகழ்வுடன் ஒப்பிடுகின்றனர். காடர் இனப் பெண்கள் பூப்பெய்தவுடன் அவர்களுடைய பற்கள் கறுமையாக்கப் படுவதாக, திரு.கிராபோர்டு தெரிவிக்கின்றார். டாக்டர். கே.டி.பிரயூசு தனது நூலில் (Die Zayber - bilderschrieftem der Negrito in Malaka), மலாக்காவில் உள்ள கறுப்பினத்தவர் மூங்கிலைச் சீவி,

சிறுகுச்சிகளாக்கி, அவற்றைத் தலையில் அணிந்து கொள்வதைப் போலவே, காடர்களும் மூங்கில் குச்சிகளை அணிந்து கொள்வதாகக் குறிப்பிட்டுள்ளார்.

கீட், பிளாக்டன், " செமாங் இனப் பெண்கள், தங்கள் தலைமூடியில் மூங்கில் சீப்பு போன்ற குச்சிகளை அணிகின்றனர். இவை, நோய்களை நீக்க வல்லவையென நம்புகின்றனர். பலவகையான வடிவங்களில், மூங்கில் குச்சிகளால் உருவாக்கப்பட்டவைகளை அணிகலன்கள் போலவே அணிகின்றனர். ஒவ்வொரு வகையும், ஒவ்வொரு வகையான நோயைப் போக்குவதாகக் கூறுகின்றனர். பங்கன், பெராக் பகுதியைச் சேர்ந்த செமாங், சகய் இனப்பெண்கள் கலவையானவற்றையும் அணிகின்றனர்," என்று பதிவு செய்துள்ளனர். திரு. வின்சென்ட், " காடர்கள், மூங்கில் அணிகலன்களில் சில குறியீடுகளையிட்டு, அவை மந்திர ஆற்றல்கள் கொண்டவை என நம்புகின்றனர்." என்று கூறுகிறார். ஒரு காடவன்,ஒரு மூங்கில் சீப்பை உருவாக்க வேண்டும். அதனைத் தான் மணக்கப் போகும் பெண்ணிடம் திருமணத்துக்கு முன்பு அளிக்கவேண்டும் அல்லது திருமண நிகழ்வின் முடிவில் அளிக்க வேண்டும். இளைஞர்களிடையே, யார் கவர்ச்சிகரமான சீப்பை உருவாக்குவது என்பதில் முனைப்பு இருக்கும். சில நேரங்களில் அம்மூங்கில் சீப்புகளின் மேல் மாறுதலான பொருட்களையும் இணைப்பர் என்று வின்சென்ட் கூறுகிறார்.

பேராசிரயர்.ஆர்.சிமோன் ஆசுத்திரேலியர்களைப் பற்றிய குறிப்புகளில் அடியிற்கண்டவாறு பதிவு செய்துள்ளார். ஆசுத்திரேலியர்கள் தாங்கள் குடிபெயர்ந்த காலத்தில் கொண்டிருந்த வழக்குகளை விட முன்னேற்றமான வாழ்க்கைமுறையை, தற்காலத்தில் கொண்டுள்ளனர் என்பதை தயக்கமின்றி கூறவேண்டும். எப்போது, எவ்வாறு அவர்களுடைய குடியேற்றங்கள் நிகழ்ந்தன என்பதைக் கணிப்பது கடினமானது. அவர்களுக்கு அண்மையில்

வாழ்கின்றவர்களும் கூட, அவர்கள் மரபினராகவே உள்ளனர். அவர்களுக்கு அண்டை நாட்டவராக, பப்புவா நியு கினியாவில் உள்ளவர்களையும் தண்டா மலாய்த் தீவுகளில் உள்ளவர்களையும், நியூசிலாந்தின் மாக்ரிங் இனத்தாரையும் குறிப்பிடலாம். ஆனாலும் ஆசுத்திரேலியர்களுக்கும் மேற்கண்டவர்களுக்கும் நெருக்கமான உறவுகள் இல்லை. ஆனால் அதே அளவில், ஆசுத்திரேலியர்களுக்கும் திராவிடர்களுக்குமான உறவுகள், இன அடிப்படையில் ஒன்று பட்டுள்ளன என்ற முடிவுக்கு, நாம் வலுக்கட்டாயமாகத் தள்ளப் படுகிறோம். தக்காணத்தின் பழங்குடி மக்களின் உடல் உருவ அமைப்புகள், ஆசுத்திரேலியர்களின் உடல், உருவ அமைப்புகளோடு ஒத்திருப்பதைப் பற்றி, அக்சிலி (Huxley), பின்வருமாறு கூறுகிறார். " கிழக்கிந்திய மரக்கலத்தில் கூலியாக வருகின்ற ஒரு தென்னிந்தியன், ஆசுத்திரேலியப் பழங்குடியினரைப் போன்றே குறைந்த சொர சொரப்புள்ள, மண்டையோட்டையும், கீழ்த் தாடையையும் கொண்டிருக்கிறான். அக்சிலி கூற்றில் சில முரண்பாடுகள் இருந்தாலும், இவ்விரு இனத்தாருக்கும் இடையேயான மண்டையோட்டு அமைப்பு, அலைபாயும் சுருள் மூடி ஆகியவை ஒன்றாகவும், பொதுவாகவும் உள்ளன. இதன் அடிப்படையில் இவ்விரு இனங்கள் பற்றி ஆய்வுகள் மேற்கொண்ட நோரிசு, பிளிக், கால்டுவெல் போன்றோர் தங்கள் அரிய கண்டுப்பிடிப்பின் மூலம், இவ்விரு இனத்தவரின் தாயகம் ஒன்றாக அல்லது அருகருகே அமைந்திருத்தல் வேண்டும் என்று கூறுகின்றனர். இவர்களுக்கிடையில் சில இனங்கள் அறியப்பட்டிருந்தாலும், அவர்களின் மொழி, உடலமைப்பு ஆகியவை, ஆசுத்திரேலிய திராவிட இனத்தோடு ஒற்றுமைப்படவில்லை. மாந்த இனவரலாற்றில், இவ்விரு இனங்களும் ஓரினத்தின் கிளைகளாகவே கருதப்படல் வேண்டும். ஆய்வாளர்கள் மால் மற்றும் பிரிட்சு சரசின் ஆகியோர் மிகக் கடின உழைப்பின் பயனாக, இலங்கையிலுள்ள

வேடர்களின் தோற்ற வளர்ச்சிகளைக் கண்டறிந்தனர். அவர்கள், முன் திராவிட மரபின் கிளையினர் என்பதையும் கண்டு வெளிப்படுத்தினர். திராவிட இனம், வளர்ச்சியடைய வேடர் இனம் வளர்ச்சி குன்றிய நிலையிலேயே இருந்ததால், ஆய்வாளர்களின் கண்களில் படாமலேயே போயினர்.

திராவிடர்களுக்கும் ஆசுத்திரேலியர்களுக்கும் இடையே காணப்பட்ட பல சிறப்பான ஒற்றுமைச் சான்றுகள், மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் மூலம் வெளிப்பட்டுள்ளதைப்பற்றி நான் ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன். இத்தலைப்பை முடிக்கும் முன்னர், சர்.வில்லியம் டர்னர் என்ற ஆய்வாளர், திராவிடர்கள் மற்றும் ஆசுத்திரேலியர்கள் பற்றிய சரியான, முறையான ஆய்வுகளில் இவ்விரு இனத்தாரின் மண்டையோடுகளின் உருவ அமைப்பு ஒற்றுமையைச் சுட்டிக் காட்டுவதை, நான் குறிப்பிட விரும்புகிறேன். பல போற்றத் தகுந்த, இனங்கள் பற்றிய ஆய்வுகளில் ஈடுபட்ட அறிஞர்களின் ஆசுத்திரேலியப் பழங்குடியினர், இந்தியத் திராவிடர்களுடன் பல நிலைகளில் ஒற்றுமைப் படுகின்றனர் என்பதை விளக்கியுள்ளனர். சில ஆய்வாளர்கள் திராவிடர்கள் காகசிய இனத்தின் ஒரு கிளையென்றும் கூறி, ஐரோப்பயர்களுடன் இணைக்கின்றனர். இருப்பினும், திராவிட ஆசுத்திரேலிய ஒற்றுமை, அவ்விரு இனத்தார் பேசும் மொழிகள், மொழிகளின் சொற்கள், ஒரு மொழியின் மூலத்தினின்றே பிறந்தவை என்பதை உறுதிப்படுத்துகின்றன. மேலும் பூமராங் என்ற வளைத் தடிக் கருவியை பயன்படுத்தியதும் நிலவியல் அடிப்படையில் தென்னிந்தியா, மலாயா, ஆசுத்திரேலியா ஆகிய நாடுகள் அருகருகே அமைந்திருப்பதும், இம்மக்களின் உடல் உருவ அமைப்புகள் ஒற்றுமைப்படுவதும் குறிப்பிடத்தக்க எடுத்துக்காட்டுகளாகும். இவ்விரு இனத்தாரும் ஏறக்குறைய கறுமையான தசையும், கறுங் கண்களும், கறுத்த தலைமுடியையும், கோரை அல்லது சுருள் முடிகளையும், தடித்த உதடுகளையும், கீழ் நோக்கிய,விரிந்த மூக்கையும், பொதுவாக

குள்ளமான தோற்றத்தையும், சில நிலைகளில் திராவிடரைக் காட்டிலும் உயர்ந்த உடலமைப்பையும் கொண்டிருந்த அளவில் இவ்விரு மக்களின் ஒற்றுமைக் கூறுகள் வெளிப்படுகின்றன.

இவ்விரு இனத்தாரும் நீண்ட மண்டையோட்டு அமைப்புகளைக் கொண்டிருந்தாலும், ஆசுத்திரேலிய இனத்தின் மண்டையோடு சற்று நீண்டிருப்பதோடு கண் இமைகளுக்கு இடையேயான நடு நெற்றி எலும்புகள் சற்று மாறுபட்டுத் தோற்றமளிக்கின்றன. ஆசுத்திரேலிய மண்டையோடுகள் கடினமானவைகளாகவும் வெளிப்புறம் கெட்டித்தன்மை கொண்டும் காணப்படுகின்றன. முன் நெற்றி குறுகியும் முகவாய் அம்பு போல் குறுகியும் முகத்தோற்றம் செங்குத்தாய்ச் சரிந்தும் உள்ளன. மேற்கண்டவற்றைக் கவனமாக ஆய்வுசெய்த சர். வில்லியம் டர்னர். அவ்விரு இனத்தாரின் மண்டை யோடுகளில், பல ஒற்றுமைக் கூறுகள் உள்ளன என்பதை வெளிப்படுத்தியுள்ளார்.

3. இந்தியா பிரிக்கப்படும் முன்பே, திராவிட மொழிகளின் பகுதிகள் வரையறுக்கப்பட்டன. அனைத்து திராவிட மொழிகளிலும் எண்ணிக்கையில் 19 எனக் கருதப்பட்டு, அவை ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலும் பிரிவினைக்குப் பிறகும் இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் அறியப்படுகின்றன. திராவிட மொழிகளின், ஒலிப்புகள் மற்றெந்த மொழிகளிலும் காணப்படவில்லை என்பதோடு, மேலை ஆரிய மொழிகளோடு ஒட்டாமல், தனித்தே நின்று இயங்குகின்றன.

4. திராவிட மொழிகள், தெற்கிலிருந்து வடக்கே திரிபுபட்ட நிலை. திராவிட மொழிகளுக்குள்ளே, ஒவ்வொரு மொழியும் வளமையும், தென்னிந்தியாவில் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாகவும் உள்ளதோடு, வெளிநாட்டு மொழிகளை, ஊடுருவ இயலாதவாறு கவனமாக இருந்தன. திராவிட மொழிகளில் மூப்புத்தன்மை கொண்டதும், மிகவும் பண்படுத்தப்பட்டு வளர்ந்த தமிழ்மொழி பல நிலைகளில், திராவிட மொழிகளுக்கு பகராள் போன்றும் உள்ளது. வட

மற்றும் மைய இந்தியப் பகுதிகளில் பேசப்படும் திராவிட மொழிகள் கொச்சையாகவும், இலக்கியத்தரம் இன்றியும் அறியப்படுவதோடு பரந்துபட்ட நிலையில், பிறமொழிக்காரர்களாலும் பேசப்பட்டு வருகின்றது.

தமிழ் நாட்டில், தமிழ்மொழி தெற்கே செல்லச் செல்ல, தூய்மையிலும் தூய்மையாக குறிப்பாக, திருநெல்வேலி, யாழ்ப்பாணம் போன்ற பகுதிகளில் நல்ல தமிழாகப் பேசப்பட்டு வருகின்றது. தெற்கே செல்லச் செல்ல தூய்மையாக விளங்கும் தமிழ், வடக்கே செல்லச் செல்ல, திரிபுபட்டு, கொச்சைத் தன்மையைப் பெற்றுள்ளது. உண்மையில், திராவிடர்கள் சிலர் கருதுவது போல் நடுத்தரக் கடல் பகுதியின்றும் தென்னிந்தியாவுக்கு வந்திருந்தால், தற்போதுள்ள தூய்மை மாறுபட்டு தனித்தன்மை சீர்கெட்டிருக்கும்.

5. வட இந்தியத் திராவிட மொழிகள் பெரிதும் திரிபுபட்டு தனிமைப்படுத்தப்பட்டுள்ளன.

டாக்டர். கிரியர்சன், பிராகூய் மொழி பற்றி அடியிற்கண்டவாறு எழுதுகிறார். "பிராகூய் மொழி பேசுபவர்களின் தாய் நிலம் கிழக்கு பலுச்சிஸ்தானமும் அதனை யொட்டிய சிந்து மாவட்டப் பகுதிகளுமாகும். மலைப் பகுதிகளில் அம்மக்கள் வாழ்ந்திருந்ததால், பல்வேறு குழுக்களாக அவர்கள் பிளவுபட்டு நிலையான இடத்தைப் பெறவும் தக்கவைத்துக் கொள்ளவும் அவர்களால் இயலாமற் போனது. தென் கிழக்கில் சரவன், சலவன் போன்ற மாநிலங்களிலும் மக்ரனில் உள்ள கூச் பகுதியிலும் தூமான் என்ற பிரிவினர் பெருமளவில் வாழ்வதைக் காண முடிகின்றது. இந்தத் தூமான்கள் நெடுங்காலக் குடியிருப்புகளின்றி கூடாரங்களில் நாட்டுப்புறங்களில் வாழும் மக்களாக உள்ளனர். உண்மையில், அவர்கள் பலோக்கி என்ற இனத்தவர் வாழும் சமவெளிப் பகுதிகளைத் தவிர்த்து வருகின்றனர்.

1911 ஆம் ஆண்டில் எடுக்கப்பட்ட மக்கள் தொகைக் கணக்குப்படி, பிராகூய் மக்களின் எண்ணிக்கை 1,70,998ஆகும்.

பிராகூய் மொழிக்கு எழுத்து வடிவங்கள் இல்லை. அல்லாபக்சு மற்றும் கேப்டன் நிக்கல்சன் ஆகியோர் பாரசீக எழுத்து முறையில் பிராகூய் மொழியை எழுத உதவினர். அம்மொழியின் ஒலிப்பு முறையில் சில சீர்திருத்தங்கள் பிற்றை நாளில் டாக்டர் ட்ரம்ப் என்பவர் மாற்றி அறிமுகம் செய்தார். அம்மொழியின் பல எழுத்தின் ஒலிகள், பல இடங்களில் இந்துத்தானி ஒலி வடிவைப் பெற்றுள்ளன.

பாலியல் தொடர்பாக, அவற்றை வேறுபடுத்திக் காட்டும் பெயர்ச் சொற்கள், பிராகூய் மொழியில் இல்லை. அம்மொழி, பொதுவாக, திராவிட மொழிகளின் சீரமைக்கப்பட்ட மற்றும் சீரமைக்கப்படாத பெயர்ச் சொற்களின் இடைநிலையில் உள்ளது. ஆட்சி அலுவல்கள், ஈரானியத் தாக்கங்களைக் கொண்டுள்ள படர்க்கைக் சொற்கள், சீர்திருத்தம் பெறாதவையாகவும், வினைச் சொற்களில் பாலினத்தை இணைப்பவையாகவும் உள்ளன. பாரசீகச் சொற்களான நர் என்பது ஆணையும், மாதா என்பது பெண்ணையும் குறித்தாலும், பாலின வேறுபாட்டை விளக்க இவை முன்னொட்டுச் சொற்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. ஒருமைக்கான தனிச்சார்பு அடித்தளம் இல்லை. இந்த அடிப்படையில், பிராகூய் மொழி, குருக் மற்றும் மால்டோ மொழிகளுடன் ஒற்றுமைப்படுகின்றது. இதே போன்று கைக்கடி, உருகந்தி போன்ற தமிழ்ச் சொற்களோடும் தொடர்பு கொள்கிறது. தமிழில் அறியப்படும் கைக்கடி போன்ற சொற்களில் உள்ள காலம் இரண்டாம் வேற்றுமை போன்ற கூறுகள் நோண்டி மொழியில் கைக்கடி, நைக்கி என்று திரிபுபட்டுள்ளதை ஒப்பு நோக்கும் போது, சில கூறுகள் பிராகூய்- தமிழ் - நோண்டி மொழிகளுக்கிடையே உடன்பாடுகளைக் கொண்டுள்ளதை அறிய முடிகின்றது. எண்கணக்கில் ஒன்று முதல் மூன்று வரையிலான எண்கள் திராவிடத்தையும், மேற்செல்லும் எண்கள், ஆரியத்திடம் கடன் பெற்றவைகளாகவும் உள்ளன. மூன்று-துனுவில் மூசி எனப்படுவதை எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

கால்டுவெல் கூறுகிறார்: பிராகூய் மொழியிலுள்ள

பெயர்ச் சொற்களும் வினைச் சொற்களும், திராவிட மொழிச் சொற்களின் வேர்களோடு ஒப்பிடக் கூடியவை. ஆனால் அவை கவனிக்கப்படவில்லை. ஒராவோன் மொழியோடும் அதன் சில சொற்களோடும் சமன்படுகின்றன.

பிராகூய் மொழிச் சொற்களைக் கூர்ந்து கவனித்ததில், அச்சொற்களின் திரிபுநிலை :

| தமிழ் | பிராகூய் | தமிழ் | பிராகூய் |
|---|---|---|---|
| வாய் | பா | தேள் | தெல்த் |
| செவி | கப் | வர்.வா | பர் |
| முன் | மோன் | இரு | அர் |
| மூளை | மிலி | ஒரு | அசித் |
| மகர் | மார் | இரண்டு | இரத் |
| நீர் | தீர் | கள் (பன்மை பின்னொட்டு) | க |
| பால் | பால்த் | | |

பெயர்ச் சொல் பிறழ்ச்சி - கல்

| ஒருமை | பன்மை |
|---|---|
| கல் | கலாக் |
| கல்-இ | கலாத்தே |
| கர்ல்-அத் | கலாத்தே-அக் |
| கர்ல்-ஆன் | கலாத்தே-ஆன் |
| கல் -னா | கலாத்தா |
| கல்-ஆயி | கலாத்தே-ஆயி |
| கல் - டி | கலாத்த -டி |

வினையின் இணைவு - காண்(பார்)

<u>ஒருமை</u>

| இணைவு | நிகழ்காலம் | எதிர்காலம் | இறந்தகாலம் | ஏவல் |
|---|---|---|---|---|
| 1. கணிவ் | கணிவ | கணோத் | கணாத் | கண் (அக்) |
| 2. கணிஸ் | கணிஸ்வ | கணோஸ் | கணாங் | ,, |
| 3. கணே | கணிக் | கணோயி | கணா(க) | ,, |

<u>பன்மை</u>

| | | | | |
|---|---|---|---|---|
| 1. கணின் | கணின | கணோன் | கணான் | கண்-போ |
| 2. கனிகர | கணிரெ | கணோரே | கணாரெ | ,, |
| 3. கணிர் | கணிர | கணோர் | கணார் | ,, |

**மனு (மரம்) என்ற சொல்லின் பிறழ்ச்சிகள் :** மன்த், மனெ, மனெட், மனிக், மன்டே, மன்சி, மன்னோ, ஒமனு.

பிராகூயியும் மால்டோவும் முறையே வடமேற்கு எல்லையிலும், வடகிழக்கு எல்லையிலும் பேசப்படுகின்ற, திராவிட மொழியின் உறுப்பு மொழிகளாகும். அவை, பிறமொழிகள் கலப்பதைத் தவிர்த்தும், தமிழினின்று விடுபட்டுத் தொலைவிலும் உள்ளன. தொலைவும் தொடர்பின்மையும் பெருமளவில் அவ்விரு மொழியிலும் தமிழர்களால் புரிந்து கொள்ள இயலாத நிலையில் உள்ளன. தெலுங்கு மொழி பேசப்படும் பகுதிகளை எல்லையாக அல்லது புள்ளியாகக் கொண்டு, அதனை விடுத்த வட இந்தியப் பகுதிகளில், பெருமளவில் மொழித்திரிபுகள் வளர்ந்தன. தமிழைப் பொருத்தவரை, அத்திரிபு நிலை மிக உயர்ந்து அறியப்படுகின்றது.

6. மலை வாழ் மக்களால் பேசப்படும் திராவிட மொழி தொன்மையான ஒன்று.

சில மொழியியல் ஆய்வாளர்கள் குறிப்பாக, வெளி நாட்டவர் மலைப் பகுதிகளில் பேசப்படும் குறைந்த எண்ணிக்கையிலான திராவிட மொழிகளை பழமையானவை என்று கருதி மயங்குகின்றனர். அவ்வாறான மொழிகளை ஆய்வுகளுக்கு உட்படுத்தும் போது, அம்மொழிகளின் சொற்கள் திரிபுபட்டவைகளாக உள்ளவையன்றி, பழமையானவையாக இல்லை. எடுத்துக்காட்டாக, பிராகூயி மொழியின் பாக்( வாய் அல்லது வாய்கள்) தோடர் மொழியின் நின்த் ஆகியவை முறையே வாய், வாய்கள், நினது என்ற தமிழ்ச் சொற்களின் திரிபுகளாகவே உள்ளன. உண்மையில், குறிஞ்சி நிலமக்கள் முதல்

தமிழ்ச் சங்கத்துக்கு முற்பட்ட காலங்களில், தொன்மையான தமிழையே பேசிவந்தனர். தற்காலத்து இந்தியாவில் உள்ள மலைவாழ் மக்கள் அனைவரும், பிற்காலங்களில் மலைப்பகுதிகளில் குடியேறியவர்கள் அவர்கள், சமவெளிகளில் வாழ்ந்திருந்து போர்கள், ஆநிரைக் கவர்தல், கொள்ளை நோய்கள், கொள்ளைக்காரர்களின் அச்சுறுத்தல்கள் போன்ற பல்வேறு காரணங்களால் மலைகளில் குடியேறியவர்களாவர். ஆநிரைக் கவர்தல் என்பது, பழங்காலத்து போரை அறிவிப்பதற்கானத் தொடக்கப் போர் என்று தொல்காப்பியம் கூறுகிறது.

தமிழ்நாட்டு மலைவாழ் மக்கள் தொல் மரபினர் அல்லர். பொதுவாக, மேலை நாட்டு மொழித் தொடர்பான ஆய்வாளர்களுக்கு குமரிக்கண்டத்துத் தமிழ் இனம் பற்றியும், அவர்களின் பல நிலைகளில் வளர்ச்சியடைந்த பண்பாட்டு நாகரிகக் கூறுகள் பற்றியும், மொழியின் இயற்கையான வளர்ச்சி மற்றும் வளமை பற்றியும், எந்தவொரு சிந்தனையுமில்லை. குமரிக் கண்ட அழிவிற்குப் பின்னர், அந்நிலப்பரப்பு பல பிரிவுகளாகப் போன நிலையில் அக்கண்டத்தின் மக்கள் நாடுகளிலும், தீவுகளிலும் தனிமைப்படுத்தப்பட்டார்கள். அவர்கள் இப்போதும் கூட, மிகச் சிறிய மக்கள் தொகையில், தங்கள் பழமையான மொழியைப் பாதுகாத்து வருகின்றனர். வரலாறு மற்றும் மொழிகள் சார்ந்த ஆய்வுகளில், தற்கால மலைமக்களின் முன்னோர்கள், சமவெளிகளில் வாழ்ந்திருந்தவர்கள் என்றும், சமயப் போரர்கள் மற்றும் கொடுமைகளினின்றும் வேறுபல காரணங்களினின்றும் தப்பிக்கவே மலைகளை நாடிப் போயினர் என்றும் தெரிய வருகின்றது.

டாக்டர். ஏ. அய்யப்பன் செயலாளர், பழங்குடியினர் நலவாழ்வு ஆணையக்குவுக்கு 1946 இல் அவர் எழுதியுள்ளவை பற்றி அடியிற் காண்க.

- எம் தசையின் தசையினர்

"பழங்குடியினராகச் சொல்லப்படுகின்றவர்கள் சமவெளி மக்களின்றும் வேறுபட்டவர்கள் என்ற தவறான கருத்து நிலவி வருகின்றது. அவர்களில், காடர்கள் போன்ற ஆனைமலைப் பழங்குடியினர், அடர்ந்த சுருட்டைமுடியும் கொண்ட மிகச் சிறுபான்மை மக்களாவர். அவர்களைத் தவிர்த்த மற்ற மலைப் பழங்குடியினர் அனைவரும் அண்மைச் சமவெளிப் பகுதியினின்றும் குடியேறியவர்கள். அவர்களுடைய இனமும் மொழியும் சமவெளி மக்களோடு தொடர்புடையவை. ஆந்திராவின் பழங்குடியினராகக் கருதப்படும் ஒரு செஞ்சு, கொண்டா ரெட்டி, கோயா போன்ற எவரும் உடலமைப்பில் சமவெளி மக்களின்றும் உருவ, உடல் அமைப்பில் வேறுபட்டவர்கள் அல்லர். சமவெளியினர் உடுத்தும் ஆடைகளை அவர்களுக்கு அணிவித்துப் பார்த்தால், வேறுபாடுகளைக் காண இயலாது. தற்காலப் பள்ளிப்பாட நூல்களில், கோலாரியர்கள் (Kolerians) மலைப் பழங்குடியினர் எனப் பரப்புரை செய்யப்படுவது பொருளற்றது. அதற்கு முன்பு, மலைவாழ் மக்கள் நம் உறவுகளே என்று கற்பிக்கப்பட்டது.

இந்த அறிக்கை, பழங்காலத்து இந்திய இனங்கள், அவ்வினங்களின் தோற்றங்கள் பற்றிய வரலாற்று ஊடகங்களில் நுழைந்து உண்மைகளை வெளிக் கொணர முனைப்படுவது தேவையற்றது. தற்காலத்தில், சமவெளி மக்களுக்கும் மலைவாழ் மக்களுக்கும் இடையே காணப்படும் வேற்றுமைகளில் முதன்மையானது பொருளியல் கூறுகளே. நம் தமிழ் இனத்தைச் சார்ந்த சில பழங்குடிமரபினர் இப்போதும் வேட்டையாடி உணவு தேடும் நிலையில் இருந்தாலும், அவர்களின் எண்ணிக்கை மிக மிகக் குறைவானதே. மண்ணைக் கிளறி வேளாண்மையைச் செய்து வந்த சிலர், மெல்ல மெல்ல இதர கருவிகளையும் பயன்படுத்தி வருகின்றனர். காடுகள் வெளியாட்களால் வசப்படுத்தப்படும் வரை, பழங்குடியினர் தங்கள் தொன்மையான வாழ்க்கை முறையே மேற்கொண்டிருந்தனர். கடந்த 200 ஆண்டுக்கால அளவில்,

ஏராளமான காட்டுப் பகுதிகளில் குறிப்பாக கடப்பா, கர்நூல் மாவட்டங்களில், ஆட்சியாளர்களால் அழிக்கப்பட்டு, அவர்களின் வாழ்வுரிமை அப்பகுதிகளில் பறிக்கப்பட்டன. விசய நகரப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பிறகு செஞ்சு, ஏனாதி பழங்குடியினர், காடுகளைப் பாதுகாத்தலை விடுத்தனர். லம்பாடியார் போன்ற பழங்குடியினர், முகலாயர்கள் மற்றும் மராட்டியர்களின் படைகளில் இணைந்து போரிட்டதை, இந்திய வரலாற்றில் அறிகிறோம். சவரர்கள், கோண்டுகள் மற்றும் ரெட்டிகள் போன்றவர்கள், ஒரு காலத்தில் அரசியலில் சிறப்புற்று அரசுகளைக் கொண்டிருந்தும், பின்னர் வலிமையான பகைவர்களால் வீழ்த்தப்பட்டனர்".

திரு. எட்கர் தர்சுடன், முதுவர் என்ற பழங்குடியினரின் தோற்றம் பற்றி கீழ்க் கண்டவாறு எழுதுகிறார்.

முதுவர் அல்லது முதுகர் என்ற மலைப் பழங்குடியினர், கோயம்புத்தூர், மதுரை, மலபார், திருவாங்கூர்ப் பகுதிகளில் பயிர்த் தொழில் செய்து வந்தவர்கள். முதுவர்கள் தாங்கள் மலையின மக்கள் என்பதை நம்புவதில்லை. தந்தை மகன் வழியில் வரும் செவி வழிச் செய்திகளில், முதுவர் இனத்தார் தொடக்கத்தில் மதுரையில் வாழ்ந்திருந்தாகச் சொல்லப்படுகிறது. பாண்டிய மன்னர் ஒருவரது காலத்தில் எழுந்த போர் மற்றும் சில அழிவுகளால், மதுரையை விட்டு மலைப்பகுதிகளுக்கு குடியேறினர். போடி நாயக்கனூரில் கருவுற்றிருந்த பெண்களை அங்கேயே விடுத்து மற்றவர்கள் வடக்குத் திருவாங்கூர்ப் பகுதிகளில் குடியேறினர். போடியில் தங்கிருந்த கருவுற்ற பெண்கள் ஈன்றெடுத்தவர்கள் நீலகிரியில் குடியேறினர். மற்றொரு மரபுச் செய்தியின்படி, மதுரையை விட்டு வெளியேறிய மக்கள் மீனாட்சி தெய்வத்தின் இலையை நேரிய மங்கலத்துக்கு எடுத்துவந்தனர். திரு.பி.ஈ.கோன்னர் இச்செய்தியைக் குறிப்பிட்டு, முதுவர்களே மலைப் பகுதிகளில் தொன்மக் குடிகளாகக் கருதப்படுகின்றனர் என்று கூறுகிறார். உண்மையில் அவர்கள் மதுரையைச் சார்ந்த வெள்ளாழ மரபினர்

என்றும், மதுரையினின்றும் இளவரசி ஒருத்தியுடன் திருவாங்கூர் மலைப் பகுதிகளில் குடியேறியதாகவும் சொல்லப்படுகிறது. அவர்கள் மதுரையிலிருந்து எக்காலத்தில் குடிபெயர்ந்தனர் என்பதை ஊகம் செய்ய இயலவில்லையென்றும் பெரும்பாலும் தெலுங்கு நாயக்கர்கள், போடி நாயக்கனூரை அடைந்தது, கி.பி 14 ஆம் நூற்றாண்டில், நடந்திருக்கலாம் என்றும் கருதப்படுகின்றது. மேலும் கி.பி. 18 ஆம் நூற்றாண்டின் இறுதியில் இசுலாமியப் படையெடுப்பாளர்களால் துரத்தப்பட்டிருக்கலாம் என்ற கருத்தும் உள்ளது.

குறிப்பிடத்தக்க இரண்டு குழுக்கள் கலந்து, தங்கள் மொழி மற்றும் மரபுகளில் ஒன்றி மலைகளில் குடியேறிய போது, அங்கு ஏற்கனவே குடியேறிருந்த ஒரு சிறு குழுவினருடன் திருமண உறவுகள் கொண்டு வடக்குப் பகுதியிலும், மேலும் புதிதாக வந்தவர்கள் கிழக்குப் பகுதியிலும் இணைந்தனர். தொடக்க காலத்தில், நீலகிரியில் குடியேறியவர்கள், தற்காலத்தில் தோடர்களே. அவர்களும் கூட, ஒரு காலத்தில் தமிழ் நாட்டின் சமவெளிகளிலிருந்து அங்கு குடியேறியவர்களே.

டாக்டர். அய்யப்பன் எழுதுகிறார். “ தோடர்கள், தாங்களே நீலகிரி மலைக்கு உரிமையானவர்கள். பின்னரே படகர்கள், தங்கள் ஒப்புதலுடன் இப்பகுதியில் குடியேறினர். படகர்கள், “ குடு ” என்ற தவசத்தை தோடர்களுக்கு கப்பம் அல்லது காணிக்கையாகச் செலுத்தி, தங்கள் இருக்கையை அங்கு உறுதிப்படுத்திக் கொண்டனர். படகர்கள், குறும்பர் என்ற இனத்தாருக்கும், தவசத்தை அளித்து அவர்களையும் தங்கள் பக்கம் இணைத்துக் கொண்டனர். குறும்பர்கள் இறந்தவர்களுடன் தொடர்பு கொள்ளும் வித்தையைக் கற்றவர்கள் என்ற அச்ச உணர்வு படகர்களிடம் இருந்தாலும், படகர்கள் குறும்பர்களின் நட்புணர்வை நீட்டித்துக் கொண்டதற்கான ஒரு காரணமாகும். தோடர்களும்

இறந்தவர்களோடு பேசக் கற்றிருந்தனர் என்றும் சொல்லப்படுகின்றது. கோடா இனத்தவருக்கு தவசம், காசுகளை அளித்து, படகர்கள் அவர்களுடைய உதவிகளையும் பெற்றுக் கொண்டனர்.

தோடர்களின் மொழி கன்னடத்தை விட தமிழோடு நெருங்கிய தொடர்புடையது. சிலர் துரானியர் வழிவந்த சிலரே கன்னடர்கள் என்றும், நீலகிரிக்குக் குடிபெயரும் முன்னதாக, அவர்கள் கர்நாடகத்தில் இருந்த கன்னடர்களே தோடர்கள் என்றும் பரிந்துரைக்கின்றனர். தோடர்கள், மலைப் பகுதிகளுக்குரிய மக்கள் அல்லர் என்றும், தொடக்க காலங்களில், இறந்தவர்களைப் புதைத்து, கல்வட்டங்களை மேலே அமைத்தது போல், தற்காலத் தோடர்கள் அமைப்பதில்லையென்றும் கூறுகின்றனர். தோடர்கள் மலைகளுக்கு வருவதற்கு முன்னரே, மற்றொரு மரபினர் அங்கு வாழ்ந்திருந்ததாகவும் சொல்லப்படுகின்றது. ஆனாலும் தற்காலத் தோடர்களின் இறப்புச் சடங்குகள் முற்காலத்தவரோடு ஒற்றுமைப் படுவதை அறியலாம்.

வரலாற்றுக் கண்ணோட்டத்தில் ஒரு நிலையில் தோடர்கள் முற்றிலுமாக அதுவரைப் பயன்படுத்தி வந்த கருவிகள், வேளாண்மை, தொழில்கள் அனைத்தையும் விடுத்து எருமைகளோடும், எருமைக் கோயிலோடும் முரண்பட்டனர். மோத அல்லது போவா என்று அவ்வப் போது அழைக்கப்படும் தோடர்களின் கோயிலைப் பற்றிய ஊகச் செய்திகளும் உள்ளன. இக்கோயில்கள் மற்றொரு மரபினருக்கு உரிமையானவை யென்று சிலர் கருதுகின்றனர். நூற்றாண்டுகளின் ஓட்டத்தில் , தோடர்களின் முல்லை நில வாழ்க்கையைப் பற்றிய வரலாற்றினை, அவர்களே மறந்து போயினர்.

தோடர்களின் ஊர், மந்த் (Mand) என அழைக்கப்படும். இச்சொல் கால்நடைகளைக் குறிக்கும். மந்தை என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். தோடர்களின் வாழ்க்கை முறை திரியெறி

(Tirieri). எனப்படும். பல்கி அல்லது பல்சி என்றும் சொல்லப்படும். இவர்களை மேலாண்மை செய்பவர்கள் பலவர் ஆவர் (Palalas). இவர்களுக்கு உதவி செய்பவர்கள் 8 முதல் 10 வயதுடைய சிறுவர்களாவர். இவர்கள் " கல்தமக்''. என்று அழைக்கப்படுகின்றனர். தங்கள் இருப்பிடம் தவிர்த்து, வெளியே செல்லும் போது ஆடையின்றியே செல்லவேண்டும். கல்தமர் என்பதற்கு, காவல் மகன் (Watching son) என்பது பொருளாகும்.

தோடர்களே, நீல மலையின் உயர் குடியாகக் கருதப்படுகின்றனர். அவர்கள் அங்கு எப்போது முதலில் குடியேறினார்கள் என்பது தெரியவில்லை. செம்பாவி மரம் (tud tree) அக்குடியினருக்குத் தெய்வ மரமாகும். பல சிறப்புகளிலும், அனைத்தும் அம்மரத்தைச் சார்ந்தே நிகழும். தோடர்கள் தங்களை துட (Tuda) என்றும், தமிழர்கள் அவர்களை துடவன் என்றும் அழைக்கின்றனர். தோடர்கள், தாங்களே நீலகிரியின் முதல் மற்றும் மூத்தகுடிகள் என்று உரிமை கோருகின்றனர்.

வெண்ணெயும் நெய்யும் தோடர்களுக்கு விருப்பமானவை. இப்போதும் அவர்கள் மரக்கறி உணவையே உண்கின்றனர். கருவுற்ற பெண்களின் ஏழாம் மாதச் சடங்குகளின் தொடக்க காலங்களில், இறைச்சியைப் பயன்படுத்தி படைத்து வந்தனர். தோடர்கள் தங்கள் மொழியில் இறைவனைக் கடவுள் என்றே அழைக்கின்றனர். வானுலகை அம்நட் என்று அழைக்கின்றனர்.

பலவர்களும், கல்தமக்குகளும்,, பெய்க் என்ற முதன்மை இன மரபினர் என்று சொல்லப்படுகின்றது. பெய்க்குகள், தேர்த்தள்-தேர்த்தோள், தேர்ந்த ஆள் என்று உயர்ந்தோரையும், மற்றவரை, தார்த்தாள் அல்லது தாழ்ந்த ஆள் என்றும் அழைக்கின்றனர்.

தோடர்கள் எண்ணியல் முறை, ஒன்று முதல் பத்து வரையிலானவை தோடர் மொழி தமிழினின்றே திரிபுபட்ட

மொழி யென்பதை உணர்த்தப் போதுமானவை. எனவே, தோடர்மொழி தொன்மையான மொழியெனக் கூற இயலாது. தோடர் எண்கள் ஓம், இம், மூம், நான்க், ஊட்சு, அல்லது ஊசு, ஆர், ஏலிசு, எட், ஒன்பத். பட்டு, அல்லது பத்து, அணில் (அணில்) பாலழ், கால்தமக்,தேர்த்தாள், தர்த்தள், ஒட்டக்கல் மண்டு (ottaealmund) போன்றவையும் தமிழ்த் திரிபுச் சொற்களே.

டாக்டர் கால்டுவெல் கூறுகிறார், “தோடர்கள் (நீலகிரி) மலையின் தொன்மையான பழங்குடியினர் அல்லர். மாறாக, அவர்கள் அங்குக் குடியேறியவர்களே. நீலகிரி மலையின் தொன்மக் குடிகள் என்பதில் உறுதியற்ற தன்மையே நிலவுகிறது.”

# 6. உலகலாவிய தமிழ்



உலகில் அறியப்படும் சிறப்பான மொழிகள், தமிழின் வளமையால் தாக்கங்களைப் பெற்றன. அத்தாக்கங்கள் நேரிடையாகவும் மறைமுகமாகவும் கூட இருக்கலாம். ஆரியம், செமிட்டிக் சித்திய மொழிகளுக்கும் தமிழுக்கும் இடையேயுள்ள கலைச் சொற்கள்மற்றும் இலக்கணத் தொடர்புகள், பிற்காலத்திலேயே வெளிப்படுத்தப்பட்டன. இங்கு, தமிழுக்கும், ஆசுத்திரேலிய, ஆப்பிரிக்க மொழிகளுக்கும் இடையிலான நெருக்கங்களைக் கூற விரும்புகிறேன். பகரப் பெயர்ச் சொற்கள் தொடர்பாக, திராவிட ஆசுத்திரேலிய மொழிகளுக்கான ஒற்றுமைகளை டாக்டர்.கால்டுவெல் அடியிற்கண்டவாறு எழுதுகிறார்.

பொதுவாக குறிப்பிடும் அளவிலும், பகரப் பெயர்ச் சொற்கள் தொடர்பாக திராவிட மொழிக்கும், மேற்கு ஆசுத்திரேலியாவின் பழங்குடியின் மொழிக்கும் இடையே உள்ள ஒற்றுமைக் கூறுகள் பற்றி, இங்கே நான் குறிப்பிட்ட விரும்புவது சரியாக இருக்கலாம். எந்த வகையில் அவ்வொற்றுமைகள் விளக்கப்பட்டாலும், பொதுவான

நிலைப்பாடுகள் கேள்விகளால் தொடுக்கப்பட இயலாதவைகள் ஆசுத்திரேலிய பழங்குடியினர் மொழியின் தன்மைப் பகரப் பெயர்ச் சொற்கள், திபேத்திய திராவிட மொழிகளோடு மிகவும் நெருக்கமானத் தொடர்புடையவை. அடியிற் காணும் பட்டியலைக் காண்க.

| திராவிடம் | ஆசுத்திரேலியம் | திபேத்தியம் | சீனம் |
|---|---|---|---|
| நான், யான் | ங் ந, ங்,நை | ங் ந, ங் நெ | ங் நி |
| நா, என் | ங் நக் ட்ச | நெஜட் | நுன்ய |

பகரப் பெயர்ச் சொல்லின் அடிப்படை, திபேத்திய பசுரப் பெயர்ச் சொல்லுக்கு இணையான தொடர்பை, நெருக்கமாக வெளிப்படுத்துவது தெரிகிறது. அது, இந்திய-சீன மொழிக்குடும்பத்தில் பொதுவாகவும், அதே பகரப் பெயர்ச்சொல் தன்மை ஒருமையிலிருந்து, பன்மையாக மாறும் போது ஆசுத்திரேலியக் சொற்கள், திராவிட மொழிகளோடு குறிப்பாகத் தெலுங்கு மொழியோடு நெருக்கமாகிறது. தெலுங்கு சொற்களில் லு (lu) என்ற பின்னொட்டு ஒருமையைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது. ஆசுத்திரேலிய மொழியிலும், இதே சேர்க்கை லு-லி-த்லு-த்லி என்றவாறு உள்ளன. குறிப்பாக, இந்தியாவின் வடகிழக்கு மாநிலங்களில் தெலுங்கின் இணைப்பு வெளிப்படுகின்றது.

| தமிழ் | ஆசுத்திரேலியம் | தெலுங்கு |
|---|---|---|
| நாம் | நகலு | வாண்டு (அவன்) |
| நாம் இருவர் | நாட்லு | வாண்ட்லு (அவர்கள்) |
| | நகட்லி | நகலத |

தமிழில் அறியப்படும் நான், நாங்கள் என்ற சொற்களோடு ஒப்பிடுக.

ஆசுத்திரேலிய மொழியில் முன்னிலைப் பெயர்களில் ஒருமையும் பன்மையும், திராவிட மொழிகளில் அழுத்தமாக உள்ளன என்பதோடு பின்னொட்டுச் சொற்களும் உடன்படுகின்றன.

திராவிட மொழிகளின் நீன்- ஒருமையாகவும் நீம்- பன்மையாகவும், அதற்கான வேர் நீ என்றும் அறியப்படும். நீர் (தமிழ்) மீரு- (தெலுங்கு)- நீம் (கன்னடம்)

| திராவிடம் | ஆசுத்திரேலியம் |
|---|---|
| நீன், நின் | நின்ன, நிகின்னெ |
| நீம், நிம் | நிகின் டோவ, நின்ஙடே |
| நீர், நும் | நிமரு, நுரா, நிவா |
| நீவு | |

தமிழில் என்னை என்ற சொல் ஆசுத்திரேலிய மொழியில் எம்மோ என, தன்மை ஒருமையைக் குறிப்பதை ஒப்பு நோக்குக.

ஆப்பிரிக்காவின் கானா நாட்டிலிருந்து, இந்திய அரசின் தொடர் வண்டித் துறையில் பயிற்சி பெறுவதற்காக, தன் நாட்டின் சார்பில் வந்திருந்த பொறியாளர் திரு. இவான்சுயாவோ டிசட்டோ (Evans yao Dzato) சென்னையில் தங்கியிருந்த போது, தமிழில் உள்ள சொற்களான வா, போ, தூக்கு, தேவி போன்றவை கானாவில் தோகாலாந்து மாவட்டம், டிரான்சு ஓல்டா பகுதியிலுள்ள மக்களால் இதே ஒலிப்பிலும் பொருளிலும் பேசப்படுவதாகக் கூறினார். இதன் மூலம், பல நூறாண்டுகளுக்கு முன்பிருந்தே கானாவிற்கும், தென்னிந்தியாவுக்கும் இடையே பண்பாட்டுப் பரிமாற்றங்கள் இருந்துள்ளன என்று கூறுவார்.

தமிழ் மொழியின் உலகளாவிய சொற்கள் ஒருபுறமிருக்க, தமிழ் இலக்கியங்களும் மூதுரைகளும் விதிகளும் வெளிப்பட உலகப் பொதுமை, மாந்த நலக் கோட்பாடு, மாந்த நேயம், எண்ணிலடங்கா வள்ளன்மை போன்ற பண்பாட்டுக் கூறுகளைக் கொண்டுள்ளன.புறநானூற்றின் 192 ஆம் பாடலின் தொடக்க வரியான யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற வரி, மக்கள் குடியிருக்கும் அனைத்து இடங்களும் எங்கள் குடியிருப்புகளே, உலகம் தழுவிய மக்கள் அனைவரும் எங்கள் உறவுகளே என்று கூறுவதன் மூலம் உலக மாந்த நேயத்தை

.இயல்பாகவும், இயற்கையாகவும் தமிழர்கள் கொண்டிருந்தனர் என்பது தெரியவரும். சமற்கிருத இலக்கியங்கள் போல் அல்லாமல், தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் பொது மக்களுக்கானவை, மக்களை நல்வழிப்படுத்த விரும்பியவை. தமிழின் தலைசிறந்த ஒழுக்கவியல் நூலான திருக்குறள், மிக உயர்ந்த ஒழுக்க நெறிகளையும், உலகளாவிய செயல் முறைகளையும், ஆட்சியாளர்களின் அறநிலைகளையும், இனம், நிறம், குழு வேறுபாடுகளைக் கடந்து அறம் கூறும் ஒழுக்கவியல் நூலாக உள்ளது.

ஆசுத்திரேலிய மொழியின் இலக்கணக் கட்டமைப்பு, சித்திய மொழிக் குடும்பத்தோடு பொதுவான நிலையில் ஒன்றுபடுகின்றது. சொற்களின் பன்மை நிலைகளில், முன்னுருபுக்குப் பதிலாக பின் அமைப்புச் சொற்கள் பயன்படுத்தும் முறை (Use of post positions instead of prepositions) திராவிட, துருக்கிய, மங்கோலிய, சித்திய மொழிகளில் அறியப்படுபவை போன்றே ஆசுத்திரேலிய மொழியிலும் அறியப்படுகின்றன. ஆசுத்திரேலிய மொழி பற்றிய விரிவான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்பதை அறிஞர்களின் கருத்தாக உள்ளது.

தமிழுக்கும் பிற மொழிக் குடும்பங்களுக்குமான தொடர்புகள்

டாக்டர் கால்டுவெல் தமிழின் பெருமை, தோற்றம், முதுமை, தலைமை ஆகியவற்றைப் பற்றிய சரியானப் புரிதல் இல்லாமல்,திராவிட மொழிகளை, சித்திய மொழிக் குழுவுடன் வீணாகத் தொடர்புப் படுத்தி தனது கருதுகோளையும், தொடர்புகளையும் முன் வைக்கின்றார். குறிப்பாக, திராவிடச் சொற்களையும் பிகுசுத்தான் மொழிச் சொற்களையும் இணைத்து ஒற்றுமைகளை வெளிப்படுத்தியுள்ளார். இணைப்பு என்ற சொல்லை வைத்து மதிப்பைக் குறைத்துள்ளார். இச்சூழலில், இதுபொருத்தமற்ற பயன்பாடு. திராவிட

மொழிகள், தங்களுக்கான குடும்பத்தைக் கட்டமைத்துக் கொண்டு, தனித்தன்மைகளைத் தொடர்ந்து, மற்ற மொழிக் குடும்பங்களுடன் ஏறக்குறைய உறவுகளைத் தாங்கி நிற்கின்றன. உண்மையில் சித்திய மொழிகள் பல எண்ணிக்கையில் உள்ளதோடு, தனித்தன்மைப் பண்பையும், குடும்ப உறவுகளையும் கொண்டுள்ளதால், அவை ஒரு மூல மொழியினின்றும் கிளைத்தவை எனக் கருதலாம். திராவிட மொழிகள் தங்களுக்குள் தனித்தன்மையை நிலை நிறுத்திக் கொண்டிருக்கும் அதே வேளையில், இந்திய ஐரோப்பிய, சித்திய மொழிகளோடும் தொடர்பு கொண்டுள்ளன. டாக்டர் கால்டுவெல் மேலும், " நான், திராவிட மொழிகளில் காணப்படும், இலக்கணக் கட்டமைப்பு, மரபுக் கூறுகளைப் போற்றும் வேளையில், சித்திய மொழியிலும் அவ்வாறான கூறுகள் உள்ளன என்பதை அறிகிறேன். அத்துடன் இந்திய ஐரோப்பிய மொழிகளிலும் குறிப்பிடத்தக்க இணைப்புகள் உள்ளன. தமிழுக்கும், இந்திய ஐரோப்பியம் மற்றும் சித்திய மொழிகள் அல்லாத பிற மொழிகளுக்கும் உள்ள தொடர்புகள் குறிப்பிடும்படியாகவோ, கவனத்தில் கொள்ளும்படியாகவோ இல்லை என்பதோடு, குறிப்பிட்டுச் சொல்லுமளவுக்கு இல்லை."

## பாண்டிய, சோழ, சேர மரபுகளின் தோற்றம்

டாக்டர். கால்டுவெல் உள்ளிட்ட மேலை நாட்டு மொழி ஆய்வாளர்களுக்கு, தமிழர்கள் நடுத் தரைக்கடல் பகுதியிலிருந்து, தமிழ் நாட்டுக்குக் குடி பெயர்ந்தவர்கள் என்றும், உயர்ந்த கலைகள் மற்றும் வாழ்க்கை முறைகளில் ஆரியத்துக்குக் கடன் பட்டவர்கள் என்றும், தவறான கருத்தைக் கொண்டிருந்தனர். அவ்வாறான ஒருதலைப் பக்கமான சிந்தனை, உறுதியாக அவர்களோடு நின்றதால் தொல் தமிழரின் நாகரிகப் பண்பாட்டுக் கூறுகளின் தோற்றம், வளர்ச்சி, உண்மையான பொருள் பற்றித் தவறான முடிகளை மேற்கொள்ள வேண்டியதாயிற்று.

பாண்டவர் ஐவரில் ஒருவரான அர்ச்சுனன், பாண்டிய மன்னன் மகளை தங்களுடைய மறைவு வாழ்க்கையின் போது, மணந்து கொண்டான் என்பது உண்மையான செய்தியாகும். இந்தத் தொடர்பே, பாண்டவர்களின் தந்தையான பாண்டு என்ற பெயரே பாண்டியன் என்று திரிந்ததாக எடுத்துக் கொள்ள இயலாது. பாரதப் போருக்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, மூவேந்தர்களும் தங்கள் ஆட்சியைப் பலவாறு நிறுவியிருந்தனர். பாண்டியர்களும் சோழர்களும், பாரதப்போரில் பாண்டவர்களின் கூட்டணியில் இருந்து போரிட்ட போது, சேர மன்னன் பெருஞ்சோற்று உதியன், போர் முடியும் வரை உணவளித்தான். ஒப்புமை கூறவியலாத இந்த விருந்தோம்பல் செயலால், சேரமன்னன், "பெருஞ்சோற்று", என்ற அடைமொழியைப் பெற்று, முரஞ்சியூர் முடிநாகராயர் என்ற புலவரால், புறநானூற்றில் (பாடல் 2) போற்றப்பட்டான். அத்தகைய அறச் செயலைப் புகழ்ந்து கே.சி.சேவி அய்யங்கார் புறநானூற்றின் அப்பாடலை, ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

" Majestic monarch! When the ten times ten
Kauvravas, crowred with golden tumbai wreaths
wrathful in battle, against the heroes five
Lords of the fiery steeds with tossing mane
Their partimony lusting after faught
Thou didst unstinted savoury food supply
To either host, till all the Kurus fell".

சேர மன்னனின் இலவய உணவு கொடுத்த நிலையும், குருசேத்திரத்தில் அவனுடைய மாண்பும், சிலப்பதிகாரத்தில் புகழப்பட்டுள்ளது. *(29:24).*

பாண்டியன் என்ற பெயர், எருது என்று பொருள்படும். பாண்டி என்ற சொல்லில் இருந்து பிறந்தது காயடிக்கப் படாத காட்டு விலங்கான காளையின் வீறியமும், வலிமையும் தொன்மைக் காலத்துத் தமிழர்களின் கவனத்தை ஈர்த்தது. அது வீற

விலங்கான காளையென, எருதுக்கான பொதுச் சொல்லாகத் தமிழர்கள் குறித்தனர். காளையுடன் போரிடுவது தற்போதும் தமிழ்நாட்டிலும், சுபெயினிலும், மெக்சிகோவிலும் நடைமுறையில் உள்ள நிகழ்வுகள். இந்நிகழ்வு, அக்காலத் தமிழர்களிடம் பரவலாகக் கடைப்பிடிக்கப்பட்டது. திருவள்ளுவர் கூட, நடுநிலைதவறாத. உழைப்பை உயர்த்தும் மன்னனை, காளையோடு ஒப்பிட்டுக் கூறுகிறார். தனது 624 ஆவது பாடலில் வண்டியிழுத்துச் செல்லும் காளை எவ்வாறு தன்வழியில் இடர்ப்படும் மேடுபள்ளங்களை வெற்றிகரமாகக் கடந்து செல்ல முயற்சிகளை மேற்கொள்கிறதோ அதுபோலவே மாந்தனும் தன் முன்னே தோன்றும் இடர்களையும் இடுக்கண்களையும் வெற்றியுடன் எதிர்கொள்ள வேண்டும் என்பார்.

எனவே, பாண்டி என்ற சொல்லில் இருந்தே பாண்டியன் என்ற சொல் அன்விகுதி சேர்க்கப்பட்டு பிறந்தது என்பதை எளிதாக உணரலாம்.

அக்காலத்து மன்னர்கள், தாங்கள் ஒரு வானியல் மாந்தன் அல்லது தெய்வமாந்தரிமிருந்து பிறந்தவர்கள் என்று கூறி, பெருமைபட்டுக் கொண்டனர். மூன்று பழைய தமிழ் மன்னர்களின் மரபுகளும், முத்தீக்களின் வழியில் பிறந்தவைகளாகக் கருதப்பட்டன. முத்தீவுகள் அக்காலத்தில், தெய்வங்களாக் கருதப்பட்டன. பாண்டிய மரபு நிலவுக் குலம் என்றும், சோழ மரபு சூரியக்குலம் என்றும், சேர மரபு நெருப்புக்குலம் என்றும் தங்களைக் கூறிக் கொண்டனர்.

பாண்டியர்களின் ஆட்சிப்பரப்பு நிலநடுக் கோட்டையும் அதன் அருகிலுள்ள பகுதிகளையும் சூழ்ந்திருந்ததால் வெப்பத்தின் தாக்கங்கள் அந்நாட்டில் மிகுந்து காணப்பட்டன. அதனால் குளிர்மையை வேண்டி, நிலவின் குளிர்க் கதிர்களை ஏற்று தம்மை நிலவின் மக்களாக அறிவித்துக் கொண்டனர். மற்ற இரு மரபினரும், நிலவைப் புறந்தள்ளாமல் நிலவைப் போன்று தோற்றமளிக்கும். வெள்ளைக் குடைகளை தங்கள் இருக்கைகளுக்கு மேல் அமைத்துக் கொண்டனர்.

சோழர்கள், சூரியனைத் தேர்வு செய்து கொண்டதற்கான காரணம் யாதெனில், ஏற்கனவே பாண்டியர்கள் நிலவைத் தேர்வு செய்து கொண்டனர் என்பதால் தான். மேலும் விந்தியம், இமயம் போன்ற வடபகுதிகளில் குளிர் அறியப்பட்டிருந்ததால் வெப்பம் தேவைப்பட்ட நிலையில், சூரியனைத் தேர்வு செய்து கொண்டனர். மேலும், சூரியனே வானத்து உறுப்புகளில் முதன்மை பெற்றிருந்ததும் மற்றொரு காரணமாகும். சூரியனின் வெப்பமும், ஆற்றலுமே உலகின் உயிர்களை வாழ்விப்பதும், சூரியனின்றி, உலகில் உயிர்கள் எவையும் வாழ இயலாது என்ற நிலையும் சோழர்களின் தேர்வுகான பிற காரணங்களாகும்.

சேரர்கள் நெருப்பைத் தேர்வு செய்து கொண்டனர். ஏற்கனவே, இரண்டு தீக்களையும் பாண்டியரும் சோழரும் தமதாக்கிக் கொண்ட நிலையில், சேரர்கள் நெருப்பைத் தேர்ந்து கொண்டனர். மேலும், கோடையில் தம் அரசுக்குட்பட்ட மலைப் பகுதிகளில் ஏற்படும் காட்டுத்தீயும் மற்றொரு காரணமாகச் சொல்லப்படும்.

வட இந்தியாவில் அறியப்படும் சூரிய மற்றும் திங்கள் மரபின் அரசுகள் முறையே சோழர் மற்றும், பாண்டிய மரபுகளின் வழித் தோன்றல்களேயாவர். அவர்கள், தமிழ் நாட்டின் மரபுகளினின்றும் பிரிந்து சென்றவர்களாவர்.

பாண்டியர்களின் முதல் தலை நகரம் மதுரை ஆகும். அம்மரபைத் தோற்றுவித்த பாண்டியன் யார் எனத் தெரியவில்லை. மதுரை என்பதற்குச் சரியான பொருள் திங்கள் நகர் என்பதாகும். மதி என்ற திங்களைக் குறித்த சொல்லினின்றும் விரிந்தது. மதிரை என்றே முதலில் சொல்லப்பட்டு, பின்னர் மதுரை என்றானது.

குதித்தோடுவது குதிரை என்று சொல்லப்பட்டதை ஒப்பு நோக்குக. எதிர்கை என்பது, எதுகையானது போல், மதிரை-மதுரையானது.

ஆரியர் வருகைக்கு முற்பட்ட இந்தியாவை பாண்டியர்,

சோழர், சேரர் ஆகிய மூன்று மரபினரும் தங்களுக்குள் பிரித்துக் கொண்டு ஆண்டு வந்தனர். அம்மூவரும் தமிழர்களே என்பதால், நாளடைவில் தென்னிந்தியாவில் தமிழர்களும் வட இந்தியாவில் திராவிடர்களது நிலை கொண்டனர்.

குமரிக் கண்டத்தின் ஒரு பகுதி அழிந்த நிலையில், அங்கு வாழ்ந்திருந்த மக்களில் உயிர் பிழைத்தோர் வடக்கே புலம் பெயர்ந்து சென்று அங்கு மதுரை என்ற பழைய பாண்டிய மன்னர்களின் தலை நகர்ப் பெயரையே சூட்டி, தங்கள் முன்னோர்களையும் நினைவு கூர்ந்தனர். அண்மைக் காலங்களில் அமெரிக்காவிலும், ஆசுத்திரேலியாவிலும், இங்கிலாந்து மக்களின் ஊர்ப் பெயர்கள் சூட்டப்பட்டதை ஒப்பு நோக்கலாம். வட இந்தியர்களின் ஒலிப்பின் படி, மதுரை, மத்ரா என மாற்றம் பெற்றது. குமரிக் கண்டத்து மதுரை தென் மதுரையென்றும் வட இந்திய மதுரை வட மதுரையென்றும் சொல்லப்பட்டன. டாக்டர். கால்டுவெல் தென்மதுரையை தற்போதுள்ள தமிழ் நாட்டின் மதுரை நகர் என்று அடையாளப்படுத்துவது தவறானது மட்டுமன்றி, குமரிக்கண்ட அழிவு பற்றிய சிந்தனை அவருக்கு இருந்திருக்கவில்லை என்பதையே காட்டுகின்றது.

திராவிட மொழிகளினின்றும் திரிபுபட்ட, மலைப்பகுதிகளை வங்காளம், பலுச்சிச்தான் ஆகியவற்றின் மொழிகளையும், இந்தி உள்ளிட்ட மொழிகளையும் தற்காலத்தில், ஆரியமொழியின் திரிபுகளாகக் காட்டுகின்றனர். கல்கத்தாவின் காளி வழிபாடு, ஊர்ப் பெயர்களான பாடலிபுரம், நாகபுரி, குலமரபுப் பெயர்களான பணியா, சேட்டு ஆகியவை திராவிட மொழிகள் வரலாற்றுக் காலத்துக்கு முன்பே வட இந்தியாவில் நிலை பெற்றிருந்ததை உறுதி செய்கின்றன.

சோழர் என்ற சொல் சோல் அல்லது நெல் என்ற சொல்லின்றே விரிந்ததாகத் தெரிகின்றது. சோழநாடு நெல்லைப் பயிரிடுவதில் பழங்காலம் தொட்டு சிறப்புற்று வந்துள்ளது.

கிறித்துப் பிறப்பாண்டுகளுக்குப் பிறகு, தற்போதுள்ள தஞ்சாவூர் மாவட்டம் அக்காலச் சோழநாட்டுப் பகுதி, தமிழ் நாட்டின் நெற்களஞ்சியம் என்றே வழங்கப்பட்டு வருகின்றது. ஔவையார் தமிழ் நாட்டின் நான்கு பகுதிகளைப் பற்றிச் சிறப்பித்துக் கூறும் போது சோழ வளநாடு சோறுடைத்து என்று சோழ நாட்டைக் குறிப்பிடுகின்றார். சோறு என்ற சொல் சமைக்கப்பட்ட அரிசியைக் குறிப்பது, சோல் என்ற சொல்லின் நீட்சி எனலாம். தமிழர்கள் அக்காலத்தில் நெற்பயிரைக் தற்செயலாகத் தான் தஞ்சாவூர்ப் பகுதியில் கண்டறிந்திருக்க வேண்டும். ஒவ்வொரு தவசமும் அவ்வாறே கண்டறிந்து பயிரப்பட்டிருக்க வேண்டும். வீட்டு விலங்குகளும், மாந்த வளர்ச்சியில் நட்பு விலங்குகளாயின.

லகரம், ளகரம், ழகரமாக மாறுவது, தமிழில் இயல்பானது.

எ.கா கல்-கள்-காள்-காளம்-காடிகம் : அனைத்தும் கறுமையைக் குறிப்பன.

மல்-மால்-மலை : கறுமை, கறுமேகம், மழை.

கில்-கிள்,கிழ் : தோண்டு, கிழி, அடியில் தோண்டு.

பொல்-பொழ், போழ் : உட்புழை

சேர என்ற பெயர், சேர-சாரல் என்ற மலைச் சரிவிலிருந்து பெறப்பட்டது. மலை நாட்டுத் தலைவன், சாரல் நாடன் என்று செய்யுட்களில் அழைக்கப்படுகிறான். சேர நாடு தன் நிலவமைப்பில் அரசியலால் பிளவுபட்ட போதிலும் வடக்கிலிருந்து தெற்காக செங்குத்தான சரிவுகளை இருபக்கங்களிலும் கொண்ட மேற்கு மலைத் தொடராக உள்ளது. உண்மையில் சேரமன்னன் மலைச் சரிவுகள் நிறைந்த நாட்டுக்குத் தலைவன் என்ற பொருளில், சாரலான் என்றே அழைக்கப்பட்டான். சேரலான்- சேரன் என்றவாறு இறுதிப்பட்டது. இத்தகைய மாற்றங்கள், தமிழின் ஒலி மற்றும் வாய்மொழி விதிகளுக்குட்பட்டே நிகழ்ந்துள்ளன.

## 7. தமிழின் பெருமைகள் பற்றி தெளிவில்லாத சூழல்கள்



1. குமரிக் கண்டம் என்ற தமிழர்களின் தாயகம், முற்றிலுமாக கடலுள் மூழ்கிப் போனது.

2. ஆரியத்துக்கு முன்பான தமிழ் இலக்கியங்கள் அழிக்கப்பட்டன. பழைய தமிழ் இலக்கியங்கள் மறைக்கப்பட்டன. கிடைத்தவற்றுக்குத் தவறான விளக்கங்கள் தரப்பட்டன.

3. இலக்கிய வழக்குகள், நாட்டுப்புற வழக்கும், சங்க காலத்துக்குப் பிறகு தமிழில் கலந்தன.

4. உண்மையான, தொன்மையான தமிழர் வரலாற்றை எழுதிய மறைந்த பி.டி. சீனிவாச அய்யங்கார், வி.ஆர், இராமச்சந்திர தீட்சிதர், கே.சி. சேச அய்யங்கார் ஆகியோரின் நூல்கள், தமிழறிஞர்களாலும், தமிழர்களாலும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. மக்களிடையே மதிப்பைப் பெறவில்லை. முறையாகப் பரப்புரை செய்யப்படவில்லை.

5. மரபுவழித் தமிழறிஞர்கள் பள்ளி, கல்லூரிகளில் வேலையின்றி இருப்பது அல்லது பணிகளிலிருந்து நீக்கப்பட்டது போன்ற காரணங்களால், தமிழின் பெருமைகளை நிலைநாட்ட முழுத் தெம்புடன் பணியாற்றிட இயலவில்லை.

6. பெரும்பாலான கடந்த தலை முறைகளின் குடிமக்கள், பலநூறாண்டுக் காலச் சமூகப் பின்னடைவுகளால், ஆரிய சூழ்ச்சிகளின் காரணமாக பின்னுக்குத் தள்ளப்பட்டனர்.

7. தமிழர்கள் கல்வியறிவில் பின் தங்கியிருந்ததும், ஏறக்குறைய எண்பது விழுக்காட்டினர் கல்வி நீக்கப்பட்டு சமற்கிருத மொழி திணிக்கப்பட்டதும், அப்போதும் இப்போதும் எப்போதும் அதனை எதிர்த்துத் தமிழர்கள் குரல் கொடுத்தனர்.

8. இந்துக்களால் வழிபாடுகள் செய்யப்படும் அனைத்துக் கோயில்களிலும் தமிழ்மொழி வழிபாடுகள் நீக்கப்பட்டு, சமற்கிருத மொழி திணிக்கப்பட்டதும் அப்போதும் இப்போதும் எப்போதும் அதனை எதிர்த்துத் தமிழர்கள் குரல் கொடுத்தனர்.

9. தமிழர்கள் மரபுவழியான சடங்குகளும் வழிபாட்டு முறைகளும், கோயில்களும் மறுக்கப்பட்டதோடு வேத, சமற்கிருதச் சடங்குகள் புகுத்தப்பட்டன.

10. ஆரியத்துக்கு முற்பட்டு, தமிழில் அறியப்பட்டிருந்த கலைகள் மற்றும் அறிவியல் சார்ந்த நூல்கள் சமற்கிருதத்தில் மொழி மாற்றம் செய்யப்பட்டு, தமிழ் மூலங்கள் அழிக்கப்பட்டதால் சமற்கிருத நடைமுறைகளே, தமிழுக்கும் முதன்மையானது என்று சொல்லப்பட்டன.

11. சமற்கிருதம் கற்றறிருந்தவர்கள் கல்வியறிவில் முதன்மை பெற்றிருந்ததும், சமூகத்திலும் அதிகார அரசியலிலும் செல்வாக்கு பெற்றிருந்தனர்.

12. எங்கும் பரலாக அறியப்பட்டிருந்த சமற்கிருதப் பண்டிதர்களும் சமற்கிருதத்தை உலக அளவில் கொண்டு செல்ல இந்தியாவில் எடுக்கப்பட்ட முயற்சிகளும், தமிழை மறைப்பதற்கும் அழிப்பதற்கும் தூண்டின.

13. தமிழர்களில் தற்காலத்தில் பெரும்பாலானவர்கள் சமற்கிருதத் சொற்பெயர்களைக் கொண்டிருப்பது, தமிழ்

நாட்டின் பெரும்பாலான திருக்கோயில்களின் பெயர்கள், சமற்கிருதத்தில் சொல்லப்படுவது அல்லது தமிழுக்கு இணையான சமற்கிருதப் பொருளில் மாற்றம் செய்வது.

14. இந்தியாவில் தென் கோடியில இருக்கும் தமிழ்நாடும், தமிழும் சமற்கிருதத்தைப் போல், வெளிநாட்டவரின் கவனத்தை ஈர்க்க இயலாத புவியியல் அமைப்பாக இருந்தது.

15. தென்னிந்தியாவில், திராவிட மக்கள் அனைவரும் ஆரியத்தை ஏற்றுக் கொண்டு, அவர்களின் நடை முறைகளை எதிர்க்காத நிலையில், தமிழ்நாடு தனிமைப்படுத்தப்பட்டு சிறுபான்மையாக மாறியது.

**கால்டு வெல்லின் தவறுகள்.**

1. சேர ,சோழ, பாண்டியர்கள் தமிழரிடையே தொடக்க காலங்களில் தனித்தனியான இனக்குழுக்கள் என்றும், தமிழ்நாடு மூன்று இனக்குழுக்களையுடையது என்றும், டாக்டர் கால்டுவெல் கருதினார். அவ்வாறான கருத்து தவறானது.

   தமிழ் என்ற சொல்லை ஆய்வு செய்த பின் அவர் கூறுவது, " தமிழ் என்ற சொல்லின் மூலமும் தோற்றமும் பற்றிய உரையாடல்களும், சான்றுகளில்லாத தன்மைகளும், மூன்று பிரிவுகளாக தமிழர்கள் அறியப்பட்ட நிலையில் சேர, சோழ, பாண்டியர்களே தமிழர்களின் முன்னோர்கள் எனக் கருதலாம்.

2. மூன்றாம் தமிழ்ச் சங்கம் கி.மு.500 முதல் கி.பி 400 வரையிலான கால அளவில் நடைமுறையில் இருந்தது எனக் குறிப்பிடுகிறார். கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் ஜைன சங்கம் தோற்றுவிக்கப்பட்டது.

3. சொல் திரிபுகள் பற்றி, ஒவ்வொரு முறையும் தவறிழைக்கின்றார். தமிழ்-திராவிடத்திலிருந்தும், உலகு - லோக (சம), அரசு-ராச(சம), திரு-சிறீ (சம), ஆயிரம் -சகஸ்ர என்றவாறு தவறாகவே கூறிவந்துள்ளார்.

4. திராவிட நாகரிகம், ஆரிய நாகரிகத்தோடு ஒப்பிடுகையில் வலிமையிழந்து காணப்படுவதாக, மதிப்பீடு செய்கிறார். சமற்கிருதம், திராவிட மொழிகள் மீது மேலாண்மை செய்வதாகவும் கருதுகிறார்.

பழங்காலத் திராவிடர்கள் காட்டு மக்களாகவோ விலங்காண்டிகளாகவோ, தாழ்வு நிலை மக்களாகவோ கருதவும், தோன்றவும் இல்லை. காட்டு மக்களாக இருந்த போதிலும் திராவிடர்கள், தங்களுக்கென சில நாகரிக வாழ்க்கை முறைமைகளைப் பெற்றிருந்தார்கள். பிராமணர்களுக்கு முன் தென்னிந்தியாவில் வாழ்ந்து வந்தவர்கள் என்று மட்டுமே கருதலாம்.

தமிழ்ச் சொற்கள் தரும் சான்றுகளிலிருந்து, தமிழர்கள் பற்றிய சில தகவல்களை அறிந்து கொள்கிறோம்.

1. மன்னர்கள் வலிமையான வீடுகளில் வாழ்ந்திருந்து, தமது நாட்டின் சிறிய சில மாவட்டப் பகுதிகளை ஆண்டு வந்தனர்.
2. இடைக்காலத்தில் சில பாடகர்கள் திருவிழாக்களில் பாடல்களைப் பாடிவந்தனர்.
3. தமிழர்களுக்குத் தங்கள் மொழிக்கான எழுத்து வடிவங்கள் இருந்தன. பனை ஓலைகளில் எழுதி வந்தனர்.
4. அந்தப் பனை ஓலைகளைக் கொண்ட ஒரு கட்டு, ஒரு நூலாகக் கருதப்பட்டது.
5. தமிழர்கள் கடவுள் இருப்பதை நம்பியிருந்தனர். கடவுளை கோ என்றும் மன்னர் என்றும் அழைத்தனர். இதன்மூலம் பழைய இந்து சமயம் பற்றிய உண்மையான செய்திகள் குறைவாகவே உள்ளன.
6. பெருங்கோயில்களை அவர்கள் கட்டவில்லை. கடவுளின் இல்லம் என்று அறியப்படும் கோ-இல் என்ற சொல்லைப் பயன்படுத்தினர்.
7. தமிழர்களுக்கு சட்டங்களும், வழக்குகளும்,

வழக்காறுகளும் இருந்தன. ஆனால் வழக்குரைப்பவர்களோ நடுவமன்ற அறவோர்களோ அறியப்படவில்லை.

8. திருமணம் என்பது நடைமுறையில் இருந்தது.

9. தகரம், ஈயம், துத்தநாகம் ஆகியவற்றைத் தவிர்த்த கனிமங்களை அறிந்திருந்தனர்.

10. கோள்களைப் பற்றி அறிந்திருந்தாலும் வெள்ளி, சனியைப் பற்றி அறிந்திருக்கவில்லை.

11. மருந்து, மருத்துவம் பற்றி அறிந்திருந்தனர்.

12. ஊர்கள், நகரங்கள், பெருமளவில் இருந்தன.

13. வள்ளங்கள், படகுகள், சிறிய அளவிலான மேலடுக்கைக் கொண்ட கப்பல்களும் இருந்தன.

14. இலங்கையைத் தவிர்த்த கடல் கடந்துள்ள நாடுகளைப் பற்றித் தமிழர்கள் அறிந்திருக்கவில்லை. இலங்கைக்கும் குறைந்த ஆழம் கொண்ட கடல்வழியே கால் நடையாகவும் சென்றுவந்தனர். நிலவியல் தொடர்பாக தீவு, கண்டம், ஆகியவற்றை விளக்க தமிழில் சொற்கள் இல்லை.

15. வேளாண்மையில் சிறந்த அறிவைப் பெற்றிருந்தனர்.

16. போர்களில் விருப்பம் கொண்டிருந்தனர். வில், அம்பு, ஈட்டி, வாள் போன்றவை பயன்பாட்டில் இருந்தன.

17. நூற்பு, நெசவு, சாயம் தோய்த்தல் ஆகிய தொழில்கள் அறியப்பட்டிருந்தன.

18. மட்பாண்டங்கள் செய்வதில் திறமை பெற்றிருந்தனர்.

டாக்டர். கால்டுவெல்லின் இரண்டாவது வெளியீடான, திராவிட மொழிகள் பற்றிய ஒப்பிலக்கண நூலில், மேற்கண்ட செய்திகள் இடம் பெற்றுள்ளன. இந்நூல், ஆய்வுகள் அடிப்படையில் முதல் நூலாகக் கருதப்பட்டாலும், இந்நூலில் தமிழர்களைப் பற்றிய தவறான இழுக்கான செய்திகள் இடம்

பெற்றுள்ளன. இவற்றில் சிறப்பாகவும், முதன்மையாகவும் கூற வேண்டுமானால், கடல்களுக்கப்பால் உள்ள மக்களைப் பற்றி, தமிழர்களுக்கு எதுவும் தெரியாது என்பதே. தொல்காப்பியம் கி.மு.750 ஆண்டுகளிலேயே, தமிழர்கள் கடல் கடந்த வணிகத்தை மேற்கொண்டிருந்தனர் என்று கூறுகிறது. குமரிக்கண்டத்து பாண்டிய மன்னன், சாலி என்ற தீவின் மீது கடற்போர் மேற்கொண்டதாக, சிலப்பதிகாரம் கூறுகிறது. (சாலி என்ற பெயர் சமற்கிருதத்தில் சாவா என மாற்றம் பெற்றுள்ளது).

சாலியைப் வென்ற பாண்டியன், மணிபொருந்திய கழல்களையுடைய கால்களால் சாலித் தீவின் கடற்கரையை மிதித்தான். அப்பதிவை, அழித்த அலைகள் பாண்டியனைப் பழிதீர்க்கும் நோக்கில் அமைதிப் பெருவாரி பாண்டியனுடைய ஆட்சிப் பகுதிகளை நாளடைவில் அழித்தது. இப்பொழுதும், தமிழர்கள் கடல்களைத் தாண்டிச் சென்றதற்குச் சான்றுகளாக மதுரை அல்லது சுமத்ரா என்னும், பொருளை போர்னியா என்றும், மலையம் மலையா என்றும் அழைக்கப்படுகின்றன. பெருங்கடல்களைக் கடந்து, கடலோடிய இனம், பழங்காலத்துத் தமிழ் இனமாகும். மரக்கலங்களைக் கட்டும் தொழில் நுணுக்கங்களை அறிந்திருந்த பழந்தமிழர்கள், கட்டும் தளங்களையும் (ship yards) கொண்டிருந்தனர். இலத்தீன் மொழியில் அறியப்படும் மரக்கலத்தை குறித்த நாவிசு என்ற சொல், நாவாய் என்ற சொல்லிருந்தும் பர்கா, படகு என்ற சொல்லிலிருந்தும் திரிந்தவை எனலாம்.

தமிழர்களைப் பற்றிய தவறான, இழுக்கான, அவர்தம் பெருமைகளைச் சிறுமைப்படுத்தும் வகையில் கருத்துக்களைத் தெரிவித்துள்ள டாக்டர் கால்டுவெல்லை கண்டனத்துக் குள்ளாக்க வேண்டியதில்லை. அவருக்கு தமிழ்- தமிழர் பற்றிய ஆழமான அறிவும், குறிப்பாக, தமிழ் இலக்கியங்களைப் பற்றிய சிந்தனைத் தெளிவும் இருந்ததில்லை. தமிழர்களுக்கு எதிராக எழுதும், தமிழ்நாட்டு வரலாற்று ஆசிரியர்கள், தாங்களே தமிழுக்கு மேலாண்மைக் காரர்கள் என்று நினைத்துக் கொண்டிருந்தனர். அவர்களையே நாம் இகழ்ந்து பேச வேண்டும்.

கடலில் மூழ்கிப் போன, குமரிக்கண்டம் பற்றிக் கேள்விப்பட்டிராத டாக்டர் கால்டுவெல் தமிழ் நாகரிகத்தின் தொடக்க இடம் கொற்கையே என்று கருதினார். அடியிற்கண்டவாறு அவர் எழுதுகிறார்.

" திராவிடர்களின் பழங்கால நாகரிகம், உறுதியற்ற செய்திகளால், கதைகளாகச் சொல்லப்படுகின்றன. பாண்டியர்கள், தமிழர்களில் முதல் அரசை அமைத்தார் என்றும், அம்முதல் இடம் கொற்கை நகரமே என்றும கருதப்படுகின்றது. தென்னிந்தியத் தீவக் குறையின் தென் முனையில் அறியப்படும் தாமிர பருணியாற்றங்கரையில் கொற்கை நகரம் கட்டப்பட்டது".

தமிழர்களின் நாகரிகம், தொடக்க நிலையிலேயே இருந்தது என்றும், பிற்காலத்தில் அது பிராமணர்களால் வளர்க்கப்பட்டது என்றும் கருதினார். மற்றொரு தவறான குறிப்பில் வெள்ளி, சனி கோள்களைப் பற்றி, தமிழர்கள் அறியாதிருத்தனர் என்று கூறுகிறார்.

(ஞாயிறு) திங்கள், செவ்வாய், அறிவன், வியாழன், வெள்ளி, காரி போன்ற கோள்களைக் கண்டறிந்து, வாரத்தின் நாட்கள் ஏழு எனவே முதன் முதல் அறிவித்தவர்கள், வானியலில் முழுவதுமாகத் தேர்ச்சி பெற்றிருந்தவர்கள் அக்காலத் தமிழர்களே. சமற்கிருதம் தமிழ்நாட்டில் புகுத்தப்பட்ட போது, இடைக்காலத்தில், பிராமணர்கள், தமிழ்ப் பெயர்களை சமற்கிருதத்துக்கு மாற்றினர். அறிவன்காரி என்ற இரு வார நாட்களையும் மாற்றி புதன், சனியெனத் திருத்தினர். திராவிட மொழியியலார், தமிழில் அவ்விரு நாட்களின் பெயர்களும் உள்ளன என்பதை அறியாதிருந்தனர்.

மேலும் கூறுகிறார். "சமற்கிருதம், இந்நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும், வடக்கு அல்லது தெற்கில், குறிப்பாகத் தென்கிழக்கில் ஒவ்வொரு பகுதியிலும் பிராமணர்களால் புரிந்து கொள்ளப்பட்டது என்பதை முழுவதுமாக ஏற்க இயலாது போனாலும், சமற்கிருதத்துக்கு திராவிடர்கள் கடன்பட்டிருக்கிறார்கள் எனலாம். திராவிடரின் வாழ்க்கை,

கலைகள், இலக்கியங்கள் ஆகியவற்றிற்கு சமற்கிருத மொழியின் பங்களிப்பு, பல நிலைகளிலும் காணப்படுகின்றது. "திராவிடர்களின் நாகரிகம், தென்னிந்தியாவைச் சார்ந்தது என்றாலும், அதன் விளைவான வளர்ச்சியை ஆரியர் பற்றியும், குறிப்பாக காவிரி தாமிரபரணி ஆற்றுச் சமவெளிகள் மற்றும் பிற ஆறுகள் பற்றியும் அறிந்த ஆரியர்கள், இப்பகுதிகளால் ஈர்க்கப்பட்டு தென்னிந்தியாவுக்கு வந்தனர் ".

"தெலுங்கு, தமிழ், மலையாளம், கன்னடம் ஆகிய திராவிட மொழிகளின் வரிவடிங்களும் எழுத்து முறைகளும், கிரந்தம் அல்லது சமற்கிருத எழுத்துக்களைப் பின்பற்றி தமிழில எழுதப்பட்டன. அம்முறை, தேவநாகரி அல்லது அதற்கு முன்பு அறியப்பட்டிருந்த அசோகனின் கல்வெட்டு எழுத்து முறைகளில் மாற்றம் செய்து கொண்டு எழுதப்பட்டன. தக்காணப் பகுதிகளில் பனை ஓலைகளில் இரும்பு ஆணிகளால் அவை எழுதப்பட்டன ".

தமிழின் நெடுங்கணக்கு முறை தொடக்க காலத் தமிழனால் உருவாக்கப்பட்டது. முப்பது ஒலிகளில் 12 மெய்யொலிகளும்,18 உயிர் மெய்யொலிகளும் கொண்டு ரகரமும், னகரமும் புதிதானது மற்றவை எளிமையானவை. தமிழின் உயிர்களில் மூன்று சுட்டெழுத்துகளாகும். அவை ஆ-ஈ, ஊ-அ, இ-உ என்பனவாகும்.

தமிழில் வல்லொலிகளாகச் சொல்லப்படும் ஆறு எழுத்துகளும், சமற்கிருத எழுத்துகளைப் போல், வலிந்து கடுமையாக ஒலிக்கப்படுவதில்லை. இரட்டிப்பு ஒலிகளையும் கொண்டவையன்று. அவை, மென்மையாகவும் தொண்டக் குழிக்கு வெளியில் மூக்கின் வழியாக வெளிப்படுபவை. இவ்வொலிப்புகள், தமிழ் தோன்றிய காலத்திலிருந்து மாற்றம் பெறாமல் வந்ததுள்ளன. தமிழர்கள் நடுத்தரைக் கடல் பகுதியினின்றும் தமிழகம் வந்து குடியேறிய பின்பு, சமஸ்கிருதத்தின் வல்லொலிகளை மெல்லொலிகளாக மாற்றிக் கொண்டனர் என்று தெளிவு பெறாத மயக்கத்தில், சமற்கிருத மொழியியலார் கூறி வருகின்றார். ங்-ஞ்-ண்-த்-ப்-ட் ஆகியவை,

தமிழில் அழுத்தம் குறைந்து முற்றிலும் தவிர்க்கப்பட்ட மூச்சொலிகளாகும். எந்தவொரு தமிழ்ச் சொல்லும், அசையுள்ள (syllabic) உயர் மெய்யிலேயே தொடங்கும், வல்லொலியில் முடியும். தொடக்க வல்லொலி எழுத்து ஒலிப்பின் அழுத்தம் பற்றி அளவிடப்படும். இவ்வகையான, எளிமையான தமிழின் மொழியியல் கூறுகள் இயற்கையாக அமையப் பெற்றவை. மாந்த மொழி வரலாற்றில் அதன் தொன்மை சிறப்பாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

பழங்காலத்தில், தமிழ் எழுத்துகள் இரண்டு முறைகளில் எழுதப்பட்டன. ஒன்று, பனை ஓலைகளில் இரும்பு ஆணிகளால் எழுதப்பட்ட கூட்டெழத்து முறை. இரண்டாவது, கற்பாறைகளில் செப்புத் தட்டுகளில் பொறிக்கப்பட்ட முறை. தொல்காப்பியமும் நன்னூலும், கூட்டெழுத்து முறையில் எழுதப்பட்டன. கி.பி. 13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நன்னூல், தமிழின் வரிவடிவங்கள், முன்பு இருந்ததைப் போல் இப்போதும் பழமை மாறாமலேயே உள்ளன என்றும், இகரத்துக்கும் ஒகரத்துக்கும் இடப்பட்டிருந்த புள்ளிகள் நீக்கப்பட்டுள்ளன என்றும் குறிப்பிடுகின்றது.

இந்த எழுத்து முறை, தமிழின் தொடர் எழுத்து முறையைப் பின்பற்றியது. தேவநாகரி எழுத்து முறைபற்றி மோனியர் வில்லியம்சு இவ்வாறு எழுதுகிறார்.

“சமற்கிருதத்தின் மிகப்பழமையான கல்வெட்டுக் குறிப்பு, கத்திய வாரியிலுள்ள சீனா கார் என்ற இடத்தில் அறியப்பட்டுள்ளது. இது ருத்ர தாமன் கல்வெட்டென்று சொல்லப்படுகிறது. இதன் காலம், கி.பி.இரண்டாம் நூற்றாண்டு. இது, நாகரிகம் இல்லாமல், பழைய எழுத்து முறையில் உள்ளது. போவர் என்ற ஆய்வாளர் கி.பி 400 ஆண்டுகளில், நாகரி வடிவத்தில் பெரும் முன்னேற்றம் இருந்ததாகக் கூறுகிறார். கி.பி.750 ஆம் ஆண்டைச் சேர்ந்த தந்தி துர்கா கல்வெட்டு, தற்கால நாகரி எழுத்து வடிவங்களைக் கொண்டுள்ளது என்றாலும், முதல் கையெழுத்துப்படிகள், உண்மையில் கி.பி.11ஆம் நூற்றாண்டுக்கு முன்பு அறியப்படவில்லை.

தமிழ் வரிவடிவ இயலில் 12 கூறுகள், அகரவரிசைப்படி முதலில் தமிழ் இலக்கண வல்லுநர்களால் கண்டறியப்பட்டது. தாறுமாறான கலப்புகளைக் கொண்ட மேலைநாட்டு எழுத்து முறைகள், ஆரியத்துக்கும் செமிட்டிக் மொழிகளுக்கும் பொருந்தும். வேத ஆரியர்கள், இந்தியாவுக்குள் நுழைந்த போது, அவர்களுக்கென எழுத்து வடிவங்களோ, இலக்கியங்களோ இருந்ததில்லை. சமற்கிருத வரிவடிவங்கள், தமிழைப் பின்பற்றி, ஆரியர்கள், தமிழ் நாட்டுக்கு வந்த பிறகே உருவாக்கப்பட்டன. பின்னர், திராவிட மொழிகளுக்கான வரி வடிவங்கள், சமற்கிருத வரிவடிவங்களைப் பின்பற்றி உருவாக்கப்பட்டன. இந்நிகழ்வுகள், கி.பி.9 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே எனலாம். தமிழின் அனைத்து சிறப்புகளையும் உள்வாங்கிக் கொண்ட நிலையில் சமற்கிருதச் சொற்களும் மெய், உயிர்மெய் எழுத்துகளும் உருவாக்கப்பட்டன என்பதை ஒப்பீட்டு முறையில் ஆய்வு செய்கையில் அறியலாம்.

டாக்டர். கால்டுவெல், சமற்கிருதத்தின் தவறான கண்ணோட்டத்தில், தமிழ் இலக்கணத்தை அணுகி, தவறான முடிவுக்கு வந்து விட்டார். "திராவிட மொழிகளின் வேற்றுமை இலக்கண முறைகளை ஆய்வு செய்ய முற்படும் போது, திராவிட மொழி இலக்கண வல்லுநர்களால் கட்டமைக்கப்பட்ட விதிமுறைகளை நாம் பின்பற்ற வேண்டும். இந்தக் கட்டமைப்பு, சமற்கிருதத்தில் உள்ளவை போன்றே காணப்படுகின்றன. சமற்கிருதத்தைத் திராவிட மொழிகள் பின்பற்றியதிலும் பல தவறுகள் நேர்ந்துள்ளன. சமற்கிருத்தில் எட்டு வேற்றுமை இலக்கண முறைகள் உள்ளன. தமிழிலும் தெலுங்கிலும் அவை தெளிவில்லாமல் உள்ளன. ஒவ்வொரு பின்னுருபும் ஒரு பெயர்ச் சொல்லோடு இணைந்து, சரியாகப் பேசப்படுவதால், பேசுபவனின் எதிர்பார்ப்பும், அவன் வெளிப்படுத்துவதும் பொருந்தி அமைகின்றன. தமிழ் இலக்கண ஆசிரியர்களும், சமற்கிருதக் கட்டமைப்பையே பின்பற்றினர்".

மேற்கண்ட கருத்துகள், டாக்டர் கால்டுவெல்லின் குழப்பமான தெளிவற்ற நிலைகளால் ஏற்பட்ட தவறாகும். ஒரு ஆய்வாளராகத் தன்னை முன்னிலைப் படுத்திக் கொள்ள

எண்ணுகின்றவர், தமிழின் மிகச்சிறிய எளிமையான இலக்கண விதிகளைக் கூட புரிந்து கொள்ளாமல் கருத்துரைத்துள்ளார் என்பது வியப்பைத் தருகின்றது. தொல்காப்பியத்தில் முற்றிலுமாக, அவருக்குச் சரியான புரிதல் இல்லவேயில்லை என்பதை நம்மால் உணர முடிகிறது.

தமிழ் இலக்கணமே, எடுத்துக்காட்டுகளைக் கொடுத்து உருப்படிவடிமாக உதவி (Model) சமற்கிருதம் உள்ளிட்ட அனைத்து இந்திய மொழிகளுக்கும் முன்பொலிவாக இருந்துள்ளது. எனவே, சமற்கிருத மூலமே தமிழுக்கு வழிகாட்டுதலாக அமைந்துள்ளது என்ற கூற்று வரலாற்றில் தலைகீழான செய்தியாகும்.

வழக்குச் சொற்கள் ஒரு பெயர்ச் சொல்லுக்கும் வினைச் சொல்லுக்கும் அல்லது ஒரு பெயர்ச் சொல்லுக்கும் கூட உள்ள தொடர்புகளை வலியுறுத்துகின்றன. இந்தத் தொடர்புகள், உச்சநிலையில் ஒன்பது வகைகளாக அறியப்படும். இணையும் பாங்குள்ள சொற்களை, அவை பொருந்தும் சொற்களோடு பின் வைப்பாக இணைத்து, அவை எட்டு என்ற எண்ணிக்கையில் இருப்பதாக, தமிழ் இலக்கண வல்லுநர்கள் இணைத்துக் கூறினார். (Nominative, Accusative,Instrumental, Conjuctive,Dative, Ablative, Possessive, Locative and Vocative) ஆங்கிலத்தில் கூட, இரண்டு வகையான முன்னுருபுகள் உள்ளன என்பது நோக்குதற்குரியது.

எ.கா அவன் பேனாவால் எழுதினான்.
உணவால் மட்டும் மனிதன் உயிர்வாழ்வதில்லை. } கருவி சார்ந்தவை.

அவன் தன் மகனுடன் வந்தான்
காவலன் அவனுடன் நின்றான் } கூட்டு சார்ந்தவை.

இலத்தீன் மொழி ஐந்து வழக்குகளையும், கிரேக்க மொழி ஆறையும் கொண்டுள்ளன. தமிழில் மட்டுமே எட்டு உள்ளன.

ஆரிய மொழிகள் திரிபு பட்டு, பெருமளவில் திருத்தம் செய்யப்பட்டு, மாற்றப்பட்டு அடையாளத் தன்மைகளுக்கு அப்பால் உள்ளன. அவற்றின் முடிப்பு அல்லது அறுமதித்

தன்மைகள் ஒன்று போலவே பிரிக்க இயலாதவை. ஆனால் தொன்மையான தமிழ் தொன்மைக் தன்மையை பெருமளவில் வெளிப்படுத்துவதோடு, பின்னுருபுகளும் வழக்கு முடிப்புகளும் சிறப்பு பெற்று விளங்குகின்றன. அவற்றை எளிதாகப் பிரிக்கவும் மாற்றி வைக்கவும், ஒரு பொருளைத் தரும் பிற சொற்களால் இயலும்.

தமிழில் முதல் வேற்றுமையென்பது, தொன்மைத் தன்மையைக் குறிப்பிடுபன.

| | எண்கள் | விளக்கம் குறிகள் | முடிவுகள் |
|---|---|---|---|
| 1. | முதல் | எழுவாய் | மாற்றப்படாத பெயர்ச்சொல் |
| 2. | இரண்டு | செய்பொருள் அய் | |
| 3. | மூன்று | கருவி | ஆல் |
| 4. | நான்கு | கொடை | கு |
| 5. | ஐந்து | நீக்கம் | இன் |
| 6. | ஆறு | கிழமை | அது |
| 7. | ஏழு | இடம் | கண் |
| 8. | எட்டு | விளி | (விளிவேற்றுமைப் பெயர் அல்லது எட்டாம்வேற்றுமை) |

மேற்கண்டவை பற்றி, டாக்டர் கால்டுவெல் அறிந்திருக்கவில்லை என்பது இரங்கத்தக்கது. சமற்கிருதத்துக்கான கட்டமைப்புகள் உண்மையில், தமிழ் முறைகளின் பின்பற்றலும், தழுவலுமே அது பற்றியே உம்மைத் தொகையிலான சொற்கள் கருவிச் சொற்களாக, சமற்கிருதத்தில் சேர்க்கப்பட்டன. தமிழில் அல் என்ற சொல், அதே பொருளில் சமற்கிருத்திலும் பயன்படுத்தப்படுவதையும் அறியலாம்.

## 8. அறிவு சார்ந்த மொழியியலின் தோற்றம்



இப்போதும் தமிழ் நாட்டிலுள்ள உயர் கல்வியைப் பெற்றுள்ள தமிழர்கள், வெள்ளைக்காரர்கள் எவற்றைச் சொன்னாலும், அவை, அறிவியல் சார்ந்த உண்மைகளே எனக் கூறிவருகின்றனர். தற்கால அறிவியல், மேலை நாடுகளில் தோன்றியவை, என்பது உண்மையே ஆனால் அவர்களுடைய மொழியைப் போல் அல்லாது, தமிழ் மொழியியல், தமிழ் நாட்டின் பழமையான தோற்றத் காலத்தைக் கொண்டதாகும்.

தொல்காப்பியம் என்ற கி.மு. 7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இலக்கண நூல், நான்கு நிலைகளிலான விளக்கத் தொகுதிகளைக் கொண்டது. அது, வேர்ச் சொற்கள் பற்றிய விளக்கங்களையும் தரும் எழுத்து, சொல், பொருள் என்ற தலைப்புகளைக் கொண்டது. தொடக்கத்தில் இது தமிழை, செந்தமிழ், கொடுந்தமிழ் என இருவகையாகப் பிரித்தது. சொற்களைக் குறிப்பிடுகையில், அவற்றை இயற்சொல் என்ற பழமையான சொற்களாகவும், திரிசொல் என்ற திரிபுபட்ட

சொற்களாகவும் குறிப்பிடுகின்றது. வட்டார அளவில் மாறுபட்டு, செம்மொழிச் சொற்களுக்கு மாறுபட்டுத் திரிந்த சொற்களான திசைச் சொல்லெனக் கூறுகிறது. தொல்காப்பியர் காலத்தில், வெளி மொழியாகத் தமிழ் நாட்டில் அறியப்பட்டிருந்தது சமற்கிருதம் மட்டுமே. சமற்கிருத ஆர்வலர்கள் தேவையில்லாமல் தமிழில் அச்சொற்களைக் கலந்தனர். அவை, வட சொல் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சமற்கிருதம் வட மொழியாதலால், அதற்குரிய சொற்களை வடசொல் என்றனர். தொல்காப்பியர் காலத்துக்கு முன்பு, சமற்கிருதம் தமிழில் கலந்திருக்கவில்லை.

அனைத்து வழிச் சொற்களும், ஆறு கூறுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளதை தொல்காப்பியம் விளக்குகிறது. முதனிலை, ஈறு, இடைநிலை, புணர்ச்சி, சாரியை, திரிபு எனப்பட்டன, இவை, தொல்காப்பியத்தில் தனி அதிகாரமாகச் சொல்லப்படாமல் எழுத்து, சொல் ஆகிய பகுதிகளில் பரவலாகச் சொல்லப்பட்டுள்ளன.

அவ்வாறு, தமிழர்கள் தங்கள் மொழியை அறிவியல் மொழியாக உயர்ந்த நிலைக்கு உயர்த்தி வளர்த்திருந்தனர். ஆனால் சமற்கிருத ஆசிரியர்கள், தமிழுக்கு மாறுபட்ட நிலைகளிலேயே தூய்மையற்ற, அறிவியல் சாராதவாறே அம்மொழியை அறிமுகம் செய்தனர்.

1. சமற்கிருத தெய்வமொழியென்று ஏற்புடைமை இல்லாதவாறு கூறி வைத்தனர்.
2. அனைத்து மொழிகளும் சமற்கிருத்தினின்றே பிறந்ததாகச் சொல்லப்பட்டது.
3. சமற்கிருதச் சொற்கள் எம்மொழியினின்றும் கடனாகப் பெறப்பட்டவையன்று

எனச் சொல்லப்பட்டாலும், பலர் அக்கருத்து தவறென்று கூறி, சமற்கிருதத்தில் உள்ள பிறமொழிச் சொற்களைச் சுட்டிக் காட்டினர்.

4. உருபன் மற்றும் பொருளன் நிலைகளுக்கு இடையேயான இணைப்பு நெடுங்காலத்துக்குரியது.

5. ஒரு தொகுப்புச் சொற்கள் இடுகுறிப் பெயர்களைக் கொண்டவை.

6. சமற்கிருத மந்திரங்கள் பயனுறு தன்மை கொண்டு, அவற்றின் சரியான ஒலிப்புகளில் சார்ந்து நிற்பவை. தவறான ஒலிப்புகள், பேரழிவான முடிவுகளைத் தரும் என்பர்.

7. வேத ஆரியமும் சமற்கிருதமும் ஏறக்குறைய, ஒன்றான சமமானவையே,

8. வேதம் நிலையானது, சில முனிவர்களால் கண்டறியப்பட்டது. அதனைத் தொகுத்தவர்கள் அவர்களல்லர்.

9. கலைகள், அறிவியல் தொடர்பானவை வேத மூலத்தினின்றும் பிறந்தவை.

வேதத்தின் மொழி அறிவியல், பிராமணர்களின் மொழி விளக்கங்களால் தடுமாறி புதைகுழி அல்லது சதுப்புக் குழியில் வீழ்ந்த கப்பலாக உள்ளது. மேலை மொழியாளர்கள், அதனைத் தவறான திசையில் செலுத்தியுள்ளனர்.

## 9. மயக்க வழுக்களான விளக்க மொழியியல்



விளக்க மொழியியலின் அடிப்படையான கோட்பாடுகளுள் ஒன்றான, அனைத்து மொழிகளும் தன் எண்ணப்படி உள்ளதாகக் கூறலாம். இடுகுறிப் பெயர்கள் என்றும் சொல்லலாம். உண்மையில் தமிழில் இது மறுக்கப்பட்டு, மாறுபட்டுள்ளது. மிகவும் தொன்மைக் காலத்து பண்பட்ட உலக மொழியான தமிழ் இடுகுறிப் பெயர்களைக் கொண்டிருக்கவில்லை யென்பதோடு, இப்போதும் தமிழ்ச் சொற்களின் தோற்ற வேர்களைக் கண்டறிய இயலும். தமிழின் இலக்கண ஆசிரியர்கள், தொடக்கத்திலிருந்தே தமிழை உறுதியாக நிலைப்படுத்தியிருப்பதோடு, அதில் பிரிவுகளே தோன்றாமல் பார்த்துக் கொண்டனர். உறுதியான சுட்டுப்பாடுகளைக் கொண்டு, தமிழ் காலந்தோறும் பழமை மாறாமல் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. ஆனால், மற்ற மொழிகளில் சொற்களில் பல திரிபு பட்டமையாலும் கட்டுப்பொருள் இல்லாமற் போனதாலும், கால இடைவெளிகளில் தமது நிலையினின்றும் பிரிந்து, ஒன்றுக்கான பொருள் மற்றொன்றின் மேல் ஏற்றிச் சொல்லப்பட்டது அல்லது அப்பொருளே மறக்கப்பட்டது.

சொற்களில் பழையன கழிந்து புதியன புகுவது வழக்கமான ஒன்று. சில காலங்களில் பல சொற்கள், கொச்சையான சொற்களாக மாறிப்போகும். ஆனாலும் பல சொற்கள், சிறப்பானவைகளாகவும், பொருத்த மானவைகளாகவும் உருவாகி, தொடர்ந்து பயன்பாட்டுக்கு வரும். அத்தகைய சொற்கள், இலக்கியங்களில் மட்டுமே இடம் பெறும். சில வகையான சொற்கள், மற்றவற்றை விட, மாறுதலுக்குள்ளாகும். எவையும் எப்போதும் நிலையானவையன்று. மிகவும் பரவலாகவும் சிறப்பாகவும் பயன்படுத்தப்பட்ட சொற்கள் கூட, ஆயிரம் ஆண்டுகளில் இருபது விழுக்காடு நிலையற்றதாகி விடும்.

மேலும் தனிப்பட்ட ஒருவன், பிறப்பிலிருந்து இறப்புவரை பேசும் சொற்கள், அவனுக்கு இயல்பாகவும் எளிமையாகவும், மற்றவர்களை விட பயன்பாட்டில் பெருமளவிலும் இருக்கும். ஒவ்வொருவனும் ஒரு நாளில் மூன்று புதிய சொற்களை அறிந்து கொள்கிறான். இந்த எண்ணிக்கை குறைவாகவும் இருக்கலாம். பலரும் தங்கள் வாழ்நாளில், தொடர்ந்த முயற்சிகளால் பல சொற்களைத் தமதாக்கிக் கொள்கின்றனர். தமிழைப் பொறுத்தவரை, இக்குறிப்பு சரியென்று கூற இயலாது. மற்ற மொழிகளில் இக்கூற்று உண்மையாக இருப்பின், அது மிகைப் படுத்திச் சொல்லப்பட்ட தாகவே கருதப்படும்.

ஒருவன் வெளி நாட்டு மொழிகளை சரியாக அம்மொழிக் காரர்களைப் போலவே ஒலித்துப் பேசுவதென்பது, மாயத் தோற்றம் போன்று விந்தையானதே. அவ்வாறு சரியாகப் பேசுவதற்கு, வாழ்நாள் முழுவதும் பயிற்சி பெற்றாலும், பலரால் அது வாய்க்கக் கூடியதன்று. பொதுவாக, ஒருவரின் குரல் நாளங்கள், இனத்துக்கு இனம், அவர்களின் உணவு, தட்பவெப்பச் சூழ்நிலை, பழக்கவழக்கங்கள் இவற்றால் மாறுபடும். இதுபற்றி ஒரு நிகழ்வு சொல்லப்படுவதுண்டு, ஓர் அமெரிக்கர், அண்ணாமலை நகர் செல்வதற்கு எழுமூரில்

பயணச் சீட்டுப் பெற்றார். அந்த அமெரிக்கரின் பேச்சொலிப்பைத் தவறாகப் புரிந்து கொண்ட, தொடர் வண்டித்துறை அலுவலர் அவருக்கு ஆனைமலை ரோட் செல்வதற்கான பயணச் சீட்டை அளித்ததாகக் கூறுவர்.

ஒரு நாட்டினின்றும் புலம் பெயர்ந்து வெளி நாட்டிலிருப்பவர்கள் தங்கள் தாய் நாட்டில் பேசப்படும் ஒலிப்பைப் போன்ற சொற்களைப் பேசுவர். புதிய நாட்டு மொழியை, அந்நாட்டு மக்களைப் போல் பேச முயற்சிப்பர். இருப்பினும் மரபு வழியில் வந்த உள்ளூர் மக்களே, அம்மொழியில் மேன்மை பெற இயலும்.

தமிழ் தனித்தன்மை வாய்ந்த, உயர்ந்து பண்படுத்தப்பட்ட மேன்மையாக தரம் வாய்ந்த மொழியாகும். பழங்குடியினர் அல்லது பண்படாத மொழிகள், தமிழ் நாட்டில் சில கல்வியறிவற்ற பிரிவினரிடைய பேச்சு மொழியாக உள்ளன. ஆனால் இவை, தமிழ் இலக்கணத்துக்குக் கட்டுப் பட்டவையன்று. தமிழ் இலக்கண விதிகள் தொடக்க காலம் முதல் இன்றுவரை, கடுமையாகப் பின்பற்றப்பட்டு வருகின்றன. இன்று தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களில், வண்ணனை மொழியியல் அறிமுகம் செய்யப்பட்டு, தமிழின் தரம் குறைக்கப்பட்டு திரிபுகளும் மாற்றங்களும் கொண்ட அம்மொழிகள் ஏற்கப்பட்டு ஊக்குவிக்கப்படுகின்றன. இந்நிலை, தமிழ்நாடு மற்றும் இந்தியப்பல்கலைக் கழகங்களில் உள்ள தமிழ்த்துறைகளில், போலித் தமிழறிஞர்களை உருவாக்க இடம் தருகின்றன. அத்துடன் மொழிகள் தொடர்பான இருக்கைகளில் தலைமையேற்கவும் வழிவகை செய்கின்றன. தரமற்ற பேச்சு வழக்கு, சமூகத்தில் மறுக்கப்படுவது போன்றே, நயன்துறையிலும் மறுக்கப்படுகின்றது. (Judiciary)

மேலை நாட்டு கிளை மொழியாளர்கள், நகைப்பிற்கிடமான கவனத்தை, தங்கள் கிளை மொழிகளில் செலுத்தி வகைப் படுத்துகின்றனர். சிறு கிளை மொழிகளை, ஆக்சு போர்டு அகராதி பின்வருமாறு விளக்கிக் கூறுகிறது.

" ஒரு மாவட்ட பகுதியிலுள்ள, ஒரு பிரிவு அல்லது மனிதனின் விந்தையான அரிதான பேச்சு வழக்கு" அவ்வாறான சொற்தொகுதி, ஒலிப்பு முறைகள், மரபுக் கூற்று போன்றவை ஒன்றைக் கிளை மொழியாக ஏற்க போதுமானவையல்ல. அத்தகைய கிளை மொழிகளை சேம்பர் இருபதாம் நூற்றாண்டு அகராதி கவனத்தில் கொண்டு அவை ஒரு குறிப்பிட்ட மாவட்ட அளவிலான விந்தையான சிறுகுழு பேசும் மொழியெனக் கருதுகிறது.

வண்ணனை மொழியியலின், கணக்கீடுகள், ஒரு வெறித்தனத்தை வளர்த்துள்ளன. அந்த சிந்தனையில் ஒவ்வொரு மொழியையும், மொழிக்குடும்பங்களையும் புரவகையில் (Proto type) தேட முயற்சிக்கின்றன. இவ்வாறான புரவகைச் சிந்தனை ஒரு மொழிக்குடும்பத்தின் உறுப்பு மொழிகள் தங்களுக்கென தனித்தாயை உடன் பிறந்தவனை உடன் பிறந்தவளைத் தேட வழிவகுக்கின்றது. அவ்வாறு தங்கள் தாயைக் கட்டமைத்துக் கொள்ள முயல்கின்றன. இது, மக்களின் முக வடிவங்களைக் கொண்டு தங்கள் தாயைக் கட்டமைத்துக் கொள்ள முயல்கின்றன. இது, மக்களின் முக வடிவங்களைக் கொண்டு தாயின் படத்தை வரைய முற்படும்

ஓவியன் அல்லது புகைப்படக் காரனின் செயல் போல உள்ளது.

வரலாற்றுச் சான்றுகளின் துணையில்லாததால், ஒரு மாயத்தோற்றம் ஏற்படக் கூடிய நிலை இது. ஒரு மொழியின் வரலாறும் இனவியலும் பின்பற்றப்பட்டிருந்தால், புரவகைக் கிளை மொழிகள் பற்றிய சிக்கல்கள் தோன்ற வாய்ப்பில்லை.

வரலாறு என்பது, கல்வியின் சீரிய கிளையாகும். அதனைக் கற்றுத் தெளிவதற்கு பொறுமையும், சிந்தனையும் வேண்டும். உலக வரலாறே, தெற்கிலிருந்து தான் தொடங்கப்பட வேண்டும். குறிப்பாகத் தமிழ் நாட்டிலிருந்து, மேலை நாட்டு ஆய்வாளர்கள் இந்திய ஐரோப்பிய மொழியின்

பிற்காலத்தில், சமற்கிருதத்துக்குச் சார்பான நிலைப்பாட்டை எடுத்தனர். அனைத்து மொழிகளுக்கும் முற்பட்ட தமிழோடு முரண்பட்டு குருட்டாம் போக்கில் அறிவியல் சாராத எந்த ஏரணமும் இல்லாத வெறுப்பின் உச்சத்தில் முடிவுகளை மேற்கொண்டனர். இஸ்ரேல் மக்கள், நாற்பது ஆண்டுகள் பாலைநிலங்களில் சுற்றித் திரிந்தாலும், இறுதியில் சரியான வழியைக் கண்டறிந்தனர். ஆனால், மேலை நாட்டு ஆய்வாளர்கள் சமற்கிருதம் என்ற பாலைவனத்தில் திரிந்தவர்கள், நாற்பது ஊழிகள் கடந்தாலும், நேர்வழியைக் காண மாட்டார்கள். ஆய்வுகளை வெறுப்பவர்களுக்கு குறிப்பாக, மாந்தவினத்தின் மொழிகள் பற்றிய விழிப்புணர்வை, வரலாற்றுக் கோணத்தில் வெறுப்பவர்களுக்கு, தங்களை மறைத்துக் கொள்ளும் வழியே வரமாக அமைந்து விடும். இந்தக் காரணம் பற்றியே, வண்ணனை மொழியின் சமற்கிருத மொழியியலாளர்களால், ஊக்கத்துடன் ஏற்றுக் கொள்ளப்பட்டு, இந்தியாவெங்கும் பரப்புரை செய்யப்பட்டு வருகின்றது.

வண்ணனை மொழியியல், சொற்கள், மொழிகள் பற்றிய வரலாற்றுத் திருத்தங்களின் அடிப்படையில், அதன் முன்னெடுப்பாளர்களால் சொற்களும் அவற்றிற்கான பொருளும் இலக்கியங்களில் உள்ளபடி பொருள் கொள்ளப்படுகின்றன. இது, புதிய மற்றும் அண்மைக்கால மொழிகளுக்குப் பொருத்தமாக அமையலாம். ஆனால், தமிழுக்கு இந்த முறை பொருத்தமாக அமையாது. தமிழ் இலக்கியத்திலுள்ள சொற்களையும் அதற்கான பொருளையும், அதற்கான சூழலையும் அவ்விடத்துக்கான தேவையையும் கருத்தில் கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக, பள்ளி என்ற சொல்லுக்கு இருபதுக்கும் மேற்பட்ட பொருள் உள்ளதாக தொல்காப்பியம் கூறுகிறது. தொன்மையான தொல்காப்பியத்தில் கண்டுள்ள அச்சொல்லுக்கு அண்மைக்

காலப் புரிதல், இடம் என்றவாறு பொருள்பற்றியது. தொல்காப்பியத்துக்கு முற்பட்ட நூல்கள் அறியப்படாத அல்லது மறக்கப்பட்ட நிலையில் தொல்காப்பியத்தின் சொற்களை மேற்கண்ட வண்ணனை மொழியியல் முறைகளில் அறிய இயலாது. தற்காலத்தில், அச்சொற்களின் தோற்றப் பொருளை அறிய முற்படுவதும் ஒன்று சேர்ப்பதும் நல்ல முயற்சியாகவும், ஏரணமாகவும் இருக்கும்.

உருபனின் (morphemes) மொத்த இழப்பு, மொழியியலில் தவிர்க்க இயலாத மாற்றமாகும். இந்த இழப்பு ஏறக்குறைய அனைத்து மொழிகளிலும் நிரலளவு (average) ஓரளவிலேயே உள்ளன. ஆயிரம் ஆண்டுகளில் விழுக்காடுகள் அடிப்படையான சொல் தொகுதிகளிலிருந்து இந்த இழப்பு ஏற்படுவதாக புள்ளிக் கணக்கு கூறுகிறது. ஒரு பொது மொழியினின்றும் கிளைக்கும் இரு மொழிகள், அவை பிரிந்த காலத்திலிருந்தும் இதே விழுக்காட்டு இழப்பைக் கொண்டுள்ளன. ஒவ்வொரு மொழியும் 81 விழுக்காட்டுச் சொற்களை, தன் வயத்தே நிலை நிறுத்திக் கொள்கின்றன. 200 உருபன்களில், ஒரு மொழி 162 உருபன்களைத் தக்க வைத்துக் கொண்டால், மற்றொரு மொழியும் அதே எண்ணிக்கையில் தக்க வைத்துக் கொள்ளும். ஆனால் இரண்டு மொழிகளும் ஒரே அளவிலானஇழப்பைக் கொண்டிருக்கும் என்பதற்கான காரணங்கள் இல்லை. மேற்கண்ட கணக்கு தலைகீழாகவும் மாறும். இரண்டு மொழிகளில் 66 விழுக்காடுகள் உருபன்கள் நிலைத்திருந்தால், அவை 1000 ஆண்டுகளுக்கு முன்பு கிளைத்திருக்கும் எனக் கருதலாம். அதுவே 14 விழுக்காடுகளாயிருந்தால் பிரிவுகாலம் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டது எனலாம். மிக விருப்பக் கணக்கியல் முறை

(glottochronology), இப்போதும் தொடக்கநிலையிலான வளர்ச்சியாகவே உள்ளது. இம்முறை, இரு மொழிகளுக்கான பயனுள்ள பொருள் விளக்க முறையைக் கொண்டுள்ளது. இம்முறை, குறிப்பிட்ட சில வரலாற்றுக் காலத்துக்கு முந்திய நிகழ்வுகளைஅறிய உதவுகிறது. கருமை 14 போன்ற, ஆய்வுகளின் உறுதியான முடிவுகள் புள்ளியியல் வகையிலானது. இந்த முறையிலான ஆய்வு முடிவுகள், ஓரளவுக்கு உச்ச பக்கமான காலக் கணிப்பைக் கொண்டிருக்கும். அந்த மதிப்பீட்டில், நிகழ்தகவுகளின் தவிர்ப்புகளும் இருக்கும். மேற்கண்ட, மிக விருப்பக் கணக்கியல் முறைக் கொள்கையை படிப்பவரின் அறிவுத் திறனுக்கு நான் விட்டு விடுகிறேன். இது வரையில் வண்ணனை மொழியியல் அறிஞர்கள், செய்துள்ள நல்ல பணிகள், பொதுவான பேச்சொலிகள் பற்றிய விளக்கங்களே. குறிப்பிட்ட உருபனியல் ஒலியியல் தொடர்பாக, முனைப்பாக எவற்றையும் ஆய்வு செய்யவில்லை. மாறாக, இவை தொடர்பான இதுவரையிலான ஆய்வுகள் மெச்சத்தக்க அளவில் இல்லை.

வண்ணனை மொழியியல் என்பதே, வரலாற்றுத் தொடர்புகள் அற்ற அறிவியல் சார்ந்த அடிப்படைக் கூறுகள் சொல்லாகவே உள்ளது. இந்த வகையான ஆய்வுமுறை, தூய்மையாகவும் எளிமையாகவும் அமைய இலக்கண மேலாண்மையையும், விதிகளையும் அம்மொழிகள் கொண்டிருக்க வேண்டும்.

## 10. மாக்சு முல்லர் கொள்கையின் மொழிகள் பற்றிய திரித்துணர்வு



பேராசிரியர் மாக்சு முல்லரும் அவரைப் பின்பற்றியவர்களும், சமற்கிருத மொழியைக் கற்றறிந்த பின்னர், உடனடியாக ஒருவகையான வெறித்தன்மையால் ஆட்கொள்ளப்பட்டனர். சமற்கிருத்ததை மிகப்பரவலாக பரப்புரை செய்வதும், அதனை தெய்வக் கடமையாகக் கருதியும், திராவிட மொழிகள் பற்றி எந்தக் கவனத்தையும் செலுத்தாமலும், சமற்கிருதப் பதிவுகளை உண்மையா பொய்யா என்றுன சரி பார்க்காமலும், பெருந்தீங்கை தமிழ் மொழிக்கு அளித்ததோடு, நயன் முறை பிறழ்ந்து செய்த தவறுகள், ஏற்கனவே 3000 ஆண்டுகளாக இருந்து வந்த நிலைமைகளைத் தொடரவைத்தன. சமற்கிருதமே இந்தியாவின் தேவமொழி என்ற சிந்தனையை தங்கள் சிந்தனையில் ஏற்றிக் கொண்டார்கள். ஆரியர் வருகைக்கு முன்பு அறியப்பட்டிருந்த தமிழரின் சமயங்களான சைவம், வைணவம் ஆகியவையும் பிராமணச் சமயங்களே என்ற எண்ணத்தை மேலை நாடுகளில் உருவாக்கியதோடு, இந்திய மொழிகள் அனைத்தும் சமற்கிருதத்தின்றே பிறந்தன என்ற அழுத்தத்தையும் முடிவையும் இந்தியாவிலும் மேலை நாடுகளிலும் உருவாக்கிவிட்டனர்.

டாக்டர் கால்டு வெல் எழுதுகிறார். "பாண்டியா என்ற சமற்கிருதச் சொல்லே, பாண்டியர் என்று தமிழில் எழுதப்பட்டது. ஆனால், பாண்டி என்ற தமிழ்ச் சொல்லில் இருந்தே, பாண்டியர் என்ற சொல்பிறந்து, தென்னிந்தியா முழுவதும் அச்சொல் பயன்பாட்டில் உள்ள தென அறியலாம். நான், பாண்டி என்ற சொல்லை, தமிழ் மலையாள மொழிகளில் சொல்லப்படும் பண்டு என்ற பழமையைக் குறித்த சொல்லிலிருந்து எடுக்கவில்லை, ஆனால் தமிழ்நாட்டு அறிஞர்கள் கூட, சமற்கிருதச் சொல் பாண்டு, பாண்டவர்களின் தந்தை, என்பதிலிருந்தே பாண்டியர் என்ற சொல் பிறந்ததாகக் கருதினர். பாண்டு என்பவரின் வழித் தோன்றல்களே பாண்டியர் என்றும் கூறினர். மாக்சு முல்லரிடமிருந்து நான் பெற்ற செய்தியின்படி, பாணினியின் மாணவர் காத்தியாயனரிடமிருந்தே, மாக்சு முல்லர், அச்சொல்லை அறிந்து கொண்டார் என்பேன்.

"சமற்கிருதப் பண்டிதர்கள், (பிராமணக் கண்ணோட்டத்தில் அனைத்தும் நோக்கப்பட்டன) ஐரோப்பிய மொழியியல் அறிஞர்கள், திராவிட மொழிகள் சமற்கிருதத்தினின்றும் பலவாறு வேறுபட்டிருந்தாலும், பாதியளவிலான சொற்கள், சமற்கிருதத்தினின்றும் திரிபு பட்டவைகளே எனக் கருதியதாக, கூறிவந்தனர். ஒவ்வொரு திராவிட மொழியினுடைய சொற்களையும், சமற்கிரு மொழிச் சொற்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் அளவில், தங்கள் கவனத்தைத் திருப்பவில்லை. சமற்கிருதச் சொற்களில் பல, திராவிட மொழிகளில் முற்றிலும் மாறாமல், சில மாறியும், சில புரிந்து கொள்ள இயலாத அளவிலும், பல சமற்கிருதம் அல்லாத சொற்களைக் கொண்டும் இருந்ததை, உன்னிப் பார்த்து உணரவில்லை. திராவிட மொழிகளில் அறியப்படாத, பொருள் தெரிந்து கொள்ளப்படுகின்ற சொற்கள் அனைத்தும், மூலமும் தோற்றமும் அறியப்படாத வெளி நாட்டு மொழிச் சொற்கள் எனக் கருதினர். இவ்வாறான நோக்கில், திராவிட மொழிகளும்,

வங்காள மொழியும் கூட, சமற்கிருதம் அல்லாத சொற்கள் இருந்தாலும், பெரும்பாலான அவ்விரு மொழிகளின் சொற்களும் சமற்கிருதத்திரிபுகளே. சமற்கிருத்தினின்றே, திராவிட மொழிகள் பிறந்தனவென்பதை, கடந்த காலங்களில் வாழ்ந்திருந்த கோல்புரூக், ரூகரி, வில்கின்சு போன்றவர்கள் அறிந்திருக்கவில்லை. சமற்கிருத மொழியில் தேர்ச்சியும் புலமையும் பெற்றிருந்த பண்டிதர்கள் மற்றும் மேலைநாட்டவர், சமற்கிருதத்தைத் தெளிவாக அறிந்து கொண்ட அளவிற்கு, திராவிட மொழிகளைப் புரிந்து கொள்ளவில்லை. மொழிகளிடையே காணப்படும் ஒற்றுமை பற்றிய ஆய்வுகளையும், அம்மொழிகளின் இலக்கண மற்றும் சொற்கள் பற்றிய நுணுக்கங்களையும், குறிப்பாக சமற்கிருதத்துக்கும் திராவிட மொழிகளுக்கும் இடையே காணப்பட்ட, இலக்கணக் கட்டமைப்பு, வேர்ச் சொற்களின் அமைப்பு பற்றியும், சமற்கிருதத்தினின்றே, திராவிட மொழிகள் பிறந்தன என்ற அவர்களின் கூற்றுப்படி, தெளிவான ஆய்வு முன்னேற்றங்களையும், எவரும் முன்னெடுக்கவில்லை"

"பேராசிரியர் வில்சன், தென்னிந்தியாவின் பேச்சு வழக்குச் சொற்கள், சமற்கிருதம் விளைவித்த சொற் தொகுதிகளின் பின்பற்றுதலே, என்று நோக்கினார். பகுதியாகச் சில தன்னளவில் படைக்கப்பட்ட, தனித்தன்மையுள்ள இலக்கியங்களாகவும் உள்ளன என்றும், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளின் படைப்புத் தொகுப்புகள், சமற்கிருதப் படைப்புகளின்றும் மொழிமாற்றம் செய்யப்பட்டவைகளே என்றும், அவை பெருமளவில் சமற்கிருதத்தினின்றும் அதன் மூலத்தினின்றும் கடன் பெறப்பட்ட தொடர்நிலை (Phraseology) களே என்றும் கருதினார்".

ஆரியத்துக்கு முற்பட்ட தமிழுக்கு, மேற்கண்ட விளக்கங்கள் பொருந்தாதவையாகும். தமிழைப் பொருத்தவரை தனித்தன்மை கொண்ட, வெளிநாட்டின் மொழித்தாக்கங்கள்

அற்ற, தொன்மையான மொழியாகவே கருதப்படும். தமிழ், வியக்கத்தக்க, மிக உயர்ந்த இலக்கணக் கட்டமைப்பையும் கொண்ட மொழியாகும். தொல்காப்பியம் என்ற மிகப் பழமையான இலக்கணநூல் மற்ற மொழிகளின், இலக்கண நூல்களோடு இணைப்படுத்த முடியாத அளவில், ஆதவனின் ஆட்சியின் கீழுள்ள உலக நாடுகளில், தனித்து விளங்குகிறது. அதன் தொகுப்பும் கட்டமைப்பும், ஒரு மொழிக்குத் தேவையான அனைத்தையும் கொண்டிருப்பதாக, உலக நாடுகளில் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. திருக்குறள், சமற்கிருத வாடையினின்றும், முற்றிலும் விலகி நிற்கும், தமிழ் மணம், கொண்ட படைப்பாகும். பெரும் படைப்புகளும், சிறுபடைப்புகளும் என, தமிழில் விலக்கான சிலவும் உண்டு. அவை ஒன்றைச் சார்ந்தும், அதன் வழிப்படுத்துதலிலும் எழுதப் பட்டவையுமன்று. இராமாயணமும் மகாபாரதமும் தமிழில் எழுதப்பட்டன வென்றாலும், கம்பர் படைத்த தமிழ் இராமாயணம், வால்மீகியின் சமற்கிருத இராமாயணத்தைக் காட்டிலும் முற்றிலும் வேறுபட்டது, மேம்பட்டது என்று கூறுவேன்.

பகல் ஒளியில் எவையும் மறைந்திருக்க இயலாது. என்பதைப் போல, சமற்கிருதம் எக்காலத்தும் பேச்சு மொழியாக இருந்ததில்லை என்பது, வெட்ட வெளிச்சமான உண்மையாகும். ஒரு மொழி வாழ்ந்து கொண்டிருக்கிறது என்று சொல்லப்பட்டால், அது பொதுமக்கள் பேசும் அன்றாட வழக்கு மொழியாக அமைந்திருக்க வேண்டும். நூல்கள் வாயிலாகவும், கல்விக்க கூடங்களிலும் கற்பிக்கப்படும் எந்தவொரு மொழியும் மக்கள் மொழியாக, பொது மொழியாக் கருதப்பட மாட்டாது. செயற்கையாக உருவாக்கப்பட்ட அல்லது செத்துப் போன மொழிகள் தாம், ஒரு சிலரால் கற்கப்படவும், பேசப்படவும் இயலும். சமற்கிருதம் ஆங்கிலத்தில் அகராதியொன்றைத் தொகுத்த மோனியர் வில்லியம்சு, தனது அகராதியின் முகப்புரையில், இணக்கமற்ற

ஒரு முயற்சியை முன் வைத்து. சமற்கிருதம், வாழ்ந்த, வாழ்ந்து வருகின்ற, இனியும் எக்காலத்திலும் வாழவிருக்கின்ற மொழி என்பதை நிலை நாட்ட முயன்றிருக்கிறார்.

அவருடைய கொள்கை நிலை நாட்டல் வருமாறு.

"1872 ல், எனது முதல் பதிப்பின் முன்னுரையில், ஐரோப்பாவிலுள்ள பல நூல்களையும் கற்றறிந்த பலரால் என் முன் வைக்கப்பட்ட கேள்வி, சமற்கிருதத்துக்கான இலக்கியங்கள் எவையேனும் உண்டா என்பதை, குறிப்பிட்டுள்ளேன். அன்றிலிருந்து, மிகவும் மகிழ்ச்சியாக, இந்தியாவைப் பற்றிய அறிவைப் பெருக்கிக் கொள்ள என்னிடம் முன்னேற்றம் காணப்பட்டது. ஒவ்வொரு நாட்டிலுமிருந்த கிழக்கிந்திய மொழி ஆய்வாளர்களின் உழைப்பும் ஆய்வுகளும், விரிவுரையாளர்களின்,உறுப்பினர்கள் அனைவரிடமும், இம்முயற்சியில் பெரும் பங்காற்றிட, துணிச்சலாக, அழைப்பு விடுத்தேன்.

"மாறாக, பல ஆங்கில மொழி அறிஞர்களிடையே, பெரும்பாலும் அறியாமையே நிலவியது. இந்தியாவில் சமற்கிருத இலக்கியங்களின் உண்மையான நிலை, அதற்கும் இந்தியாவில் பேசப்படும் வட்டார மொழிகளுக்கும் இடையேயான உறவுகள், ஐரோப்பிய இலக்கியங்களுடனான ஒப்பீடு போன்றவை குறித்தும் தெளிவான நிலை இல்லை. எனவே, சமற்கிருத இலக்கியங்கள், சமற்கிருதம் என்ற சொல் விளக்கத்துக்கு முன் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்று கருதினேன்"

"அப்போது, சமற்கிருதம் என்ற சொல், படிக்கப்படும் மொழி என்ற பொருளால், இந்தியாவில் உரைக்கப்பட்டிருந்தது. இந்தியாவின் பண்பாடுள்ள குடிவாணர்களின் மொழியென்றும், அவர்களின் சமய மொழியென்றும், இலக்கியங்களும் அறிவியல் கருத்துகளும் நிறைந்த மொழியென்றும், அப்போதும் மக்களால் பேசப்பட்டு,

எழுதப்பட்டு வருகின்ற மொழியென்றும், கற்றறிந்த பலராலும் காசுமீர் முதல் குமரிமுனை வரையிலும், பம்பாய் முதல் கல்கத்தா, சென்னை வரையிலும் அறியப்பட்டிருந்தது என்றும் சொல்லப்பட்டது. சுருங்கக் கூறின், சமற்கிருதத்தின் கற்பிக்கும் கற்கும் நடைமுறை, இந்தியக் கிளையினரான மிகப் பெரிய ஆரிய இனம், இந்தியாவுக்குக் கொண்டுவந்தது என்றும், நான் அறிந்தேன். இந்தியாவின் மொழிகள் வளர்ச்சியடைந்ததைப் போலவே, ஆரிய மொழி மற்ற நாடுகளிலும் வளர்ச்சியடைந்திருந்ததை, சீரான சமமான வளர்ச்சியென, அவ்வரலாறு கூறுகிறது. சமற்கிருதம் என்பதற்கு செத்த மொழி என்பது பொருள் என நான் கருதவில்லை.''

“வந்தேறிகளான ஆரியருடைய மொழி, உள் நாட்டின் பழங்குடி மக்களின் மொழிகளை மேலாண்மை செய்தது. ஆனால் செயல் வடிவில் இரண்டு பிரிவுகளில் இருந்தது. ஒன்று கற்றறிந்த கல்வி வகுப்பினர், மற்றவர் கல்லாத வகுப்பினர், கல்லாதார் மேலும் சில பிரிவுகளைக் கொண்டிருந்தனர். இந்தியாவில் ஐயத்துக் கிடமின்றி, ஒரு சில கற்றறிந்தவர்களின்,விருப்பமான பூசாரித்தனம், அவர்களின் தகுதிக்கும் அறிவுக்கும் திறவு கோலாக இருந்தது. கற்றறிந்தவர்களின் மொழி, உயர்ந்து, பரவலாக சமற்கிருதம் என்ற பெயரால் அழைக்கப்பட்டது. இதற்கு, செம்மைப் படுத்தப்பட்டது அல்லது செய்யப்பட்டது என்பது பொருளாகும். பொது மொழிகளாக அறியப்பட்டிந்தவைகளை விட (பிராகிருதத்தைத் தவிர்த்து) உயர் தகுதியை அச்சொல் சுட்டியது. சமற்கிருதம், பரவலாக, சமயத்துக்கும், சமயம் சார்ந்த இலக்கியங்களுக்கும் தன்னைக் கையளித்துக் கொண்டது. இந்திய மொழிகளில், இந்தி, இந்துத்தானி, தமிழ் போன்ற திராவிட மொழிகள் தவிர்த்த மற்றவை, பரவலாகப் பேசப்படவில்லை, இலக்கியங்களையும் கொண்டிருக்கவில்லை, இம்மொழிகளும் கூட, சமற்கிருதத்துக்குக் கடன்பட்டே, சிறப்பான இலக்கியங்களைப் படைத்துக் கொண்டன”.

பண்டிட் சியாமசி வர்மா எழுதியுள்ளவற்றின் படி, “சமற்கிருதம் இந்தியாவின் வாழும் மொழியாக இருந்ததால், மிகுந்த ஆர்வத்துடன், பெர்லின் கிழக்கிந்திய மொழிகள் மாநாட்டில், 1881 ஆம் ஆண்டில் அவரால், அம்மொழியில் உரை நிகழ்த்தப்பட்டது. சமற்கிருதம், பாணினியின் அட்டத்யாயி என்ற நூலோடு இணைந்திருந்தது. மிகச் சிறந்த இலக்கண ஆசிரியரான பாணினி காலத்தில் சமற்கிருதம் பேச்சு வழக்கில் அறியப்பட்டிருந்தது. அவருடைய அதே குறிப்பில் மேலும் தொடந்து, சமற்கிருதமே பிராகிருத மொழிக்கான மூலம் என்றும் (பிராக்கதி சமசுக்ரிதம்) குறிப்பிடுகிறார். ஒருக்கால், வட்டார மொழியான பிராகிருதம் சமற்கிருதத்தினின்றும் நேரிடையாக கிளைக்க வில்லை. ஆனால் அதனால் வளர்ச்சியடைந்து, சமற்கிருதத்திலிருந்து ஏராளமான சொற்களைக் கடனாகப் பெற்றுக் கொண்டது என நான் கருதுகிறேன். நம்புகிறேன்.”

சமற்கிருத அகராதி தொகுப்பவருக்கு, அவர் எந்த நாட்டைச் சார்ந்தவராயினும், முன்பு தொகுக்கப்பட்ட, சமற்கிருதச் சொற்களடங்கிய அகராதிகளை, கவனத்தில் கொள்ள வேண்டும். சமற்கிருதச் சொற்கள் எவை, கடன் பெற்ற சொற்கள் எவை, ஆரிய மூலத்தில் உள்ளதா என்பதைப்பிற மொழிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் தொகுக்க வேண்டும். ஆனால், மேலை நாட்டவரால் சமற்கிருதத்துக்குத் தொகுக்கப்பட்ட அகராதிகள், டாக்டர் கால்டுவெல்லின் கூற்றப்படி, அறிவியல் மற்றும் பிற துறைகள் சார்ந்த ஒப்பிட்டு ஆய்வுகள், ஐரோப்பியர்களுக்கென்றே தொகுக்கப்பட்டது, இந்தியர்கள் கவனத்தில் கொள்ளப்படவில்லை என்பதே உண்மை நிலையாகும்.

பேராசிரியர் மோனியர் வில்லியம்சு, சமற்கிருதம் பற்றிய சரியான புரிதல் இல்லாதவர், சமற்கிருதம், வேத மொழியினின்றும், பிராகிருதத்தின் கலப்பினாலும் இணைக்கப்பட்ட கலப்பு இலக்கிய மொழி என்பதை அவர் அறிந்திருக்கவில்லை.

தொடர்ந்து, சமற்கிருதத்தில் காணப்படும் சொற்கள் அனைத்தும் ஆரிய மூலத்தில் உள்ள தென்ற கருத்தை விதைக்க முற்படுகிறார். நான், இங்கே சில எடுத்துக்காட்டுகளைக் கூற விழைகிறேன்.

அம்பா, அம்பெ அல்லது அம்ப என்ற சொற்கள், பின்னர் சமற்கிருதத்தில் அம்ப என்றும் சில நேரங்களில் வியப்பிடைச் சொல்லாகவும் (interjection) அறியப்படுகின்றது.

அம்பா : தாய், நல்ல பெண்மணி.

அம்பா : துர்க்கை, சிவனின் மனைவி.

தென்னிந்திய மொழிகளில், பெண்கடவுள், பெண்கள் என்றவாறு பொதுவாகச் சொல்லப்படுகின்றன.

அம்பா (சமற்) -------- அம்மெ (செர்மானியம்): தாதிப்பெண்.
அம்பா (பழைய செர்) -------- அம்மோன் ---- அம்முன்(ப.செர்)

பல மொழிகளில், பலவாறு பயன்படுத்தப்படும் சொற்கள், அம்மா என்ற தமிழ்ச் சொல்லின் திரிபுகளே எனலாம். தமிழில் அம்மா என்ற சொல், தனித்தன்மை வாய்ந்தது.

கால : கல் என்ற சொல் மூலம். கணக்கீடு, ஒரு குறிப்பிட்ட நேரத்தை, வான்வெளி சார்ந்த காலக் குறிப்பை, பொதுவாக உணர்த்துவது.

கால : காலம் என்ற தமிழ்ச் சொல்லின், கடைக் குறைத்திரிபு (apocopic)

கால் : கால் என்ற தமிழ்ச் சொல்லின் சாரியை.

கம்பம்,தூண், நெடுந்தூண், நடக்கப் பயன்படும் உறுப்பு மற்றும் உடலைத் தாங்கி நிற்கும் தூண் போன்றது, நெடுந்தூண், நீளமான தூணைப் போன்ற ஒன்று, ஒருபக்கத்தின் சிலபத்திகள், நீர் ஒழுக்கு, நேர அளவு, ஒரு பருவம், குறிப்பிட்ட நேரம், கீழிணைப்புப் பின்னொட்டு (subjunctive suffix), என விரியும்.

கால் : மாந்த உடலில் நான்கில் ஒரு பகுதி, விடியலுக்குப் பிந்திய பொழுது, குறிப்பிட்ட நேரம், காலைப்பொழுது.

காலம் : காலைப் பொழுதைக் குறிக்க, வட மாவட்டங்களில் பயன்படுத்தப்படும் சொல்.

கால்குலேட் (calculate) என்ற ஆங்கிலச் சொல், கால்குலஸ் (calculus) என்ற இலத்தீன் மொழிச்சொல்லின் திரிபாகும். அதற்கு, சிறிய கல் என்பது பொருள்.

காலம் : காலை

கல் - தமிழ் : சிறுகல். calcalx : சிறுகல், calculus (பிரெ): சிறுகல்.

குழவு (தமிழ்) : சிறிய ஒன்று.

Kulavu - culus : குலுசு என்றும் ஒலிக்கலாம்.

குமார (சம) : இளைஞன், இளமையில் இறந்து போகாதவன்.

கு + மார Ku+mara : இளைஞன்.

கும் Kum : இளைஞன்.

மார mara : என்பது, ம்ரி (mri), மரி, இறத்தல் பற்றியது.

கு + மார என்ற பிரிக்கப்பட்ட சொல், இளமையில் இறக்காதவன் எனப்படும்.

குமார - குமரன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும்.

குமரன் : இளைஞன்.

கும் (தமிழ்) : வளர்ந்தவன், பகுத்தவன்.

குமு (Kum பிரெ) என்ற சமற்கிருதச் சொல், மடி(இறத்தல்) என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும்.

நிலைய (Nilaya) : புகலிடம். நிலி (Nili) : தங்குதல், கீழே தங்குதல்.

நி (Ni) : கீழே : லி (li) : இணைந்திரு.

லய (Laya) : இணைந்திருத்தல், ஒட்டிக் கொண்டிருத்தல். நிலைய என்பது, நிலையம் என்ற தமிழ்ச்

சொல்லின் கடைக் குறைத் திரிபாகும்.
நி (பிரெ) - நிலையென்பது, நில் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபு.

நில் (தமிழ்) : நிற்றல். நிலையம் என்பது நிலை என்ற சொல்லின் நீட்சியாகும்.
நில், நிலை, நிலையம் போன்றே, ஐரோப்பிய மொழிகளில்.
Stationem( Latin) - Station (Eng) - to stand, எனப்பட்டது.

பல்லி (தமிழ்) : இல்லம், ஊர்வனப் பிரிவின் உயிர் (Lizard).

பல்லி (தமிழ்) : படுக்கை, படுக்கை அறை, இரவுத் தங்குமிடம், இல்லம். இதே பொருளில்,

பல் (Pal) : என்பது, படுத்தல், கீழே என்றவாறு பொருள்படும்.

வீட்டுப் பல்லி (house lizard) : தமிழ்ச் சொல் என்ற அளவில்,

புல்லி என்ற தமிழ்ச் சொல், பல்லியினின்றும் நீண்டு, ஒட்டிக் கொண்டிருப்பதைக் குறிக்கிறது.

பல்லி : சுவற்றில் ஒட்டிக் கொண்டிருப்பது.

மயூர : மயில். (mayoora)

மா : ஒலி, ஊது, முழங்கு.

மயூர என்பது, மயில் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும்.

மயில் : கறுமையும் நீலமும் கலந்த புள்ளிகளைக் கொண்ட தோகையை உடையது.

மை : கறுமை, இல் : இடம், புள்ளி (spot).

முக்தா (Mukta): தளர்தல், தளர விடுத்தல், விடுத்தல், ஓய்வு தருதல், வெளியேற்றுதல், திறத்தல் இத்துடன், முத்து என்ற பொருளையும் தரும்.

முத்து (தமிழ்) : ஓடு நீக்கி அல்லது திறக்கப்பட்டு, விடுவிக்கப்படும் மணி.

முக்த - முட்டம் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகவும் உள்ளது.

முக்த (சம): முட்டம் என்ற தமிழ்ச் சொல்லின் கடைக்குறைத் திரிபு.

முட்டு : சிறிய மற்றும் உருண்டையான.

முத்து : வட்டமான விதை போன்றது.

முத்துக் குளித்தல், மன்னார் வளைகுடாப் பகுதியில், பழங்காலம் தொட்டு நடைபெற்று வரும் தொழிலாகும். பாண்டிய நாடு, முத்துக்களால் வரலாற்றில் பெருமை பெற்றது.

வடபா(சம) வடவ, படவ,படப என்றவாறும் எழுதப்படும். பெண் குதிரையைப் போல் தோற்றமளிக்கும் ஆண்குதிரை . (பொலி குதிரை)

வட்வப - தெனு : பெண் குதிரை (mare).

வடபா : பெண்குதிரை. (அசுவினித் தேவன்) விவசத்தின் மனைவி. இரண்டு அசுவினிகளின் தாயாகிய சூரியன்.

வடபக்னி : பெண் குதிரையின் தீ. உள்ளார்ந்த நெருப்பு. தென் முனையில் உள்ள கடலில் உள்ள பெண் குதிரையின் வயிற்றிலிருந்து வரும் தீ.

வடபமுக : பெண் குதிரையின் வாய். இதுவே, தென் கடலின் ஆழ் பகுதிகளுக்குச் செல்லும் வாயில்.

மேற்கண்ட எடுத்துக் காட்டுகளிலிருந்து, பேராசிரியர், மோனியர் வில்லியம்சின் வஞ்சகம் வெளிப்படுவதை அறியலாம். சமற்கிருத ஆசிரியர்கள், தமிழுக்கு மூலம் சமற்கிருதமே என்பதைக் காட்ட, வடவை என்ற சொல்லைக் கூறி, அனைத்து வகையான கழுத்தறுப்பு வேலைகளிலும் ஈடுபட்டனர்.

வடப,வடபா என்ற சமற்கிருதச் சொற்கள், வடவை என்ற தமிழ்ச்சொல்லின் திரிபாகும். இது, வடம் அல்லது வடக்கு என்ற சொல்லின் நீட்சியாகும்.

மேலும் இது, வட+அலை, வடவனல்(வடக்கின் நெருப்பு) என்றும். ஆங்கிலத்தில் Northern Lights என்று அறியப்படும்.

வடவை, வடந்தை என்றும் சொல்லப்பட்டு, வடத்தீ மற்றும் வாடைக் காற்றையும் குறிக்கும். சிரிங்க வெர(சம) : இஞ்சி (அ) சுக்கு.இது மானின் கொம்பைப் போல் உள்ளதாக கருதப்பட்டது.

சிரிங்க : கொம்பு, வெர: உடல் அல்லது அமைப்பு.

இஞ்சி, நீர்ப்பசையுள்ள, காய்ந்து போகாத நறுமணப்பொருள்.

இஞ்சி வேர், இஞ்சிக் கிழங்கு, இஞ்சிப் பாவை இதனுடைய கூட்டுச் சொற்கள். அக்காலத்தில் தமிழ் வணிகர்களால், ஏற்றுமதி செய்யப்பட்ட பொருட்களுள் ஒன்று.

இஞ்சிவேர், கிரேக்க மொழியில், சிக்கி பெரிசு (Ziggiberis) என்று திரிபுபட்டு, Zingiber, gingiber என்று இலத்தீனில் சொல்லப்பட்டு, ginger என்று ஆங்கிலத்தில் அறியப்படுகின்றது. சமற்கிருத ஆசிரியர்கள், பெருமளவில் இச்சொல்லைச் சிதைத்து, விந்தையான பொருளைத் தந்தனர். சமற்கிருதத் திரிபு விந்தையாகச் சொல்லப்பட்டது போலவே, மேலை நாட்டு ஆங்கில அகராதி மட்டுமல்லாது, மேன்மையான மொழியியல் ஆய்வாளர்களான பேராசிரியர் எமனோ, பேராசிரியர் பர்ரோவும் கூறினர்.

இஞ்சிவேர் என்ற கூட்டுச் சொல், இஞ்சி - வேர் எனப்பிரியும்.

இஞ்சி, இஞ்சு (inju), நீர் கெட்டியாதல் என்றவாறு சொல்லப்பட்டது. I என்ற ஆங்கில எழுத்து, தன்மைச் சொல்லுக்கு முன்னொட்டாக வைக்கப்பட்டது.

சாயா(சம) : அழி, மறை, முடிவு செய், நாளின் முடிவு, மாலை.

தமிழில், மாலைக்குப் பொதுவான சொல், சாயுங்காலம் என்பதாகும். மறையும் பொழுது என்று பொருள்படும்.

சாய் (தமிழ்) : மறை, காலம் : பொழுது.

சாயுங்காலம், சாயங்காலம் என்று கொச்சைச் சொல்லாயிற்று.

சாயம் காலத்தை, சமற்கிருதம் திரித்துக் கொண்டு, சாயம் என்று கூறியது.

சாயம் (சம) : மாலைப் பொழுது.

சூபர்ணா(சம) : அழகான இலை.

சூ : நல்ல,

பர்ணா : இலை.

அழகிய இலைகளைக் கொண்டிருத்தல் என்று இலத்தீன் மொழியிலும்,அழகான சிறகுகள் என்று இலத்தீனிலும், அழகிய என்று ரிக்வேதத்திலும், மலையாளத்தில் கழுகு, பருந்து என்றும் சொல்லப்பட்டுள்ளன.

சூபர்ண என்பது, சூரியனையும் நிலவையும் சுட்டி, அதன் அழகை மட்டும் குறிக்காமல், சோமநீரையும், முகிலையும் கூடக் குறித்தது.

உ அல்லது ஊ என்ற இடைச் சுட்டுகள், ஒருவனை நோக்கிச் சுட்டுவதை மட்டும்

குறிக்காமல், தமக்கு முன்புள்ள, எதிர்ப்புறமுள்ள இடம் அல்லது பொருளையும் குறிப்பதோடு, உயரத்தையும், குத்துயரத்தையும் (altitude) குறிக்கும்.

உக : மேலே இருத்தல்

உகல் : தாவு, குதி, கட்டுவரம்பு, துள்ளிக் குதித்தல், குதியாட்டம்.

உகளி : தாண்டு, எழும்பு

உச்சி : தலையின் மேல்பகுதி, மேலே (Zenith) நண்பகலில் சூரியனின் நிலை, மலைமுகடு

உத்தரம் : கூரையின் மேலுள்ள தூலம், மரத்தண்டு

உம்பர் : பெயரடை மற்றும் வினையடையாக, மேலே, உயரே, உயரம், ஏற்றம் (elevation) வானம், வானுலகம், தேவருலகம்.

உம்பல் : யானை, உயரமான, வளர்த்தியான விலங்கு.

உயர் : மேலெழுதல், உயருதல்

உவன் : மேலிடம், வானம் , வானுலகம்.

உவச்சர் : கடவுளை உயர்த்தித் தொழும் பூசாரி.

உவர் : உப்பு மண், மேலெழும் உயரும் தன்மை கொண்டது.

உன்னு : ஊற்று உயருதல்

உவன் : உவணை : மேடான, உயர்ந்த இடம், வானுலகம்.

உவன்-உவணம்: குத்துயரம், வானம், காற்றாடி அல்லது கலுழன் பறக்கும் இடம்.

உவணன் : காற்றாடி, கலுழன் (பறுந்து)

உவணம் என்ற சொல்லே, மாற்றுச் சொல்லாக, சுவணம்

என்றாகி, பட்டத்தையும், பருந்தையும் குறித்தது. இந்தச் சுவணம் என்ற சொல்லே, சமற்கிருதத்தில் சுபர்ண எனத் திரிந்தது.

எ.கா உடை -------- சுடை, உதைக்கின்ற பசு.
உருள் -------- சுருள், சுருட்டப்பட்டது.
உலை --------- சுழல், சுற்றுதல்,
உலவு --------- சுலவு, சுற்றி வருதல்.

மேலே சொல்லப்பட்ட எடுத்துக் காட்டுகளைப்போல, வெளி நாட்டுத் தன்மையை, சமற்கிருதத்தோடு இணைத்து உளவறிய பேராசியர் மோனியர் வில்லியம்சு, எந்த அடிப்படையான செய்திகளையும் தகவலையும் தரவில்லை.

எ.கா.அக்கா : அக்க, தாய் (அவமதிப்பாகச் சொல்லப்படுவது) வெளிநாட்டு மூலச்சொல்லான (அயிக) (acca) லத்தீன் என்பதாக இருக்கலாம்.

அட்ட : (தக்காணப் பகுதியினின்றும் பெறப்பட்ட கொச்சைச் சொல். நாடகங்களில் பயன்படுத்தப் படுவது) தாய், தாயின் உடன் பிறந்தாள், மூத்த அக்கை (லத்தீன்), மாமியார் (பிராகிருதம்).

மாக்சு முல்லரின் கொள்கை, இந்திய நாகரிகம், ஆரிய நாகரிகமே என முடிவு செய்கிறது. அதன் தோற்ற மக்கள் வேத ஆரியர்கள் என்றும் அழுத்தமாகக் கூறுகிறது.

## II. சென்னைத் தமிழ் அகராதியின் பன் முறைத் தவறுகள், குளறுபடிகள்



அகர முதலியைத் தொகுத்த சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆட்சி மன்றக்குழு, மூன்று கூர்ந்த விருப்பங்களை, அகராதி கொண்டிருக்க வேண்டும் என தெரிவிக்கின்றது. அவை வருமாறு.

"இந்த அகரமுதலி (அகராதி) மரபு வழுவாத தமிழறிஞர்களின் எண்ண நடை முறைகளை நிறைவு செய்ய வேண்டும். அதன் வழியில் சிக்கலான சொற்களை ஆய்வு செய்து, கவனத்துடன் தெளிவாத்தலை வெளிப்படுத்த வேண்டும். சைன, மருத்துவ. கணியவியல் தொடர்பாகத் தோன்றும் கலைச் சொற்களை, அத்துறை சார்ந்த சொற்களாகவே பதிவு செய்ய வேண்டும்".

"மேலை நாட்டு மொழியியலாளர்களின் குறிக்கொள்களை, நிறைவு செய்யும் வகையில், தொடர்புகளை, வெளிக் கொண்டு வர முயற்சி மேற்கொள்ளும்".

"பெரும்பான்மையான தமிழர்களின் எதிர்பார்ப்புத் தேவைகளையும், ஆங்கிலத்தோடு அறிமுகமானவர்களையும்

கருத்தில் கொண்டு, மிகச் சரியான, நிறைவாக, காலத்துக்கேற்ற, புதிய எளிதாக விளங்கிக் கொள்ளக் கூடிய சொற்களையும், ஆங்கில அமைப்புகளையும் சொற்களையும், மரபுகளையும் கொண்டு, இந்த அகராதி, சேவையாற்ற வேண்டும்".

அவ்வாறு பரிந்துரைக்கப்பட்ட நிலையில், அப்பணியானது முதல் தகுதியும் தரமும் வாய்ந்த அகராதியாக இருக்க வேண்டும் என்றும், உடனடியாக பல கோணங்களிலும் விரிவாக, சிக்கலான, அறிவியல் கூறுகளைத் தெளிவாகப் பதிவு செய்து பதிப்பிக்க வேண்டும் என எதிர்பார்க்கப்பட்டது. இந்த நோக்கங்கள் பெரியனவாகத் தோன்றின. ஆனால் அகராதிக்கான செயல்பாடுகள், எதிர் மறையான திசையில் அமைந்து விட்டன.

1913 ஆம் ஆண்டு, சனவரியில் தொடங்கிய அகராதிப் பணி, இழுத்துக் கொண்டே சென்று, 1939இல் நிறைவடைந்தது, அதாவது 27 ஆண்டுகள் என்ற அளவில் மிக நீண்ட ஆண்டுக்காலம் இதற்கான மொத்தச் செலவுத் தொகை, உருவாக்குதல் உள்ளிட்ட அனைத்துக்குமாக, உரு.4,10,000 ஆகும். இருப்பினும், பதிப்பு, பல்கலைக் கழகத்தின் தகுதிக்கு ஏற்புடையதாக அமையாததோடு, பணிகளுக்கும், செலவினங்களுக்கும் இடையே ஒரே அளவுத் தன்மை அமையவில்லை.

முந்திய அகராதிகளுக்கும் இதற்கும் சில கூறுகளில் முன்னேற்றம் காணப்பட்டிருந்தது உண்மையெனினும் அகராதியின் ஈர்ப்பும், குறைகளின் பருமனும், அகராதிக்குரிய கூறுகளுக்கும் இல்லாதது தொடர்பாக கவனத்தில் கொண்டு பார்க்கும் போது, நீள் நெகிழ்ச்சியுடைய, கண்டதைத்துக்குரிய அறிவியல் தன்மைக்கு முற்றிலும் மாறுபட்டு, தமிழ்க் கண்ணோட்டங்களைப் புறந்தள்ளியதோடு, அதன் இலக்கிய, பண்பாண்டுக் கூறுகள். பொதுப் பணத்தில் சிதைக்கப்பட்டுள்ளது எனலாம்.

இந்த அகராதி வெளியிடப்பட்ட நாளிலிருந்து,இதன் குறைபாடுகள் பற்றி, நான் மேடைகளிலும், அச்சு ஊடகங்களிலும் திறனாய்வு செய்து வந்துள்ளேன். 1953 ஆம் ஆண்டு, இந்த அகராதியில் உள்ள பிழைகளையும் குறைகளையும் விளக்கி, அதனை சிறு நூலாக, சென்னைப் பல்கலைக் கழக ஆட்சி மன்றக் குழுவின் பொதுப் பார்வைக்கு அனுப்பியிருந்தேன். அதற்கு எவ்வகையான மறு விடையும் கிடைக்காததால், மீண்டும் 1961 ஆம் ஆண்டில், முன்னதைப் போன்றே, ஒரு சிறு நூலை, இம்முறை தமிழில் வெளியிட்டு, மேற்கண்டவர்களுக்கும், மேலும் பல படிகளை, தமிழ்ப் பேராசிரியர்களுக்கும், அரசியல் இயக்கங்களுக்கும் அளித்தேன். அதற்கான மறுவிடையும் இது வரை எவராலும் அளிக்கப்படவில்லை. இந்நிகழ்வு, தற்போதுள்ள சமூக, அறிவு சார்ந்த தமிழர்களின் நிலைபற்றிய எதிரொளிப்பைத் தருகிறது.

இந்த அகராதியின் குறைபாடுகளை ஏழு தலைப்புகளில், நாற்பது கிளைப் பிரிவுகளில் வகைப்படுத்தியுள்ளேன் . அவை வருமாறு.

**1. சொற்கள் தொடர்பான குறைபாடுகள்:**

1. முடிவு தெரியாத, தகுதியற்ற சொற்றொகுதி.
2. பெயர்ச் சொற்களுக்கான மாற்று இல்லாமை.
3. வினைச் சொற்களுக்கான மரபுக் குறிப்புகள் இல்லாமை.
4. தனித் தகுதியுடைய கூட்டுச் சொற்களுக்கான ஆக்கக் கூறுகள் இல்லாமை.
5. விளக்கக் குறிப்புகளில், திருத்தமற்ற சொற்கள் இடம் பெற்றுள்ளமை.
6. கொச்சை, வழக்குச்சொற்கள் திருத்தப்படாமை.
7. தவறான சொற்றொகுதிகள் திருத்தப்படாமை.
8. தேவையற்ற வெளிநாட்டுச் சொற்களை இணைத்துள்ளமை.
9. வெளிநாட்டுச் சொற்களுக்கு இரண்டு பொருள் தந்துள்ளமை

10. தேவையற்ற பல் பொருளை வெளிநாட்டுச் சொற்களுக்கு அளித்துள்ளமை.
11. வட்டாரச் சொற்கள் இடம் பெறாமை.
12. இனச் சொற்கள் இடம் பெறாமை.
13. சொற்களில் எழுத்துப் பிழைகள் இடம் பெற்றுள்ளமை.

**2. குறிக்கத் தகு கருத்து தொடர்பான குறைபாடுகள்:**

1. சரியான பொருள் விளக்கங்கள் இல்லாமை.
2. பொருள் விளக்கங்களில் தவறுகள் உள்ளமை.
3. பொருள் விளக்கங்களுக்கு குறைவான தரவுகளை அளித்துள்ளமை.
4. சொற்களுக்கு முடிவு தெரியாத விளக்கங்களை அளித்துள்ளமை.
5. சொற்களுக்கான பொருள் விளக்கங்களில், காலவரிசையும், ஏரணமும் இல்லாமை.
6. தமிழில் விரிவான விளக்கங்கள் இடம் பெறாமை.
7. ஒரு பொருட்பன் மொழி பற்றிய வேறுபடுத்துதல் இல்லாமை.
8. எதிரமைவுச் சொற்களில், பிரிவுகளைக் காட்டாமை.
9. விளக்கங்களுக்கான எடுத்துக் காட்டுகள் இல்லாமை.

**3. திரிபுகள் தொடர்பான குறைபாடுகள்.**

1. தமிழ்ச் சொற்களை, சமற்கிருதச் சொற்களாக, தவறான திறமுரைப்பு.
2. சொற்களின் தோற்றம் பற்றிய தகவல்கள் இன்மை.
3. திரிபுகள் பற்றிய தவறான முடிவுகள்.
4. கூட்டுச் சொற்களை, தவறாகப் பிரித்தது.
5. ஒரு சொல்லுக்குத் தொடர்பில்லாத மற்றொரு சொல்லைத் தவறாகக் காட்டுவது.
6. பல்வேறு சொற்களின் பொருளை, ஒரு சொல்லுக்குத் தவறாகக் காட்டுவது.

**4. இலக்கணம் தொடர்பான குறைபாடுகள்.**

1. இலக்கண விளக்கங்களை தந்ததில் தவறுகளைக் கொண்டிருப்பது.
2. இலக்கணக் குறிப்புகளில் காலம் பற்றிய தவறுகள்.

**5. மரபுகள் தொடர்பான குறைபாடுகள் :**

1. மரபுகளை விளக்குவதில் தவறுகள்
2. மரபுகள் சாராத பின்னுருப் பயன்பாடுகள்.

**6. அகராதியைத் தொகுப்பதில் திட்டமிடல் இன்மை பற்றிய குறைபாடுகள்.**

1. எழுத்துப் பெயர்ப்பில் தவறான போக்கு.
2. பழமை, திரிபுகள் பற்றிய அச்சியல் குறியீடுகள் வேறுபடுத்திக் காட்டப்படாமை.
3. பொதுத் தலைப்பில் சிறப்பினம் தொடர்பாக தவறான எண்ணீடுகள்.

**7. செயற்பணிகள் தொடர்பான குறைபாடுகள்.**

1. கூறியது கூறல்
2. நீண்ட பிழை திருத்தப்பட்டியல்
3. பிழைதிருத்தப் பட்டியலைச் சரியாகக் கையாளாமை.

மிகவும் நனி கவனிப்புக்குரிய அகராதியின் குறைகள் என்னவெனில், சொற்தொகுதிகள் விளக்கங்கள் தொடர்பான, திரிபுகள் தொடர்பான குறைகள் காணப்படுவது. நூற்றுக்கணக்கான எளிய சொற்களும், ஆயிரக் கணக்கான கூட்டுச் சொற்களும், அகராதியில் காணப்படவில்லை. சிறு நீர் கழித்தல் என்பது பற்றி ஒரு சொல்லும் அகராதியில் அறியப்படவில்லை. மூத்திரம் கழித்தலை, மோல் என்று, பொதுவாக, திருநெல்வேலி, மதுரை, இராமநாதபுரம் மாவட்ட மக்கள் பயன்படுத்துகின்றனர். இச்சொல், அன்றாடம், செயப்படு பொருள் வினையாகப் பயன்படுத்தப்படுகின்றது.

நூற்றுக் கணக்கான இலக்கியச் சொற்கள் அகராதியல் இடம் பெறவில்லை. எடுத்துக்காட்டாக, ஓரெழுத்து ஒரு மொழி, ஈரெழுத்து ஒரு மொழி, நெடுஞ்சினை, சினை முதற்பெயர், வண்ணச் சினைச் சொல், தடுமாறு தொழிற்பெயர், பாவண்ணம் என விரியும். (தொல்காப்பியம்) அந்தரக்கோல், கண்ணெழுத்து, பன்மொழி நரம்பு (சிலப்பதிகாரம்). புகுவாயில், புறப்படுவாயில், (அடியார்க்கு நல்லார் உரை), கருங்களமர், கருமுக மந்தி, செம்பி நேற்றை (நச்சினார்க்கினியர்) இல்லற வெள்ளை.ஐம்மபடி விருத்தம், செந்தமிழ் மாலை, யானைத் தொழில், வேந்தன் குடை மங்கலம் (பன்னிரு பாட்டியல்) அரை சுமக்கல், கணக்கு வாரியம், கலிங்கு வாரியம், குடும்பு வாரியம், சிறுதனம், தடிவழி வாரியம், திட்டுக் காரன், நடுவி இருக்கை, நாடாள்வான், பழனியாயம், பெருந்தரட்டுக்கு மேல் நாயகம், பொன்வாரியம் (கல்வெட்டுகள்).

மாறாக, தேவையற்ற எண்ணிலடங்கா வெளிநாட்டுச் சொற்கள், தமிழ் மரபுப் படியும் வெளி நாட்டவரின் வடிவப்படியும் உள்ளன.

*1.* Naturalised Forms.

| Sanskrit | semitic | English |
|---|---|---|
| akkutaadam | isumu | andimaandu |
| akkirani | ittatu | avidavettu |
| akkuraakiyam | ittikattu | kesu |
| akkiresaran | iittikaabu | sikku |
| akkinisakam | ittibaar | turuppu |
| akkinitti | idibaaraa | pasu |
| akkiri paadai | ibaadattu | paattil |
| akkiyaadaanam | ibudaar | vaarandu. |

## 2. Semi Naturalised Forms

| | | |
|---|---|---|
| jrumbaa | ihhattu | dakku |
| jagatiyodi | ijaabaa | dayan |
| janjaamaarudam | isaaraa | delipon |
| jabaakusuman | istavaa | daikilaatu |
| jayarijayibava | istavaa | palanjipmataankaayi |
| jarjjaram | istikbaar | nottebaant |
| jalatresarogam | isuraabu | rayilbaak |
| kamotsaran | ihasaan | sappu |

சமற்கிருத கூட்டுச் சொற்கள் அடியிற்கண்டவாறு பதிவு செய்யப்பட்டுள்ளன.

ஏக்திஸ்திவி, சன்னிபாதசுரம், பரியானுயோச்சியோ பெச்சனம், ஜகதா ஜகல்லக்ஸ்னய், ஸ்படிகஜபா குசும நியாயம், தமிழ் அகராதியில் காணப்படும் சமற்கிருதச் சொற்களே இவை.

சில காலம் தமிழ்நாடு இசுலாமியர், ஆட்சிகாலத்தில் இருந்தது. அப்போது, உருது அல்லது செமிட்டிக் மொழிகள் தமிழில் இணைத்து முறைப்படுத்தப்படவில்லை, அகராதியிலும் இடம் பெறவில்லை. மேலும், சிங்களர், ஆந்திரர், மராட்டியர், ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர், போர்த்துக்கீசியர், டச்சுக்காரர் ஆகியவர்களின் ஆளுகையின் கீழும் தமிழ்நாடு இருந்துள்ளது.

ஒரு நாட்டில், அயன் மொழிச் சொற்கள், விருப்பத்துடன் கடன் பெறப்படும் என்றால், அந்நாட்டின் மொழியிலுள்ள சொற்களின் குறைவே காரணமாயிருக்கும். மற்றபடி, அவை எப்போதும், தூக்கி எறியப்படும். ஆங்கில நுழைவை நயன்முறைப்படுத்துவதென்றால், அது அவ்வப்போது, அச்சிலும் மேடையிலும், சில கூறுகளை வளப்படுத்துவதாக அமைந்திருந்ததால், பிற மொழிகள் அவற்றைக் கடன் பெற்றன.

கடந்த காலப் பட்டுணர்வின்படி, அயன் மொழிகளிலிருந்து கண்மூடித்தனமாக, சொற்களைக் கடன் பெற்றதால், தமிழ் நெறிபட்டு, காலப்போக்கில் மறையும் நிலை உருவாகி, தமிழ், வறுமை நிலைக்குத் தள்ளப்படும். தமிழ் வளர்ந்துள்ளதாகக் கருதப்படும் மாயத்தோற்றம், அயன் மொழிகளின் ஊடுருவலால் அண்மை நூற்றாண்டுகளில் பட்டுணரப் படுகின்றது. இவ்வளர்ச்சி, மூட்டுகள் செயலிழந்த நோயாளியின் வீக்கத்தைப் போன்றது. முடிவாக, பொருட் செறிந்த பல தமிழ்ச் சொற்கள், மறக்கப்படும் அல்லது வழக்கிழந்து போகும்.

சிலர், கொச்சையாகப் பேசும் பொழுது, ஆங்கிலச் சொற்களைக் கலந்து, இணைத்துப் பேசுவதை நயன் முறைப் படுத்துகின்றனர். இந்த நடைமுறை தொடர்ந்தால். பிறகு ஆங்கிலச் சொற்களைத் தமிழில் பயன்படுத்துவதற்கு ஓர் அளவில்லாமல் போய்விடும். தற்காலத்தில், சில தமிழர்கள் தாங்கள் அறிந்திருக்கும் சில ஆங்கிலச் சொற்களை, அன்றாட பேச்சு வழக்கில் பேசும் போக்கைக் கடைபிடித்து வருகின்றனர். அரைகுறையானவர்கள், கற்றறிந்தவர்களைப் போல் பேசும் நடை முறையைக் கொண்டுள்ளனர். இந்தத் தீய நடைமுறை, தொற்று நோயைப் போல் பரவி, எதிர்காலத்தில், தமிழின் கழுத்தை நெறிக்கும் நிலை உருவாகாமல் இருக்க, முறையான தடுப்பு நடவடிக்கைகளை உடனடியாக எடுக்க வேண்டும்.

ஒரு சில படித்தவர்களிடம், ஒரு தவறான சிந்தனை, குறிப்பாக, பல்கலைக் கழகங்களில்,மொழிப் பிரிவுகள் அறிமுகம் செய்யப்பட்ட பிறகு, பேசுவதெல்லாம் கொச்சைச் சொற்களாகி விட்டன. கொச்சைப் பேச்சு, கீழ்த்தட்டு மற்றும் மேல்தட்டு மக்களிடையே இணக்கமாகிப் போனதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. கீழ்த்தட்டு சமூகத்தின் நடத்தையைப் பொதுவில் நாம் எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. ஏனெனில் அந்த விலங்காண்டி மொழி, ஏற்றுக் கொள்ளப்படாதவொன்று, சமூகத்தின் அடித்தட்டுத்தமிழர்கள், ஆங்கிலத்தைப் பயன்படுத்துகின்றனர். பழங்காலத்து இலக்கண ஆசிரியர்கள்,

உயர்ந்த பண்பட்ட சிலரே கொச்சை வழக்கைப் பயன்படுத்தினர் என்றும், பொதுவாக அவ்வாறு பேசப்படவில்லையென்றும் விளக்கினர்.

தமிழ் அகராதி,தெவிட்டும்அளவிற்கு, அனைத்து வகையான, அயன் மொழிக் கூறுகளையும் கொண்டுள்ளது. இதனைத் தமிழ் அகராதி என்று கூறுவதை விட, தென்னிந்திய மொழிகள் அகராதி எனக் கூறுவதே பொருத்தமாயிருக்கும். சொற்களும், சொற்களுக்கான பொருளும், அதனை முன் வைத்த முறையும் குறைகளுடனே காணப்படுகின்றன.

ஆப்பம் என்பது, அப்பம் என்பதின் கொச்சைச் சொல்லன்று. இரண்டும் தனித்தனியான தின்பண்டங்களைக் குறிப்பவை. சுவரொட்டியென்பது ஈரல் அன்று,மாறாக மண்ணீரல் ஆகும். போட்டி என்பது வரால் அன்று. அது குறவை எனப்படும். குறவை, வராலை விடச் சிறியது, அது ஓரடி நீளம் வரை வளரும். வரால் இரண்டு அடிகள் நீளம் வரை வளர்ந்து, முழுவளர்ச்சி பெற்ற மாந்தனின் கெண்டைக் கால் வடிவில் இருக்கும். இரண்டும் நன்னீர் மீன்கள், வெவ்வேறு வகையைச் சார்ந்தவை.

தமிழ்ச் செய்யுட்களில் அளைமறிப்பாப்பு என்றொரு வரையுண்டு. ஒரு பாடலின் பொருள் அப்பாடலின் வரிகளை மாற்றிப் படிக்கக் கிடைக்கும். பாம்பொன்று, தன்வளையிலிருந்து தலையை முதலில் காட்டி, பின்னர் தன் உடலை வளைத்துத் திரும்பவும் வளைக்குள் செல்வதைப் போல, அப்பாடல் இருக்கும். நான்கு வரிகள் கொண்ட அளைமறிப்பாவின் அமைப்பு, நான்காம் வரி முதலிலும், மூன்றாம் வரி இரண்டாவதாகவும், இரண்டாம் வரி மூன்றிலும், முதல்வரி நான்கிலும் வைத்துப் படிக்கும் போது, அப்பாடலின் பொருள் விளங்கும்.

இந்த அகராதி அளைமறிப் பாப்புவைப் பற்றிப் பின்வருமாறு விளக்குகிறது.

செய்யுளின் கடைவரி, மையத்திலுள்ள வரியின் சொல்லோடு இணையும் அல்லது ஒரு வரி மற்ற வரியிலிருந்து தொடங்கும் எடுப்பி ஒன்றாகிய பொருள் கோல் எனப்படும்.

மேற்கண்ட விளக்கம், தமிழ் இலக்கணத்துக்கு முற்றிலும் மாறுபட்டது. அளைமறிப் பாப்பு, அதாவது வளைக்குத் திரும்பும் பாம்பு என்ற முறைப்படி அமையாதது.

கச கரணம் (கஜகர்ண) போது தல் என்பது ஒரு மரபு. இதன் பொருள், யானை, குட்டிக் கரணம் (குட்டுக் கரணம்) போடுவதைப் போல, வெற்றி பெறுவதேன்பது ஒருவனுக்குக் கடினமான செயல் என்பதை விளக்கும். இந்த அகராதி, யானையின் காதுகளை அசைப்பது என்ற பொருள் விளக்கத்தைத் தருகின்றது. இந்த விளக்கத்தில் அழுத்தம் இல்லா திருப்பதுடன், போது என்ற வினைச்சொல், அதற்குரிய பொருளைத் தரவில்லை.

திரபுகளைப் பொருத்தவரை, இந்த அகராதி நிறைய குறும்புத் தனங்களைக் கொண்டிருக்கிறது. ஏறக்குறைய சிறப்புக்குரிய தமிழ்ச் சொற்கள் அனைத்தும், சமற்கிருதத் தினின்றும் பிறந்ததாகக் காட்டப்பட்டு, தவறான வேர்ச் சொல் விளக்கங்களைத் தந்துள்ளது.

இந்தியாவில் அறியப்படும் அனைத்து சமற்கிருத அகராதியிலும், ஒரே குரலாக, அனைத்துச் சமற்கிருதச் சொற்களும், ஆரிய மூலத்தைக் கொண்டவைகளே எனக் கூறுகின்றன. ஆனாலும் 46 விழுக்காட்டுச் சொற்கள், தமிழ் வேரினையோ அல்லது மூலத்தையோ கொண்டவைகளாக உள்ளன. சமற்கிருத மொழியியாளர்கள், தொடக்கத்திலிருந்தே, சிறுமை நோக்குடன், சமற்கிருதத்தை மற்ற மொழிகள் மீது திணிப்பவர்களாகவே இருந்துள்ளனர். தங்கள் முன்னோர்களின் மொழியான சமற்கிருதம் கடவுளின் படைப்பு மொழியென்று கூறிவந்துள்ளனர். இது, விந்தையன்று, அவர்களின் மனப்பான்மையே, ஒரு தலைப் பக்கமானது. ஆனால், இதில்

குறிப்பிட்டு நோக்கத்தக்கது யாதெனில், பேராசிரியர் மோனியர் வில்லியம்சு போன்றவர்கள், அவர் தொகுத்த சமற்கிருத ஆங்கில அகராதியில், சொற்களைப் பற்றிய எவ்வகையான சரிபார்ப்புகளையும் மேற்கொள்ளாமல், கண்மூடித்தனமாக, சமற்கிருதத்தை முன்னிறுத்தியுள்ளார். இவருடைய அகராதியே, தமிழில் அகராதி தொகுத்தவர்களுக்கு, ஊக்கம் தந்து, சமற்கிருதத்தில் பல சொற்களைத் தமிழோடு இணைத்து விட்டனர். அதன் வழியில், டாக்டர் கால்டுவெல்லும், தனது பொருந்தாத கொள்கைகளை, உண்மைகள் போல அறிவித்தார்.

அய்யன் என்ற தமிழ்ச் சொல்லோடு, ஆர்யன் என்ற அயன்மொழி இனப் பெயரை, இடுகுறிப் பெயராக இணைத்தனர். அய்யன் என்பது, உயர்வான ஒருவன் என்ற பொருளைத் தரும், தமிழ்ச் சொல்லாகும். தமிழரில், தாழ்த்தப்பட்டவர்கள் என்று கருதப்பட்ட மரபினர் உள்ளிட்ட பிறரும் தங்கள் மரபு வழியில், தங்களுடைய தந்தையை அய்யன் என்றே அழைத்து வந்தனர்.

அய்யன் என்ற சொல், அய் என்ற வேரினின்றும் விரிந்து, உயர்வு, பெருமை என்ற பொருளைத் தரும் சொல்லாகும்.

அச்சன் என்பது, அத்தன் என்ற மற்றொரு தமிழ்ச் சொல்லின் திரிபாகும். தந்தையென்ற பொருளில் இச்சொல் உள்ளது. இது, அசா என்று பிராகிருதத்தில் சொல்லப்பட்டது. இவ்விரு சொற்களில் திரிபாகவே, ஆர்ய என்று சமற்கிருத்தில் சொல்லப்பட்டது.

வரி என்ற சொல்லுக்கு, திறை என்றும் கட்டுதல் என்றும் பொருள். பல் என்பது, படைப்பதைக்குறிப்பது, இதற்கும் திறைக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. ஆனால், இவ்விரு சொற்களுக்கும் தொடர்பு இருப்பதாக, தமிழ் அகராதி கூறுகிறது.

தமிழ் அகராதி கூறும் திரிபுகளில் ஒன்று கூர்ந்து நோக்கத் தக்கது.

ஆமைவடை என்ற தமிழ்ச் சொல், ஆம வடை என்றவாறு சொல்லப்பட்டு, சமற்கிரு மூலத்தில் திரித்துக் காட்டப்பட்டுள்ளது. ஆமை யென்பது, ஆம என்றவாறு உள்ளதால், அதன் பொருளே மாறுபட்டுவிட்டது. ஆமை வடை என்பது ஒரு கூட்டுச் சொல். அந்த வடையின் அமைப்பு, ஆமையின் மேலோட்டைப் போன்று உள்ளதால், அவ்வாறு சொல்லப்பட்டது. ஆமையைத் தொடர்ந்து ஆமைத்தாலி, ஆமைப் பலகை, ஆமைப் பூட்டு பொன்ற சொற்களும் உள்ளன. இவையெல்லாம் தமிழ் அல்லாத சொற்கள் போல் பதிவு செய்யப்பட்டுள்ளன. அகராதியின் 506 ஆம் பக்கத்தில், உடுக்குறியீட்டுக் காட்டப்பட்டுள்ளன.

எ.கா : உம்பரார் - தேவர், வானுலகத்தவர். உயர்ந்தவன் : சான்றோன், மேலானவன். காலம் காலமாகச் சொல்லப்படும், அம்மைப் போடுதல், அம்மை நோய் பிடித்துள்ளதை எளிமையாக விளக்கும் சொற்களாகும். அகராதி, இதனை அம்மைப் போட்டுதல் என்று பதிவு செய்துள்ளது. போடு என்பது, வைத்தல் என்றும், போட்டு என்பது, பால் அல்லது நீர் முதலியவற்றை சங்கு போன்ற கருவிகளால் தருதல் என்றும் பொருள்படும்.

அகராதியைத் தொகுத்தவர்கள், வழிகாட்டும் நெறிமுறைகளுக்குப் புறம்பாக, தமிழை எவ்வளவுக் கெவ்வளவு சிறுமைப் படுத்த முடியுமோ, அவ்வாறு செய்து, உலக அரங்கில், தமிழை ஒரு கலப்பு மொழி போன்றும், சிறப்புகளற்ற மொழி போன்றும் காட்டியுள்ளனர்.

டாக்டர் கால்டுவெல், சமற்கிருதத்திலுள்ள சில சொற்களை மட்டுமே, தமிழ் வேரைக் காட்டி விளக்கியுள்ளார். இந்த சில சொற்களைக் கூட, அகராதியைத் தொகுத்தவர்கள், பயன்படுத்திக் கொள்ளவில்லை. அகராதியில் கண்டுள்ள பல குறைகள், தவறுகள் அனைத்திற்கும், அதனைத் தொகுத்தவர்களும் அதன் உறுப்பினர்களுமே பொறுப்பேற்க

வேண்டும். இவர்களுக்கு, தமிழ் மொழியின் மீது உண்மையான பற்று இல்லாததோடு, தரமான ஓர் அகராதியைத் தமிழில் எவ்வாறு தொகுத்து வெளியிட வேண்டும் என்பது தெரிந்திருக்கவில்லை. அனைத்துக்கும் மேலாக, இத்தவறுக்கு, பல்கலைக்கழகமே பொறுப்பேற்க வேண்டும்.

தமிழ்ச் சிந்தனையாளர்களைப் பொருத்தவரை பழமையை விரும்புகிறவர்கள் ஒருபுறமும், முரண் கோட்பாட்டாளர்கள் மறுபுறமும் உள்ளனர். இவர்களின் முன்னவர் பற்றிய பகிர்தல், பதிப்பித்தவர்களின் பதிப்புரையில் இல்லை. மற்றவரின் கொள்கைகள் அழிம்புகளாக உள்ளன. பதிப்பாளர்கள், தமிழின் வேர்ச் சொற்கள் மற்றும் மொழியியல் பற்றி எந்த ஆய்வுகளையும் செய்யவில்லை. அவர்களுக்கு ஓர் அகராதியை உருவாக்குவதற்கான பட்டறிவும் இல்லை. மேலும் அவர்களுக்கு, திருநெல்வேலித் தமிழில் உரையாடவும் தெரியாது. அத்தமிழே வளமான தமிழ் என்பதும் அவர்கள் அறியாதவர்கள்.

பதிப்புத் துறையில் பணியாற்றிய பெரும்பாலோர், காய்கறி உணவை உண்பவர்கள் போல் தெரிகின்றது. அவர்களுக்கு இறைச்சியுணவு பற்றிய சிந்தனையும் புரிதலும் இல்லை. அகராதியில் பல மீன் வகைகளின் பெயர்கள் இடம் பெற்றிருந்தாலும், மேலும் நூற்றுக் கணக்கான மீன்களின் பெயர்கள் இடம் பெறவில்லை. அவற்றை இணைக்க முயற்சிக்கவும் இல்லை.

பதிப்புத் துறை உறுப்பினர்களுக்கு, தமிழ்ச் சொற்களின் வளமை பற்றியும், தமிழில் வழக்கிலுள்ள கொச்சையான வட்டாரச் சொற்கள் பற்றியும், கலைத்துறை, அறிவியல் துறை சார்ந்த பல சொற்களை எவ்வாறு கோர்ப்பது என்பது பற்றியும், தெளிவான சிந்தனையில்லை. முன்பு அறியப்பட்ட அகராதிகள் மற்றும் அருஞ் சொல்லகராதிகளை மட்டுமே முற்றிலுமாகச் சார்ந்து, தொகுத்துள்ளனர். தொல்காப்பியத்தில் இலக்கண

வகையாச் சொல்லப்பட்டுள்ள, இயலசை, உரியசை போன்றவற்றை, பிற்சேர்க்கையாகவே இணைத்துள்ளனர். நெடு நாட்களுக்கு அல்லது காலத்துக்குப் பிறகு, பெருமளவிலான வழக்குச் சொற்கள் விடுபட்டுள்ளதை அறிந்து கொண்டனர். அதன் பிறகும் கூட, அவற்றை இணைக்க ஆர்வம் காட்டவில்லை. நான், திருச்சிராப்பள்ளி, புத்தூர், பிசப் ஈபர் உயர்நிலைப் பள்ளியில் 1934 இல் பணியாற்றிய காலத்தில், ஆயிரக்கணக்கான, பதிவு செய்யப்படாத தமிழ்ச் சொற்களை, மாவட்டம் வாரியாகத் தொகுத்தளிக்கவும், மாதம் ஒன்றுக்கு நூறு உருவாய் நிலையான ஊதியம் வழங்கவும், இரண்டு ஆண்டுகளில் முடித்துத் தருவதாகவும், பதிப்பாளருக்கு விண்ணப்பித்தேன். எனது கோரிக்கை முற்றிலுமாக மறுக்கப்பட்டது. அவர்கள் செய்தது, என்னை மதிப்புறு நடுநிலையாளராகக் கருதி, அகராதித் தொகுதிகள் அனைத்தையும், நான் அனுப்பியிருந்த 200 சொற்களுக்கு உறுதியளித்து, அனுப்பியிருந்தனர். அதிலும் கூர்ந்து நோக்கத் தக்கது என்னவென்றால், நான் அனுப்பியிருந்த சொற்களில் பலவற்றைப் பிற்சேர்க்கையில் அவர்கள் இணைக்கவில்லை. எ.காட்டாக கருங்களமர், கரோக்கல். பதிப்புக் குழுவினர், டாக்டர் வின்சுலோவின் அகராதியில் சொல்லப்பட்டிருந்த பொருள் விளக்கத்தின் மீது நம்பிக்கை கொள்ளாமல், தாங்களே முயன்று முதன் முதலில் தலைப்பணியாக இதனை முடித்ததாகக் கருதிக் கொண்டனர். எ.கா.பண்ணுகிறேன் என்ற சொல்லுக்கான நான்காவது விளக்கமாக, ஒவ்வொரு சொல்லாக ஓது, பொருள் விளக்கு, விவரிக்க என்பவை, அகராதியில் விடப்பட்டிருந்தன.

அருளாளர் சே.எஸ். சாண்லர் தன் அலுவலகத்தில் மிகக் குறைந்த காலமே பணியில் இருந்தார். பதிப்புக் குழுவின் உறுப்பினர்கள், கைவினைஞர்கள், தொழிலாளர்கள் வாழும் பகுதிகளுக்குச் சென்று அல்லது முகவர்களை அனுப்பி, தொழில்கள் சார்ந்த கலைச் சொற்களையும், அவற்றிற்கான

பொருளையும் பெற முயற்சிகளை மேற்கொள்ளவேயில்லை. துறைசாராத இலக்கிய இணைவாளர்கள், தன் முனைவு நடுநிலையாளர்கள் என, ஊதியமில்லாத ஆர்வலர்களை பணிகளுக்குப் பயன் படுத்திக் கொண்டனர். அதனால் பல தொழிற்கருவிகளின் பெயர்கள், துணைக் கருவிகளின் பெயர்கள் பலவும் அகராதியில் காணப்படவில்லை. எ.கா உருண்டை அரம், கட்டி அரம், சிட்டியரம், பூவரம், பொந்தரம், முள்ளரம், முடுக்கரம் போன்ற தச்சுத் தொழிலுக்கான கருவிகளின் பெயர்கள் அகராதியில் இல்லை.

சாதிகள், துணைச் சாதிகள், சமூக வழக்காறுகள், சடங்குகள், குழந்தைகளின் விளையாட்டு, மரம் செடி கொடிகள், பூச்சியினங்கள், என்றவாறு நூற்றுக் கணக்கான பெயர்ச் சொற்கள் அகராதியில் காணப்படவில்லை. மாறாக, அருளாளர் சாண்லர் மட்டுமே சமற்கிருத ஆசிரியர்களின் துணை கொண்டு மேற்பார்வையிட்டு, வழிநடத்தி, செயல்பட்டார் எனலாம். திரு. வையாபுரிப்பிள்ளை, தமிழராயிருந்தும் தமிழின் மீது மெய்யான பற்றும் ஆர்வமும் கொண்டிருந்தவரல்லர். அகராதிக்குப் பதிப்பாசிரியராகப் பொறுப்பேற்றுக் கொண்டிருந்த அவர், பழமையாளர்களின் கொள்கைகளோடு ஒட்டிக் கொண்டிருந்தவர். தொல்காப்பியத்துக்கு அவர்குறித்த காலக் கணக்கு, கிறித்துவ ஊழியின் தொடக்க நூற்றாண்டுகளாகும். தமிழ் இலக்கியங்களில் காலங்களையும் மிகவும் பின்னோக்கித் தள்ளியவர். உரிச்சொல், இயற்சொல், திரிசொல், திசைச் சொல் ஆகியவற்றுக்குத் தவறான விளக்கங்களை அளித்து, எதிர்மறையாக வழி நடத்திச் சென்றார். தொல்காப்பியத்தின் மிக எளிமையான "விழிப்பத்தோன்றா" என்ற சொல் உள்ள தொடர்மொழிக்கு, விளக்கம் தர இயலவில்லை.

"மொழிப் பொருளும் காரணம் விழிப்பத் தோன்றா" (தொல் .877)

தொல்காப்பியர் கூறுவது, சொற்களுக்கான மூலம், கண்டறிவதற்கு அப்பாற்பட்டது என்று, மேற்கண்ட வரிக்குத் தவறான விளக்கத்தைத் தந்துள்ளார். தொல்காப்பியர் அவ்வாறு எங்கும் சொல்லவில்லை. விழிப்பத் தோன்றா என்ற சொல்லுக்கு, முதற்பார்வையில் தெளிவு பிறக்காது என்பதே. பதிப்பாசிரியர், விழிப்பு என்ற இட வினையடைச் சொல் பற்றி அறியாது தவறான விளக்கத்தை அளித்துள்ளார். தோன்றா என்பதற்கும், விழிப்பத் தோன்றா என்பதற்கும் பெருத்த வேறுபாடு உள்ளது. பேச இயலாது என்பதற்கும், ஆற்றொழுக்காகப் பேச இயலாது என்பதற்கும் உள்ள வேறுபாட்டை ஒப்பு நோக்கலாம். (can not talk - can not fluently talk). இப்போதும் கூட, 50 விழுக்காட்டுக்கு மேற்பட்ட சொற்களுக்கு, தோற்றச் சொற்களைக் கண்டறியலாம். கி.மு.ஏழாம் நூற்றாண்டான தொல் காப்பியர் காலத்தில் மேலும் பல சொற்கள் கண்டறியப்பட்டிருக்கலாம்.

புடலை (புடலங்காய்) என்ற சொல்லின் முதற்சொல், படோலிகா என்றவாறு, தலைகீழான, தவறான விளக்கத்தை அளித்துள்ளார்.

புல்-----பொள் (துளையிடு) ------ புழல் (உள்ளீடு)---------- புடல் ---- புடலை: உள்ளீடு உடைய. (3000 ஆண்டுகளுக்கு முன்பு தமிழகம் வந்த, வேதக் குடியிருப்பாளர்களில் ஒரு பகுதியினரான சமற்கிருதப் பண்டிதர்களில் எவரும் இதுவரையில் கூட தமிழ் மொழியில் புலமை பெற்றிருக்கவில்லை. அதற்கான காரணங்களாவன.

1. சமற்கிருத மொழியாளர்கள், தமிழர்களோடு தங்களை இணைத்துக் கொள்ளாமல், ஒவ்வொரு நிலையிலும் தங்கள் அரிய மனப்பான்மையை இன்றுவரையிலும் பேணிக் காத்து வருகின்றனர்.

2. தமிழ் காட்டு வேளாண் மக்களிடம் நெருங்கிப் பழகவில்லை. அவர்களின் தமிழே, தூய்மையான, வளமான, வட்டார மரபுகளைக் கொண்டது.

3. அவர்களுக்குத் தமிழ் மொழியைக் கற்பதில் ஆர்வமில்லை. தமிழ் மரபுகளைப் பின்பற்றி, தமிழ்ச் சொற்களைப் பேச முயற்சிகளை மேற்கொள்ளவில்லை. மாறாக, தமிழைக் கெடுக்கவும் அழிக்கவும், சமற்கிருதச் சொற்களைத் தமிழில் புகுந்துவதின் வாயிலாக, தமிழ் மரபுகளைச் சிதைக்கவும் முற்பட்டனர்.

ஒரு நாட்டின் இலக்கியத்தை வெளிநாட்டவர் எவரும் கற்றுத் தேறலாம். புலமை பெறவும் இயலும். ஆனால் அம்மொழியின் மரபுகளும், சொற்களின் பயன்பாடுகளும், அந்நாட்டு மக்களின் உள்மனத்திலிருந்து எழும் ஆழம் நிறைந்தவை. பல தலைமுறைகளாக ஒரு நாட்டில் வாழும் வெளிநாட்டவர், உள் நாட்டு மக்களுடன் கலந்து, உரையாடி, வாழ்ந்திருந்தாலும், அம்மக்களின் மொழியில் முதிர்ச்சியான அறிவைப் பெற்றுவிட இயலாது. சமற்கிருதம், தமிழ்நாட்டில் அனைத்திலும் முன்நிறுத்தப்பட்டு, தமிழ் புறக்கணிக்கப்பட்டு வந்தது. ஆனால், தற்போது அந்த அளவீடுகள் மாறத் தொடங்கியுள்ளன. பல்கலைக் கழகங்களின் உயர்நிலை அலுவல் பொறுப்பாளர்கள், சமற்கிருதத் தலைமையை ஏற்று, இயல்பாகவே தமிழை விரும்பாதவர்களாக உள்ளனர்.

தற்காலத் துணை வேந்தர், முன்னோர் வழியில் தமிழராயிருந்தாலும், தெலுங்கைத் தாய் மொழியாகக் கொண்டார். அதனால், யார் யாரெல்லாம் தமிழ்த்துறையில் சிறப்புற்றிருக்கிறார்கள் என்பதை அவரால் அறிய இயலவில்லை. சமற்கிருதப் பற்றாளர்களின் புகழும் செல்வாக்கும், பல்கலைக் கழகத்தில் பணிகள் கிடைப்பதற்கு அடிப்படைத் தகுதிகளாக உள்ளன. சமற்கிருதத்துக்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பு, ஏற்பவனுக்கும் (aggressor) மறுப்பவனுக்கும் இடையே உள்ளதாகவே நிலைமைகள் உள்ளன. தமிழ் மக்களின் கல்வியறிவின்மை, தமிழுக்குச் சார்பான, பொதுக் கருத்தை உருவாக்குவதற்கு தடையாக உள்ளது. உலக அளவிலான, ஆவலோடு எதிர்பார்க்கப்படும் அமைப்பு, கடந்த மூவாயிரம்

ஆண்டுகளாகத் தமிழருக்கு இழைக்கப்பட்டு வரும் கெடு முறைகளையே வழிவகுக்கும்.

**திராவிட வேர்ச் சொல்லகராதி (பர்ரோ மற்றும் எமனோ)**

பேராசிரியர் டி.பர்ரோ, மேலை நாட்டைச் சார்ந்த, கீழை நாட்டு மொழிகள் பற்றிய ஆய்வுகளை, இன்று, மேற்கொண்டு வரும் அறிஞராவார். அவர், தமது விலைமதிப்பற்ற தொண்டின் வழியே சமற்கிருதச் சொற்கள் என்ற கருதப்பட்ட பலநூறு தமிழ்ச் சொற்களைக் கண்டறிந்து, மீட்டுருவாக்கம் செய்துள்ளதற்கு, தமிழர்கள் நன்றிக் கடன் பட்டுள்ளனர். சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்ட, ஏராளமான தவறுகளையும், பிழைகளையும் கொண்டிருக்கும் அகராதியின் பல சொற்களுக்கு, பேராசிரியர் எமனோ அவர்களின் பங்களிப்புடன், திராவிட வேர்ச் சொல் அகராதி ஒன்றை, பர்ரோ தொகுத்துள்ளார்.

முதன் முதலில், இந்த அகராதியின் பெயரே பொருத்தமற்றதாக உள்ளது. இது, சொற்களுக்கான ஒப்பீட்டு அகராதியாக உள்ள தேயன்றி, அகராதியில் உள்ளது போல், வேர்ச் சொல் அகராதியாக இல்லை. திருவாளர்கள் கீட், சேம்பர், ஆகியோரின் வேர்ச் சொல் அகராதி என்ற அடைமொழி, இதற்குப் பொருந்தாது.

அருளாளர் ரிச்சர்ட் மோரிசு வேர்ச் சொல்லுக்குத் தரும் விளக்கம் வருமாறு:

“வேர்ச் சொல் என்பது, சொற்களின் வரலாற்றைக் கட்டமைத்திருக்க வேண்டும். இதனுடைய தலைப்பிரிவுகள், உட்பாயம் (influx) திரிபுகளைக் கொண்டவை” (இயைபையும் உள்ளடக்கியது).

தமிழ் எண் ஆயிரம் என்பது, சமற்கிருதத்தின் சகசர என்பதிலிருந்து திரிந்ததன்று. உண்மை வேறு வகையாக உள்ளது. ஆயிரம் என்ற சொல்லின் கட்டமைப்பு வரலாறும் வருமாறு:

அய் : அழகு, நுண்மை, கூர்மை.
அய்-அயில் : கூர்மை, கூர்மையான வாள்.
அயில் -அயிர் : நன்மணல், மணல் போன்ற சர்க்கரை.
அயிர் - அயிரை: மணலில் தன் உடலை மறைத்துக் கொள்ளும் ஆற்றுமீன்.

அயிர் - அயிரம் (அம், சிறப்பு விகுதி) ஆயிரம். ஆயிரம் என்ற சொல். கடலுள் மூழ்கிப் போன தமிழரின் தாய் நிலமான குமரிக் கண்டத்தில், வழக்கில் இருந்திருக்க வேண்டும்.

அளவிட இயலாத, எண்ண முடியாத பொருட்களில் ஒன்று மணல். கடவுள் ஆபிரகாமிடம் அளித்த உறுதி மொழியின் படி, அவனுடைய இனத்தை, கடலின் மணலைப் போலவும், வானத்து விண்மீன்களைப் போலவும், பல்கிப் பெருகச் செய்தார்.

நூறு : தமிழ் எண். மாவு,மாவுப் பொருள், நுறு என்ற சொல்லின் நீட்சி.
நுறு : நொறுக்கப்படுதல்.
மலையாளத்தில் ஆயிரம் என்ற சொல், தமிழில் உள்ளதைப் போன்றே உள்ளது.

உயிர் மெய்களான ய ரமும் ச கரமும், தமிழில் அவ்வப்போது மாற்றம் பெறும். இவையிரண்டும் மாறி மாறி அமைவது. தமிழில் மட்டுமல்லாது. திராவிட மொழிகளிலும் அறியப்படும்.

| | | | |
|---|---|---|---|
| எ.கா. | தமிழ் | கொச்சைத் தமிழ் | கன்னடம் |
| | அயிரை | அசிரை | ------- |
| | உயிர் | உசிர் | உசிர் |
| | பயறு | ----- | பெசர். |

உ என்ற உயிரில் தொடங்கும் சொற்கள், ச என்ற உயிர்மெய்யிலும் தொடங்கும்.

உடை : சுடை, உதைக்கும் பசு.

உருள் : சுருள், சுருண்டிருப்பது.

உழல் : சுழல், சுற்றுவது.

எனவே, தமிழில் ஆயிரம் எனப்பட்டது. சசிர, சாவிர என்று கன்னடத்திலும் திரிந்தது. மேலே கூறியவாறு, யகரமும் சகரமும் சில நேரங்களில் இணையும்.

ஈவு- ஈசு : தூண்டு, நேர்செய்

பரவு - பரசு : புகழ்ந்து கூறுதல்.

விரவு - விரசு : கலத்தல்.

துளு மொழி, பெரும்பாலும் கன்னடத்தைப் பின்பற்றும். சாவிர (ஆயிரம்)- சார(துளு)

சமற்கிருதத்தின் சகசர, கன்னடத்தின் சாசிரயின் திரிபாகும். இவையெல்லாம், ஆயிரம் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபுகளாகும்.

தமிழில், ஆயிரம் என்பதற்கான மாற்றுச் சொல் இல்லையென்பது நோக்கத்தக்கது. தமிழில் ஆயிரம் என்ற சொல்லுக்கான முன் சொற்கள் விளக்கப்பட்டது போல், சமற்கிருதத்தின் சகசர என்ற சொல்லுக்கு எந்த விளக்கமோ முன் சொல்லோ கூறப்படவில்லை.

டாக்டர் பி.எசு.சுப்பிரமணிய சாத்திரியின், தொல்காப்பியம், இரண்டு பகுதிகளுக்கான மொழிபெயர்ப்பு, திராவிட வேர்ச் சொல்லகராதியில், இடம்பெற்றுள்ள, நூற்தொகுதிப் பட்டியல் உள்ளதால், அகராதிக்கு இந்நூல் பயன்பட்டிருக்கிறது எனலாம்.

டாக்டர் பர்ரோவும் சில தவறுகளை, திராவிடவியல் IV இல் செய்துள்ளார். தொடர் நிகழ்வுகளாக தமிழ் மற்றும் மலையாள மொழிகளில் காணப்படும் இந்திய- ஆரியம், குழிவுர சொல்லியாக விடப்பட்டது. (Sibilant) அரிதான

எடுத்துக்காட்டுகள். தெலுங்கிலும் கன்னடத்திலும் இருந்தன. சமற்கிருதத்திலுள்ள குழிவுர சொலிகள், பிராகிருத்தினின்றும் கடன்பெறப் பட்டவை. முகவுரையில் சொல்லப்பட்டுள்ளவை ஒரு தலைப்பக்கமாக, தொடர்ந்த ஆய்வுகளில் தவறுகளைக் கொண்டுள்ளது. மேலும் கற்றறிந்த பேராசிரியரான பர்ரோ, பல தமிழ்ச் சொற்களுக்கான வேர்களைப் பற்றிய பொருளை அறியாதிருந்தார். இதன் தொடர்ச்சியாக, ஆடை-சாதா, ஏணி-சிரேணி, பலா- பனசா, சடை- சடா போன்ற, பின் சமற்கிருதக் சொற்களின்றும் முன் தமிழ்ச் சொற்கள் திரிந்ததாகக் கருதினார். விளக்க இடமில்லையாதலால் , அவருடைய தவறான சொற் திரிபுகள் பற்றி முழுமையாக எழுத இயலவில்லை.

அணில் என்ற தமிழ்ச் சொல் அணி(கோடு),இல்(வீடு) என்றவாறு பிரித்தறியப்படும். அணில்தன் முதுகில், மூன்று கோடுகளைக் கொண்டுள்ளது. பழந்தமிழர்கள், பொருட்கள், உயிரினங்களின் உருவ அமைப்புகளையும், பண்புகளையும் கூர்ந்து நோக்கி, ஒவ்வொன்றுக்கும் பெயரிட்டனர். சணிலு என்று துளு மொழியில், முதல் உயிர்மெய், செயற்கையாக இணைக்கப்பட்டது. இதே போன்ற பல சொற்களை, திராவிட மொழிகளில், பேராசிரியர் பர்ரோ காட்டுகிறார்.

சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிடப்பட்டுள்ள அகராதி, எழுத்துப் பெயர்ப்பு உள்ளிட்ட பல குறைபாடுகளைக் கொண்டுள்ளது. எழுத்துப் பெயர்ப்பு (trans literation) சரியாக அமைக்கப்படாததால், தமிழர்களும் வெளிநாட்டவரும் கூட, குழப்பமடைகின்றனர். பாம்பு -Paampu என்றும், கொடு - Kotu என்றும் உள்ளன. முன்னது பாம்பையும், பின்னது கொடுக்கையும் குறிக்கும்.

தமிழ் - ஆரியக்குடும்பம் தொடர்பான சில சொற்கள்.

| தமிழ் | ஆரியன் |
|---|---|
| தூண், தூணம் | தூணா (சம) |
| மயிர் | மங்ரு (சம) |

| | |
|---|---|
| நாகம் | நேக்( செர்மானியம், ஆங்கிலம்) |
| | நேக (பழைய ஆங்கிலம்) |
| மெது | மூத் (ஆங்கிலம்) |
| உம்பர் | சூப்பர் ( இலத்தீன்) |

நாகம் என்ற தமிழ்ச் சொல், நகர் (to creep) என்ற சொல்லின்றும் பிறந்தது.

சினிகன் (snican) என்ற ஆங்கிலோ சாக்சானியச் சொல்லுக்கு, நகர்தல் என்பதே பொருளாகும்.

**வேர்ச் சொல்லடக்கம் என்பது, தமிழறிஞர்களாலும் எளிதாகக் கையாளக் கூடியதன்று. தனது வாழ்நாள் முழுவதும் இத்துறையில் ஈடுபடுத்திக் கொண்டு, முயன்று உழைப்பவர்களுக்கு மட்டுமே இது கைகூடும்.**

எடிமோசு (Etymos) என்ற கிரேக்கச் சொல்லுக்கு உண்மையென்றும், லோகோசு (logos) என்பது அறிவியல் என்றும் சொல்லப்பட்டு, Etymology என்ற சொல் உருவாயிற்று. அறிவியல் சார்ந்த உண்மை என்பது இதன் பொருளாகும். தவறாகச் சொற்கள் திரிக்கப்பட்டால், அது வெர்ச்சொல்லாக அமையாது.

## 12. இந்து சமயம் என்றால் என்ன?



இந்தியரில் பலரும், வெளி நாட்டவருங் கூட நினைப்பதுபோல், இந்து சமயம் என்பது, ஒரு தனிச் சமய மன்று. தமிழரின் இருபெரும் சமயங்களான சைவம், வைணவம் ஆகிய இரண்டு சமயங்களின் கலப்புச் சமயமாகும். பிராமணர்களின் வழிபாட்டு முறையென்பது, பிரம்மாவை வணங்குவதே.

வேத ஆரியர்களின் சமயச் சடங்குகள், விரிவாகவும், பரந்த அளவிலும், ஏராளமான படையல் பொருட்களையும் கொண்டிருந்தன. இந்த சடங்குகள், நடைமுறைகள் பற்றி இந்தியர்கள் எவரும் அறிந்திருக்கவில்லை. வேத ஆரியர்கள், உண்மையில், வட இந்தியாவில் வாழ்ந்திருந்த திராவிடர்களின் சைவக் கொள்கைகளையே, போலியாக மாற்றிக் கொண்டனர். சிசுன தேவா என்ற லிங்க வழிபாட்டை, வட இந்தியாவில், சைவத்துக்கு மாற்றாகக் கடைபிடித்தனர். ஆனால், பிற்காலங்களில், திராவிடர்களின், குறிப்பாகத் திராவிடப் பழங்குடியினரின், தனித்தன்மையான, ஒரு கடவுள் வழிபாட்டுக் கொள்கை தொடர்பான சடங்குகள், உயர்ந்தவைகளாகவும், தங்களுடையவை கீழ் நிலையிலும் இருப்பதை அறிந்து,

திராவிடர்களின் சடங்குகளை தங்கள் சடங்குகளாக மாற்றுவதற்கான நம்பிக்கையை இழந்தனர். அதனால், அவர்கள், சைவத்திலும் வைணவத்திலும் கலந்து போயினர். அதே வேளையில், இவ்விரண்டையும் கலந்து, பிரம்மா வழிபாட்டு முறையாக, ஆரியப்படுத்தினர். பிராமணீயம் சமயத் தலைமையாகவும், சமற்கிரும் சமய வழிபாட்டு மொழியாகவும் மாற்றம் பெற்றன. கடவுளின் முப்பணிகளைத் தமக்குச் சார்புடையனவாக மாற்றிக் கொண்டு, முக்கடவுளராக பிரம்மா, விட்டுணு, சிவன் ஆகியோரைப் படைத்து, அவர்களுக்கான பணிகளாக, படைத்தல், காத்தல், அழித்தல் என்பவற்றை ஒதுக்கீடு செய்தனர்.

தமிழர்களின் நன்மதிப்பைப் பெறும் நோக்கத்தோடு, பிரம்மாவைப் படைத்து, அவனை விட்டுணுடன் இணைத்து,, விட்டுணுவை, மலைமகளின் உடன் பிறந்தவனாக்கினர். மலைமகள், சிவனின் மனைவியானாள். வேதத்தில் சொல்லப்பட்ட உருத்திரன் என்ற புயல் கடவுள், சிவனாக அறியப்பட்டான்.

விட்டுணு, விண்டு அல்லது மாயோன் என்று இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள திருமால், பெருமாள் என்று வட்டார வழக்கில் தமிழர்களால் அழைக்கப்பட்டான். வேதத்தில் சொல்லப்பட்டுள்ள விட்டுணு சூரியக் கடவுளாவான். விண்டு என்ற தமிழ்க் கடவுளோடு எந்தத் தொடர்பும் இல்லாதவன். விட்டுணு என்பதற்கான தமிழ்ப் பொருள், கறுமையான ஒன்று என்பதே.

வேதத்தில் சிவன் என்ற சொல்லுக்கு, நன்மை என்று பொருள் சொல்லப்பட்டாலும், வேதத்தில், உருத்திரன் என்ற அடைமொழியால் சுட்டப்படுகின்றான். இந்திரனும் அக்கினியும் அவ்வாறே. ஆதலால், சிவன் என்ற தமிழ்ப் பெயருடன், உருத்தினைக் குழப்பிக் கொள்ளக் கூடாது. சிவன் என்றால் சிவந்தவன் என்று தமிழில் பொருளாகும்.

கடவுள், வரலாற்றுக் காலத்துக்கு முன்பே, சிவன் என்றும் திருமால் என்றும் தமிழர்களால் வணங்கப்பட்டனர். இரண்டு பிரிவுகளான சைவம், வைணவமும் ஆகிய இரண்டும், ஏறக்குறைய, கிறித்துவம் இசுலாத்தைப் போன்றவையே. புத்தமும் சமணமும் இவற்றில் சேராது.

கற்றலின் பெண் தெய்வம், நாமகள் அல்லது கலைமகள்(சரசுவதி -சம) பிரம்மாவின் மனைவியாகச் சொல்லப்பட்டு, அவனது நாவிலே அமர்ந்திருப்பதாகவும், நான்கு முகங்களும், நான்கு வேதங்களைக் குறிப்பிடுவதாகவும் உருவகம் செய்யப்பட்டன. இந்த பிரம்மாவே, பிராமண சமூகத்தின் முன்னோன் என்று கருதப்படுகின்றது. பிரம்மா, பிராமணர்களை, தனித்தன்மையுடன், மிகச் சிறந்த அறிவைத் தந்து, அவர்களை, உயர்கல்வியாளர்களாகவும், கற்பிக்கும் துறைகளிலும் பணியாற்றப் படைத்தான். வேதங்கள், அனைத்துத் துறைகளையும் கொண்டிருந்த அறிவைப் பெறும் முதன்மையைப் பெற்றிருந்தன.

வேத பிராமணர்கள், தங்களை, இந்நாட்டின் மக்களாக அறிவித்துக் கொண்டதில், வெற்றி கண்டனர். தங்களை, தேவர்களின் வழித் தோன்றல்கள் என்றும் சொல்லிக் கொண்டனர். பிரம்மாவின் வழிபாட்டு முறைகளில், ஈடுபடாமல், வணங்காமல், எந்தவொரு கோயிலையும் அவனுக்காக உருவாக்காமல், முற்றிலுமாகத் தங்கள் கடைமைகளிலிருந்து தவறியிருந்தனர். இதனால், பிரம்மா புகழ் இல்லாதவன் என்றும் பொய்யன் என்னும் புறக்கணிக்கப்பட்டான். குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால், அவன் பிராமணர்களாலேயே கைவிடப்பட்டான்.

கிறித்துவ ஊழியின் இடைக்காலத்தில், சைவம் வைணவம் என்ற இரு சமயங்களும், தங்களுக்குள், கடுமையான கருத்து வேறுபாடுகளால் மோதிக் கொண்டன. யார் ஆற்றலுள்ள கடவுள், சிவனா, விட்டுணுவா என முரண்பட்டு, முத்தொழிலையும்

செய்பவன் யார் என்பதில் முரண்பட்டனர். அதன் விளைவாக, முத்தொழிலையும் செய்பவன், தங்கள் கடவுளே என்றும், தனியொருவனாகவே அம்மூன்று தொழில்களையும் செய்வதாக, ஒவ்வொருவரும் அறிவித்துக் கொண்டனர். இதனால், முத்தொழிலையும் செய்யும் மூன்று கடவுட் கொள்கை மறைந்து போய், இன்று புராணங்களில் மட்டுமே உள்ளது.

தற்காலத்தில், தமிழர்கள் விழிப் புணர்வைப்பெற்று, இடைக்காலத்தில் சொல்லப்பட்டது போல் அல்லாமல், சைவம் அல்லது வைணவத்தைத் தேர்வு செய்து, இந்து என எண்ணாமல், தத்தம் வழிபாட்டு முறைகளில் ஈடுபட்டு வருகின்றனர்.

ஆரியர் வருகைக்கு முன்னர், தமிழர்கள் தங்கள் வழிபாட்டு முறைகளில் மூன்று பிரிவுகளாக, தங்கள் மனம், அறிவு வளர்ச்சி சார்ந்து செயல்பட்டு வந்தனர். கீழ்த்தட்டு கல்வியறிவில்லாத மக்கள், பல தெய்வங்களை வழிபட்டு வந்தனர். நடுத்தட்டு மக்கள். சிலை வழிபாட்டில் ஒரு கடவுள் கொள்கையைக் கொண்டிருந்தனர். முனிவர்களும் சித்தர்களும், உருவமற்ற ஒரு கடவுள் கொள்கையைப் பின்பற்றி வந்தனர்.

கடவுளை, பெயரில்லாத, உருவமற்ற நிலையில் எப்போதும் வழிபட்டு, அவனை, முதலும் முடிவுமில்லாத, அனைத்துமான, கருணையுள்ள, எப்போதும் எங்கும் நிறைந்திருக்கின்ற, முக்காலங்களையும் கடந்த கடவுளாக, உள்ளத்தாலும், உணர்வாலும், கடவுள் என்றும், நிலை கடந்த இறைவன் என்றும் வழிபட்டு வந்தனர். இடைக் காலத்தில், எல்லோராலும் புரிந்து கொள்ள இயலாத கொள்கைகளை, பற்று வழியில், சித்தர்கள் என்ற மரபினர் தொடங்கினர். அவர்கள், 18 சித்தர்களாக அறியப்பட்டிருந்தனர். ஆரியர் வருகைக்கு முன்பிருந்த தமிழரின் வழிபாட்டு முறைகளை, ஆரியர்கள் புறந்தள்ளினர். ஏனெனில், அவர்களுடைய வருவாய்க்கு அவ்வழிபாட்டு முறை ஏற்புடையதாக இல்லை.

## 13. சாதி முறைகளின் தோற்றம்



இந்தியாவின் சாதிக் கட்டமைப்பை ஆய்ந்தறிந்ததால், அது நயன்முறைக்கு மாறுபட்டதாகவும், அறிவுக்குப் புறம்பானதாகவும், இத்துணைக் கண்டத்துக்கு முற்றிலும் கூர் நோக்குடையதாகவும், ஒரு சார் பெண்ணம் கொண்டதாகவும், பிராமணர் அல்லாத இந்தியரின் முன்னேற்றங்களுக்குத் தடையாகவும் உள்ளதென அறியலாம். உலக அரங்கில், இத்தகைய முகமே, இந்தியாவைப் பற்றிக் காட்டப்படுகின்றது. இத்தகையக் கட்டமைப்பு, தொழில்களின் அடிப்படையில் உருவாக்கப் பட்டதாக, மேலைநாட்டவரால் கருதப்படுகின்றது.

தமிழில் அறியப்படும் அகப்பொருள் என்ற காதல் இலக்கணம், தமிழ்ச் சமூகத்தில், நிலவிவந்த பிரிவுகளைப் பற்றி மேலும் பல விளக்கங்களைக் கொண்டுள்ளது. அந்தணர் (முனிவர்,சான்றோர்,அறிஞர்) அரசர் (மன்னர், குறுநில மன்னர்கள்) வணிகர் (உள்ளூர்,கடல் சார்ந்தவர்) வேளாளர் (நில உரிமையாளர்கள், வேளாண்மரபினர்) ஆகியோர்,

முற்றிலும் தங்களுடைய தொழில்களால் அறியப்படுகின்றனர். அனைத்துத் தொழில்களும் நான்கு தலைப்புகளில் அடங்கும். கற்றல், பாதுகாப்பு, வணிகம், வேளாண்மை என்றவாறு, வேளாண்மை யென்பது, அனைத்துத் தொழில்களையும், மாந்த உழைப்பு தொடர்பானவைகளையும இணைக்கும். தனது தொழில் அல்லது பிற வருவாய் தொடர்பாக, தலைவன், தலைவியை சில காலம் பிரிய நேரிடுகிறது.

ஆரியச் சாதிப்பிரிவுகள், தமிழ் முறைகளுக்கு எவ்வாறு மாறுபட்டுள்ளதென்பதை அடியிற்காண்க.

1. தமிழர் முறை, சான்றோர்களுக்கு, முன்னுரிமை அளிக்கும் வகையில் அமைக்கப்பட்டது. அவர்கள், தமிழ் இலக்கியங்களிலும், நாடகங்களிலும், தலைவன், தலைவிகளாகக் கருதப்பட்டவர்கள். ஆரிய முறை, தனித்தனியாக அனைவருக்கும் உரியதாயிற்று.

2. தமிழர் முறை முற்றிலும் இலக்கியக் காரணங்களைக் கொண்டது. ஆரிய முறை பொருளியல் வருவாயை அடிப்படையாகக் கொண்டது.

3. தமிழர்முறை, சமூகக் கட்டமைப்பு செய்யும பணிகளைச் சார்ந்திருந்தது. செய்யும் பணிகள் மாற்றிக் கொள்ளப்பட்டால், அவரது தகுதித் தன்மையும் மாற்றம் பெறும். மாறாக, ஆரிய முறை பிறப்பு, பெற்றோர் ஆகிய, நான்கு சாதி முறையை அடிப்படையாகக் கொண்டது. செய்யும் தொழிலையோ, மாறும் தொழிலையோ அடிப்படையாகக் கொண்டதன்று.

4. ஆரியத்துக்கு முன்பு, தமிழ் நாட்டில், கல்வி பொதுவானதாக இருந்தது. சான்றோர்களும் அறிஞர்களும், முனிவர்களும், இல்லறம் மற்றும் துறவறத்திலிருந்தும், பல்வேறு தொழில் பிரிவுகளிலிருந்தும் அறியப்பட்டவர்கள். பல குடும்பங்கள், மரபு வழியில், கல்விக்கெனத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருந்தனர்.

ஆரிய முறையில், உயர் கல்வியும், கல்வி சார்ந்த பணிகளும் பிராமணர்களுக்கென்றே ஒதுக்கப்பட்டன. பிராமணர்கள், இலவயக் கல்வியைப் பெறவும் தகுதியானவர்கள், அவர்களுக்கு, உணவு, உறைவிடம், மற்ற செலவுகளுக்குண்டான தொகையனைத்தும், அரசாங்கத்தால் இலவயமாக வழங்கப்பட்டன.

5. தமிழரில் முதல் பிரிவு, இரண்டாக அறியப்படும். குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டு, நூல்களைப் பார்த்தவர் அல்லது படித்தவர், பார்ப்பார் எனப்பட்டனர். அந்தணர் என்போர். கற்றறிந்த முனிவர்களாவர். அவர்கள் தவ வாழ்வை மேற்கொண்டவர்கள். அந்தணர் என்பதற்கு, கருணையுள்ளம் கொண்டவர் என்பது பொருள். அய்யர் என்றும் சொல்லப்பட்டனர். மேற்கண்ட பார்ப்பார், அந்தணர், அய்யர் அனைவரும் தமிழரே. தமிழரல்லாத பிறரும் தமிழைக் கற்று, அந்தணர் தகுதியைப் பெற்றவரும் உண்டு. செய்யுள், நாடகங்களையும் படைத்த புலவர்களும் இவர்களில் அடக்கம்.

ஆரிய முறையில், முதல்பிரிவென்பது, பிராமணர்களை மட்டுமே உறுதிப்படுத்துவது.

தமிழ் நாட்டிலிருந்த பிராமணர்கள், பையப் பைய, மேற்கண்ட தகுதிகள் எவையும் இல்லாத போதும், தமிழர்களின் அறியாமையைப் பயன்படுத்தி, தங்களை அந்தணர்களாக அறிவித்துக் கொண்டனர். பிராமணர்களில் அந்தணர்களாகச் சொல்லப்பட்டவர்கள், தாங்கள் தேவர் வழிவந்தவர்கள் என்று உரிமை கொண்டாடினர். (தற்போதும் மறைமுகமாக) தமிழர்களில் அந்தணர்களாகக் கருதப்பட்டவர்கள், அவ்வாறான, தேவர் வழித் தொடர்பை பெற்றவர்களாக ஏற்கப்படவில்லை.

6. தமிழரில் இரண்டாவது பிரிவினர், ஆட்சியாளர்களாகக் கருதப்பட்டனர். மாறாக ஆரிய முறைப்படி போரை விரும்பும், போர்க்குடியினராகக் கருதப்பட்டனர்.

7. தமிழரில் மூன்றாவது பிரிவினர், வணிகம் செய்தவர்கள் வணிகம் அவர்களுடைய கடைமையானது. ஆரிய முறைப்படி, தொழிற்பிரிவினரும் வேளாண் துறையினரும் மூன்றாம் பிரிவில் சேர்க்கப்பட்டனர்.

8. தமிழரில் நான்காம் பிரிவினர், சமூகத்தில் உயர்ந்தவர்களாகவும், பெருமைக்குரியவர்களாகவும் கருதப்பட்டனர். ஆரிய முறைப்படி, அவர்கள் முதல் மூன்று பிரிவினருக்கும கீழான நிலைக்குத் தள்ளப்பட்டனர்.

சாதிக்கட்டமைப்பு, காலப் போக்கில், மேலும் வலுப்பட்டு, ஒரு கட்டத்தில், அனைத்துத் தமிழர்களும், அந்தணர், அரசர், உள்ளிட்டவர்களும், தாழ்மை நிலைக்குத்தள்ளப்பட்டு, உரோம நாட்டு அடிமைகளை விட, கீழ்க்குடிகளாக்கப்பட்டனர்.

சாதிப்பிரிவுகள். மேலும் மேலும் கூர் சீவப்பட்டு, சமூகத்தில் சமய வெறியும், ஒற்றுமையின்மையும் உருவாயின. தமிழர்கள், தங்களுக்குள் பூனைகளைப் போல் சண்டையிட்டுக் கொண்டனர்.

இந்த நான்கு சாதிப்பிரிவுகள் அல்லாமல், பல்வேறு கிளைகளாக அவை பிரிந்தன. சமயம், வட்டாரம், தொழில், நிறம், ஆடைகள், உடுத்தும் முறை, தலைமயிரைக் கட்டுதல், திருமணச் சடங்குகள், வழக்குகள், வழக்காறுகள், உணவு முறைகள், முன்னோர்களின் வாழிடம், என்ற அடிப்படைகளில், தமிழரின் சமூகம், தனித்தனிப் பிரிவகளாகி, காற்றுப்புகாத அறைகளைப்போல, தங்களைத் தனிமைப் படுத்திக் கொண்டதால், எண்ணற்ற சாதிக் கிளைகள்,

தமிழகத்தில் உருவாயின. ஆங்கிலேயர் வருவதற்கு முன்பிருந்த நிலை இதுவே. பின்னர், மேலும் பிரிக்க எண்ணியவர்கள், தமிழ் சாதிகளை நான்கு பிரிவுகளாக்கினர். தொடக் கூடியவர், தொடக் கூடாதவர், நெருங்கி வரத் தகாதவர், பார்க்கக் கூடாதவர் எனப்பிரித்தனர்.

இந்தியாவில் உள்ள அனைத்து சாதிகளும், பொதுவாக, வேற்றுச் சாதியில் திருமணம் செய்து கொள்வதில்லை. ஓரிடத்தில் கூடுவதுமில்லை. (விலக்காக பொது இடங்கள், நிகழ்வுகள்) இந்த நடைமுறை, இந்திய விடுதலைக்குப் பின்னரும் மாறவில்லை.

இந்தியாவில் சாதிக் கட்டமைப்பு எவ்வளவு வலுவாகவும் ஆழமாகவும் உள்ளது என்பதை இங்கு ஒரு விளக்கம் வழியே சொல்ல விரும்புகிறேன். கார்ல் வான் லின்னே (சுவீடன் நாட்டு, நிலத்திணை,விலங்கியல் ஆய்வாளர்) கொடுத்த (Plants) விலங்குகளின் எண்ணிக்கையை விட கூடுதலான நிலத்திணை ஆரணி முதலியார் என்ற தமிழன், பல்வேறு கிளைச் சாதிகளாயினான்.

| | |
|---|---|
| அரசு | : இந்தியா |
| பெருந்தொகுதி | : பழங்குடி |
| வகுப்பு | : தமிழன் (திராவிடன்) |
| மரபு | : தமிழன் |
| குடும்பம் | : சோழியன் |
| பிரிவு | : அகம்படியன் |
| இனம் | : முதலியார் |
| வகை | : ஆரணி |

இவ்வாறு மிகப்பெரிய பெருமைவாய்ந்த தமிழ்ச் சமூகம், பல கிளைத் துண்டுகளாக உடைக்கப்பட்டது.

வட இந்தியாவில் சாதிக்கட்டமைப்பு, சிறிது தளர்வாகவே காணப்பட்டது. அங்கு பிராமணர்களுக்கும், சமற்கிருதத்துக்கும் கடுமையான எதிர்ப்புகள் இல்லை. தெற்கே வர வர, பிராமணர்கள் கடுமையாக எதிர்க்கப்பட்டு, சமற்கிருதம் புறக்கணிக்கப்பட்டதால், சாதிக் கட்டுப்பாடுகள் இறுக்கப்பட்டன. குறிப்பாக, தமிழர்கள் கடுமையான எதிர்ப்புகள் காரணமாக, தமிழ்நாட்டில் சாதிக் கட்டமைப்பை ஆழமாக வலுப்படுத்தி விட்டனர்.

ஆரியர்களின் நெடு நாளைய சாதிக் கட்டுப்பாடு முறைகளை தொடர்ந்து நடைமுறைப்படுத்தி வந்ததால், பெரும்பாலான கடந்த காலத் தலை முறையினர், பின்னுக்குத் தள்ளப்பட்டு, கல்வியறிவும் மறுக்கப்பட்டது.

## 14. சுருக்கமான தமிழன் வரலாறு



கி.மு.50,000 ஆண்டுகளுக்கு முன்பே, குமரிக் கண்டத்தில் தமிழ்மொழி தோன்றி, முழுத்தகுதிபெற்ற மொழியாக வழக்கில் இருந்தது. நான்கு வளர்ச்சி நிலைகளான, ஓரசை மொழி (Monosyllabic), கூட்டமைப்பு மொழி (Compounding), சொல்லுக்குத் திரிபு மொழி (Inflexional) பல சொல்லுருத் திரிபு மொழி (Poly inflexional) என்ற நிலைகளை, நூறாயிரத்துக்கும் குறையாத ஆண்டுகளில் கடந்து வந்துள்ளது.

பழங்காலத் தமிழர்கள், மூவிடத்து நாகரிகத்தைக் கடந்து வந்துள்ளனர். மலை வாழ்நிலை, முல்லை வாழ்நிலை, வேளாண் நில வாழ்நிலை என்ற அளவில், தமிழ் மேலும் மேலும் வளர்ந்து, தூய்மையான மொழி நிலையைப் பெற்றது.

மக்கள் பெருக்கம் மிகுந்தவுடன், மக்கள் சீராக பல்வேறு திசைகளிலும், தொலைவிலுள்ள இடங்களுக்கும் நகர்ந்தனர். தமிழின் வளர்ச்சிநிலை காலத்திலேயே, மக்களின் நகர்வுகள் நிகழ்ந்தன.

குமரிக் கண்டத்திலேயே, முதல் பாண்டிய மன்னன், மதுரையைத் தலைநகராக உருவாக்கிக் கொண்டான். பஃறுளி

ஆற்றங்கரையில் அமைந்திருந்த மதுரை நகரத்தில், முதல் தமிழ்ச் சங்கமும் நிலை பெற்றிருந்தது. குமரிக் கண்டத்தின் தென்கோடியில் பஃறுளியும், மதுரையும் அமைந்திருந்தன. கடல் கோளால், முதலில் தென் பகுதி அழிந்து போன நிலையில், பாண்டியன் தனது தலை நகரை அலைவாய் என்ற கபாடபுரத்துக்கு (சமற்கிருதப் பெயர்) மாற்றிக் கொண்டு, அங்கேயே இரண்டாம் தமிழ்ச் சங்கத்தையும் நிறுவிப் புரந்து வந்தான். அலைவாய், குமரியாறு கடலில் கலக்கும் இடத்தில் அமைந்திருந்தது. அடுத்தடுத்த கடல் கோள்களால், குமரியாறும், தலைநகரமும் அழிந்த நிலையில், தற்காலத்து வையை யாற்றங்கரையில், மதுரை நகரை உருவாக்கித் தலை நகராக்கிக் கொண்டான்.

தமிழ் நாட்டினின்றும் வடக்கே புலம் பெயர்ந்த தமிழர்கள், திரிபுபட்ட தமிழைப்பேசியதால், அவர்கள் திராவிடர்கள் என அழைக்கப்பட்டனர். திராவிடரில் ஒரு பகுதியினர் வடமேற்குப் பகுதிக்குப் புலம் பெயர்ந்து, நார்வே சுவீடன் நாடுகள் வரையிலும் சென்றனர். அவ்வாறு சென்ற திராவிடர்கள், ஆரியர்கள் என அழைக்கப்பட்டனர். அவரகள் நாளடைவில் ஐரோப்பியாவின் கிழக்கு மற்றும் வட கிழக்குப் பகுதிகளிலும் குடியேறினர். மேலும் பாரசீகம் வழியே இந்தியாவுக்கும் வந்து சேர்ந்தவர்களே, வேத ஆரியர்களின் முன்னோர்களாவர்.

வேத ஆரியர்கள், இந்தியாவுக்குள் நுழைந்த போது, அவர்களுக்கென எழுத்து முறையோ, இலக்கியங்களோ எவையும் இருந்ததில்லை. வேதங்கள், வட இந்தியாவில் அப்போது பேசப்பட்டு வந்த வட்டார மொழிகளான பிராகிருதத்தில் தொகுக்கப்பட்டன. பின்னரே அவை சமற்கிருதத்துக்கு மாற்றப்பட்டன.

வேத மொழி, நாளடைவில் மறக்கப்பட்டு, மிகக் குறைவானவர்களே பேசும் நிலை உருவாயிற்று, அம்மொழியை வளர்க்க விரும்பி, தங்களுக்கென இலக்கியங்களைப் படைத்துக்

கொள்ள விரும்பி, தமழர்களுடன் தொடர்பு கொண்டு, தமிழ் எழுத்து முறைகளைப் பின்பற்றி, கிரந்தம் என்ற அரைகுறையான இலக்கிய மொழியையும், எழுத்து முறையையும் உருவாக்கிக் கொண்டனர். வேதமொழியின்றே, பிற்கால சமற்கிருத மொழியை, பிராகிருத மொழியின் துணையோடு, வளர்த்துக் கொண்டனர். அதற்கென, இலக்கண முறைகளையும் வகுத்துக் கொண்டனர். இந்த இலக்கண முறை, தமிழ்மொழியின் இலக்கணவிதிகளைப் பின்பற்றியதாகவே இருந்தது. தமிழினின்றும் சமற்கிருதத்துக்கு பல இலக்கியங்களையும் மொழி மாற்றம் செய்து கொண்டு, அவை தம்மால் படைக்கப்பட்ட மூல இலக்கியங்களே எனவும் உரிமை கோரிக் கொண்டனர்.

வேத ஆரியர்கள், தமிழ் மன்னர்களை அணுகி, தங்களை பூவுலகின் தேவர்கள் (பூசுரர்) என்றும், தங்கள் முன்னோர்களின் மொழி தேவ மொழியென்றும், தங்கள் சமயத்தின் வேறுபாடான சிறப்பு களைக் கூறி, கண்மூடித்தனமாக, தமிழ் மன்னர்களை நம்ப வைத்தனர். இதற்கு, அவர்களுடைய, வெள்ளை நிற உருவமும், உரத்துப் பேசிய மொழியும் துணை நின்றன. இவ்வாறு, தமிழர்களையும், தமிழ் மன்னர்களையும், வஞ்சகமாக ஏமாற்றிய வேத ஆரியர்கள், சமற்கிருதத்தை, பொது மொழியாகவும், கோயில்களில் வழிபாட்டு மொழியாகவும் மாற்றி, அதுவரை, கோயில்களில் நடைமுறையில் இருந்த தமிழ் மொழியை, முற்றுலுமாக அகற்றினர். அந்நிகழ்வே, தமிழின் சீரழிவுக்குத் தொடக்கமாக அமைந்தது. தமிழர்களும், தாங்கள் அவமதிக்கப்பட்டதைப் பின்னர் உணர்ந்தனர்.

# 15. சமற்கிருதத்தின் தன்மை



சமற்கிருதத்துக்குச் சிறப்பளித்து, தமிழை தரம் தாழ்த்தி மறுத்தது, உலக அளவில், மிகப்பெரிய தவறாக முடிந்தது. மேலை நாட்டவர் செய்த இத்தவறுகளை, ஒட்டு மொத்தமாகச் சேர்ந்து எதிர்ப்பதற்கான முயற்சிகளை எடுக்க எவரும் முன்வரவில்லை. சமற்கிருத மொழியாளர்கள், மேலை நாட்டவரைத் தமக்குச் சார்பாகப் பயன்படுத்திக் கொண்டனர். அனைத்து மேலை நாட்டவரும், இப்போதும், சமற்கிருதம், வாழ்ந்து கொண்டிருக்கும் மொழியென்ற மயக்கத்தில் உள்ளனர்.

வேத ஆரியர்கள், தங்கள் மொழி, பேச்சு வழக்கினின்றும் மறைந்து போன நிலையில், தங்களுக்கெனவும், தங்கள் இலக்கியப் படைப்புகளுக்கெனவும், தங்களுக்கென ஒரு மொழி வேண்டும் என்பதை உணர்ந்தனர். அம்மொழியே, கட்டமைப்பில் தங்களை உயர்ந்தவர்களாகக் காட்டும் என்பதையும், தங்களை நிலை நிறுத்திக் கொள்ள உதவும் என்பதையும் உணர்ந்தனர். அக்காலத்தில், வட இந்தியாவில், பைகாசி, சூரசேணி, மாகதி, நடு இந்தியாவில் மராத்தி,

தென்னிந்தியாவில் தமிழ் என்றவாறு, ஐந்து மொழிகளே இந்தியாவில் பேசப்பட்டு வந்தன. பிற்கால வேத ஆரியர்கள், தங்கள் மொழியில் சொற்களின் எண்ணிக்கை குறைவாக உள்ளதை உணர்ந்து, புதிய, அரைகுறையான ஒரு மொழியை உருவாக்கி, அதற்கு சமற்கிருதம் என்று பெயரிட்டனர். சரியாகச் சமைக்கப்பட்டது என்பது இதன் பொருள். பிராகிருதம் முதலில் உருவாக்கப்பட்டது. சமற்கிருதம் வேதமொழியோடு தொடர்புடையதன்று, இணையானதுமன்று, தற்கால ஆங்கிலம், எவ்வாறு ஆங்கிலோ- சாக்சன் என்ற மொழியினின்று மாறுபட்டதோ, அதைப் போன்றோ, சமற்கிருதம் வேத மொழிக்கு மாறுபட்டது. ஆங்கிலம் வாழும் மொழியாக இருக்க, சமற்கிருதம் இலக்கிய மொழியாக மட்டுமே உள்ளது. எனவே, சமற்கிருதத்தை, வேத சமற்கிருதம் என்று கூறுவது கால முரண்பாட்டுக்குரியது.

தற்காலத்தில், சமற்கிருதம் வாழும் மொழியா, செத்த மொழியா என்பது பற்றி கால நேரம் ஆற்றல், பொருள் எனப் பலவும் வீணடிக்கப்படுகின்றன. குறிப்பாக சமற்கிருத மொழியினரே இவ்வாறு ஈடுபடுகின்றனர். அருளாளர் ரிச்சரட் மோரிசு, 1897ஆம் ஆண்டில், சமற்கிருதம் ஒரு செத்த மொழியென்றார். சமற்கிருதம் இறக்கவும் இல்லை வாழவும் இல்லை. பிறந்த ஒன்றே இறக்கும் என்பதால், சமற்கிருதம் பிறக்கவுமில்லை இறக்கவுமில்லை,. இதன் நிலைப்பாடு கூத்தாட்டுப் பொம்மை போலவே உள்ளது.

யாராவது ஒருவர், மற்ற மொழிகளைப் பேசும் ஒருவரைப் போல, சமற்கிருதத்தில் சரளமாகப் பேசினால், அவர் வியந்து பாராட்டப் படுவார். ஆனால், அவ்வாறானவர் எவருமே இலர். சமற்கிருதம் பேச்சு வழக்கில் உள்ள மொழி என்பதற்கானச் சான்றுகள் இல்லை. எசுபெரண்டோ, நோவியல் போன்ற செயற்கை மொழிகளைச் சரளமாகவும், மேடையிலும் பேசுபவர்கள் உள்ளனர். (Esperanto: An artificial language, devised in 1887, as an interntional medium of communication, based on

roots from chief Eropean languages) ஆனால் சமற்கிருத மொழி பேசுவோர் எவருமிலர்.

எ.கா

| | | |
|---|---|---|
| சமற்கிருதம் | பிராகிருதம் | தமிழ் |
| சுக்தி | சிப்பி | சிப்பி, இப்பி |
| காஸ்த | கட்ட | கட்டை (கள் என்ற வேர்) |
| விரித்த | வட்ட | வட்டம் (வள் என்ற வேர்) |

தமிழினின்றும் பிராகிருத்தில் திரிந்தவை, சமற்கிருதத்துடன் வலுக்கட்டாயமாக இணைக்கப்படன.

| | | |
|---|---|---|
| சமற்கிருதம் | பிராகிருதம் | தமிழ் |
| ஆர்ய | அச்ச | அச்சன் |
| தம்ப | கம்ப | கம்பன் |

கம்பன் என்பது, கம்பு என்பதின் பெருமைப் பொருட் சொல்லாகும். (augmentative) குச்சி, சுழி, தண்டு என்றும் அறியப்படும். அச்சன் என்பது, அத்தன், தந்தை என்ற சொல்லின் திரிபாகும்.

# 16. உலக – முதல் இலக்கியச் செம்மொழி



1. குமரிக் கண்டம் (புறச் சான்றுகள்) வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர் எழுதுகிறார்.

1. " சீமைச் சுண்ணாம்பு ஊழியின் இறுதிக் காலத்தில் (146-65 மில்லியன் ஆண்டுகள்), அதாவது குதிரைகள், வெளவால்கள் தோன்றிய காலத்தில் (56-35 மில்லியன் ஆண்டுகள்), கோண்டுவானா என்ற பழைய கண்டம், தகர்ந்து போனது. பெரும்பாலான நிலப்பகுதிகள் கடலில் மூழ்கின அல்லது நிலப்பகுதிகள் நகர்ந்து, ஆசுத்திரேலியா, தென்னிந்தியா, தென்னாப்பிரிக்கா போன்ற நிலப்பகுதிகள், பிரிந்து போயின. இந்தியாவும் ஆப்பிரிக்காவும் ஒடுங்கிய நிலப்பகுதியில் இணைக்கப்பட்டிருந்தன. இக்கொள்கையை வலியுறுத்துவோர், மடகாசுகர், மொரீசியசு, மாலத்தீவுகள், இலக்கத்தீவுகள் போன்றவை ஒரு கோட்டில் இணைந்து, தீவுக் கூட்டங்களாக உள்ளதெனக் கூறுவர். இதைப்போலவே, கிழக்குத் திசையில்,பெருநிலப்பரப்பு பெயர்ந்து, மலைத் தொடராகி, சென்னை மலைத் தொடர் என்று அறியப்படுகிறது. அம்மலைத் தொடர், வங்கக் கடலில் உள்ள, அந்தமான் தீவுகள் வரை

விரிவடைந்து, கடலின் பெரும் பகுதிகளில் பரவியிருந்தது. கோண்டுவானாக் கண்டக் காலத்தில்(சுராசிக் காலம்) கிழக்கே நீண்டிருந்த இந்தியத் தீவக்குறை, சென்னை மலைத் தொடரால் பெயர்க்கப்பட்டு, கடலுள் மூழ்கியது. அக்காலத்திலேயே, கோண்டுவானாவின் மையப்பகுதி, நீரில் மூழ்கியது. கடலில் மூழ்கிப் போன கோண்டுவானாக் கண்டம், நிலநடுக்கோட்டுத்துத் தெற்கே, தென்னிலப் பகுதியாக இருந்தது. இந்தியா, மடகாசுகர் இணைப்பும், ஆப்பிரிக்காவின் கிழக்கு மற்றும் தெற்குப் பகுதிகளின் இணைப்பும், கோண்டுவானா பிளவுபட்ட காலத்தில், பிரிந்து போயின. மடகாசுகர் மலைத்தொடர், கென்யாவரை நீண்டு தங்கநீகா மலைத் தொடரைத் தொட்டு நிற்கின்றது. சிராசிக் காலத்தில், மடகாசுகர், ஆப்பிரிக்காவின்றும பிரிந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது. ஆசுத்திரேலியாவும் இக்கால அளவில் பிரிந்து போனதாகவும் சொல்லப்படுகிறது. நிலக் கூறுகளின் அடிப்படையில், மடகாசுகர், இலங்கை, தென்னிந்தியா ஆகிய மூன்று பகுதிகளும் ஒற்றுமைப்படுகின்றன. இப்பகுதி மலைத் தொடர்களும், பழமை வாய்ந்த பாறைகளால் மேற்கண்ட செய்தியை உறுதி செய்கின்றன. இதன் அடிப்படையில், மேற்கண்ட நிலப் பகுதிகள் அனைத்தும் ஒரே நிலப்பரப்பாக விரிந்து பரந்திருந்ததை உறுதி செய்யத் துணை செய்கின்றன".

2. மிகப் பழங்காலத்தில், தாவரங்களும் விலங்குகளும், இந்தியாவிலும் ஆப்பிரிக்காவிலும் ஒரே வகையாகவே இருந்தன என்று, அவற்றின் ஒற்றுமைக் கூறுகள் அறியப்படுகின்றன. திரு.ஆர்.டி ஓல்டம் என்பார், ஒரு காலத்தில் இந்தியாவையும் ஆப்பிரிக்காவையும், காய்ந்த நிலப்பகுதி இணைந்திருந்தது என்று முடிவு செய்கிறார். நேட்டால், பகுதியில்,காரூ படுகைகளில் கண்டெடுக்கப்பட்ட, புதையுண்ட படிமங்களில், 32 க்கு 25 படிமங்கள், தென்னிந்தியப் படிமங்களோடு ஒற்றுமைப்படுகின்றன. இவை, சுண்ணாம்பு ஊழிக் காலத்தவை என்று சொல்லப்படுகின்றன. (146 மில்) அதே காலத்து மடமாஸ்கர்

பகுதியின் பாறைகள் மற்றும் கற்பதிவுகள், 1899 ஆம் ஆண்டில், திரு.ஆர்.பி நியூட்டன் என்பவரால் கண்டறியப்பட்டன. அவை, தென்னிந்தியாவிலுள்ள அரியலூர் கற்பதிவுகளோடு ஒற்றுமைப்படுகின்றன. இவை, திருச்சிராப்பள்ளி கற்பதிவுகள் என்ற சொல்லப்படுகின்றன. தென்னாப்பிரிக்கக் கற்பதிவுகள், தென்னிந்தியாவின், கடல் உட்புகுந்த காலத்துக் கற்பதிவுகளோடு ஒற்றுமைப் படுகின்றன. இத்தகைய ஒற்றுமைகள், தென்னாப்பிரிக்கா, இந்தியாவிடையே நீண்ட கடற்கரைப்பகுதியிலும், நிலப் பகுதிகளின் இணைப்பும் இவ்விரு நாடுகளுக்கிடையே இருந்ததை உறுதிப் படுத்துகின்றன. கோண்டு வானாவின் முதல், பின் கால அளவுகளில், இவ்விரு நாடுகளிலும் இணைந்திருந்தன என்பதை, சீமைக் சுண்ணாம்புக் கல் காலத்தை மேற்கோளாகக் காட்டி ஆய்வாளர்கள் உறுதி கூறுகின்றனர்.

3. உயிரினங்களின் புலப்பெயர்வும் பரவலும் என்ற தலைப்பில், எக்கல், தொடர்ச்சியான நில மற்றும் நீர்ப்பகுதி மாற்றங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். இந்தியப் பெருங்கடல் இருக்கும் இடத்தில், மிகப் பெரிய நிலப்பகுதி, ஆசியாவின் தெற்குக் கடற்கரைப் பகுதியாகளான, சுந்தாதீவுகள்(சிங்கப்பூர், இந்தோனேசியாவுக்கு இடைப்பட்ட பகுதிகள்) முதல், ஆப்பிரிக்காவின் கிழக்குக் கடற்கரை வரை, பரந்து விரிந்திருந்தது. இப்பெரு நிலப்பரப்பை, கிலேட்டர், இலெமூரியா என்று கூறுகிறார். சிறிய குரக்கினமான இலெமூர் என்ற இனம், அக்காலத்தில் இப்பரந்த நிலப்பரப்பில் வாழ்ந்திருந்ததாகவும், மாந்த இனத்தின் தோற்றமும் அக்காலத்திலேயே நிகழ்வுற்றிருக்க வேண்டும் என்றும் கூறுகிறார். வாலசு,தரும் சான்றுகளின் படி, காலமுறைக் கணக்குபடி, தற்கால மலாய்தீவுகள் இரண்டுபிரிவுகளாக இருந்ததாகவும், மேற்குப் பகுதிகள் இந்திய மலாய்த் தீவுகளுடன், போர்னியா, சாவா, சுமத்திரா இணைந்த மலாக்கா பகுதிகள், இலெமூரியக் கண்டத்துடன் இணைந்திருந்ததாகவும்

தெரிய வருகின்றன. கிழக்குப் பகுதிகள், ஆசுத்திரேலிய மலாய்த் தீவுகளுடன், சிலிபெசு, மோலுக்காசு, நியூ கினியா, சாலமன் தீவுகள் போன்றவை தொடக்கத்தில் ஆசுத்திரேலியாவுடன் இணைந்திருந்தன.

மாந்தனின் மரபு வழியும் பொதுவான புலப் பெயர்ச்சியும் பற்றிய கருதுகோள்

4. பல சூழல்களைக் கருத்தில் கொண்டும், காலக் கணக்குப்படியும், மாந்தனின் தாயகம், ஒரு பெருநிலப் பரப்பென்பதும், அது இந்தியப் பெருங்கடலில் மூழ்கிப் போனதென்பதும், தெற்கு ஆசியாவினின்றும் நீண்டு பரந்து விரிந்திருந்த அந்நிலப்பரப்பு, மடகாசுகர் ஆப்பிரிக்காவின் கிழக்குக் கடற்கரைப் பகுதிகளைத் தொட்டு நின்றது என்பதும், ஆழமான கருதுகோளாக முன் வைக்கப்படுகின்றது. இப்பகுதிகளுக்குள் அடங்கும் நிலப்பகுதிகளின் விலங்குகளும், காய்கறி வகைகளும், புவியியல் தன்மையில், தென்னிந்தியாவுக்குத் தெற்கே ஒரு பெருநிலப்பரப்பு இக்கருத்தைத் தெளிவு படுத்துகின்றன. அதன் அடிப்படையில், குரங்கின் பெயரை யொட்டி, இலெமூரியா என்று அழைக்கப்படுகிறது. இங்கு பழங்காலத்து விலங்குகள், இலெமூர் உள்ளிட்டவை வாழ்ந்திருந்தன. இலெமூரியா, முதல் மாந்தனின் தாயகம் என்பதும், அங்கிருந்தே அவனது வழித் தோன்றல்கள், புவியெங்கும் புலம் பெயர்ந்தனர் என்றும் அறியப்படும்.

5. மாந்த இனம், வட பகுதியையோ, நடுத்தரைக் கடலைச் சார்ந்த நாடுகளையோ, முதன்முதலாகக் கொண்டு, தென்னிந்தியாவுக்குப் புலம் பெயரவில்லை என்பதைப் பல்வேறு ஆய்வுகளால் மெய்ப்பிக்க இயலும். வரலாற்றில் முதல் மாந்த இனம்,உலகின் கிழக்குப் பகுதியிலேயே தோன்றியது.

6. தென்னிந்தியாவைப் பொருத்தவரை, அதன் பழமையான கூறுகள், உண்மைத் தன்மைகள் கொண்டவை. புவியியல் மற்றும் இயற்கையின் வரலாறு உறுதிப்படுத்தும்

உண்மையாதெனில், அறிவு சார்ந்த ஆய்வின் அடிப்படையில், தென்னிந்தியா, ஆசியாவின் ஒரு பகுதியாக இருந்ததில்லை. மிகப் பெரிய தென் கண்டத்தின் ஒரு பகுதியாகவே, பல்வேறு சூழல்களில் தென்னிந்தியா இருந்துள்ளது. சமற்கிருதப் புராண ஆசிரியர்கள், இலங்கையின் புத்த சமயத் துறவிகள், தென்னிந்தியாவின் மேற்குக் கடற்கரையைச் சார்ந்த உள் நாட்டு மரபுகள்,அண்மைக் காலங்களில் தென்னிந்தியாவும் இலங்கையும் பெரும் மாற்றத்துக்குள்ளாயின என்பதை, வேறுபட்ட பல கோணங்களில் முன் வைத்துள்ளனர். ஆங்கிலேய இறையியல் ஆய்வாளர்கள், நோவாவின் வெள்ளக் காலம். கி.மு.2348 என்று குறிப்பிட்டுள்ளனர். இலங்கையின் புத்த சமயக் குறிப்புகள் இறுதியாக, இலங்கை கடலுள் மூழ்கியது. கி.மு.2387 என்று பதிவு செய்துள்ளனர். இவ்விரண்டுகால அளவுகளும், ஒருவருக்கொருவர் அறியாமலேயே, தெரிவித்தவைகளாகும். மாந்த இனத்தின் பரவல் பற்றிய ஆய்வுகளில், தென்னிந்திய மக்கள், வடக்கிலிருந்து அல்லது நடுத்தரைக் கடல் பகுதிகளிலிருந்து வந்து, தென்னிந்தியாவில் குடியேறிவர்கள் என்பதற்கான சான்றுகளோ, இவ்விரு பகுதிகளின் மக்களே, தென்னிந்தியர்களின் முன்னோர்கள் என்று கூறுவதற்கான தடயங்களோ எவையுமில்லை என்பதை உறுதி செய்யலாம்.

7. வெள்ளப் பேரழிவுக்கு முன்னர்,மேற்கு மலைத் தொடர், வடக்கு மலைத் தொடராக, கடலுள் மூழ்கிய குமரிக் கண்டப் பார்வையில் அறியப்பட்டிருந்தது. சத்பத பிராமணம், மனுவின் மரக்கலம் வடக்கு மலைத் தொடரில் தரைதட்டி நின்றது என்றும், மற்றொரு புராணம், திராவிடத் தெய்வம், நீரில் மூழ்கி மலாயா சென்றதாகவும் கூறுகின்றன. மகாபாரதம் உள்ளிட்ட சில புராணங்கள், மனுவுடன் சேர்ந்து ஏழு முனிவர்கள் வெள்ளத் தினின்றும் பிழைத்து, புதிய இடத்தில் குடியேறியதாகக் கூறுகின்றன. இவர்களால் சிலர் திராவிடத் தெய்வத்தின் வழியில் சென்றவர் என அறியப்படுகின்றது. தமிழ் இனத்தவர், எட்டு முனிவர்களுக்குரிய பண்டு என்ற இடத்தில் குடியேறினர். இம்முனிவர்களில், புலத்தியன் என்பவன், தென்கோடியில்,

அகத்தியனின் வழிவந்தவனாகவும், இராவணனின் மரபினனாகவும் சொல்லப் படுகின்றான்.

சத்பத பிராமணத்தில், மனுவின் கதை சொல்லப்பட்ட போது, வடக்கு மலை பற்றிய குறிப்புகள் எவையும் இல்லை. ஆனாலும், புராணக் குறிப்புகளில், வடக்கு மலையை, அதாவது மேற்குத் தொடர்ச்சி மலையைச் சுட்டி, அங்குதான், மலயா என்ற இடத்தில், மரக்கலம் நிலை கொண்டதாகச் சொல்லப்பட்டுள்ளது.

பல்வேறு நாடுகளின் சமய இலக்கியங்கள், நோவா போன்று, வெள்ளத்தினின்றும் காக்கப்பட்டவர்களால் பற்றிக் கூறுகின்றன. நோவாவின் மரக்கலம், அராரத் என்ற இடத்தில் தரையிறங்கியதாகச் சொல்லப்பட்டுள்ளது. போகி என்பவன், சீனத் தொன்மக் கதையிலும், சத்தியவர்த்தன், இந்தியத் தொன்மத்திலும், சி சூக்குசு சால்திய தொன்மத்திலும், தெக்காலியன் கிரேக்கத் தொன்மத்திலும், வெள்ளத்தினின்று தப்பிய நோவா போலச் சொல்லப்பட்டுள்ளனர். அமெரிக்கச் செவ்விந்தியர்கள் கூட, இதே போன்ற வெள்ளக் கதையைக் கொண்டுள்ளனர். அக்கதையில், தனியொருவன் மூலம் மாந்த இனம் புதுப்பிக்கப்பட்டதாகச் சொல்லப்பட்டுள்ளது. மேற்கண்ட தொன்மக் கதைகளில் சொல்லப்பட்டுள்ள, வெள்ளத்தினின்றும் மீண்ட மாந்தர்கள், மாந்த இனத்தின் இரண்டாம் தந்தையாக வந்துள்ளனர்.

# 17. மாந்த இனத்தின் தோற்றம்

(குத்தாயமாக கி.மு.5,00,000 ஆண்டுகள்)



சார்லஸ் டார்வின் கொள்கைப் படி, அனைத்து உயிர்களும் திரிவாக்கத்தின் (Evolution) மூலமாகவே தோன்றின என்றும், தனித்தனியான செயல்கள் மூலம் அன்று என்பதை அறியலாம். அவருடைய திரிவாக்கக் கொள்கையில் முன் வைக்கப்படும் வழக்காடல், அவருடைய பல கூற்றுக்கு பல வகையிலும் வலு சேர்ப்பனவாக இருந்த போதிலும், இறுதியான, உறுதியான முடிவுகளை முன் வைக்காத தோடு, திரிவாக்கக் கொள்கையில் சொல்லப்படும் மறுப்புகளுக்கு விடை கூறவில்லை. அவற்றுள் கவனிக்கத்தக்கவையாகச் சில.

1. அனைத்து உயிரிகளுக்குமான மூல அணு, தன்னிலே எவ்வாறு தோன்றியது என்பதற்கு விளக்கம் இல்லை. இந்த மூல அணு, திரிவாக்கத்தின் மூலம் பிறந்ததன்று, மாறாக கடவுளின் செயலால் தோன்றியது.

2. இயற்கை பற்றிய அறிவுக் கல்வியின் முன் அடைவு பற்றிய செய்திகள், வழக்காடலுக்குள் உட்பட்டவை. அவை, ஏரண முரண் அமைந்தவை (illogic) என்பதோடு, அறிவியல் சாராதவை.

3. குரங்குகளுக்கும் மாந்தனுக்கும் இடையேயுள்ள இடைவெளி, பாலம் கட்ட இயலாத அளவில் உள்ளன.

மாந்தனின் தோற்ற இடம், இதுவரையிலும் எதுவென்று தெளிவுபடுத்தப்படாத நிலையில், டார்வின் கொள்கை, இயற்கையில் உயிரினங்கள், போராடியே தங்கள் வாழ்க்கையை நீட்டித்துக் கொள்கிறன. அப்போராட்டத்தில் வென்றவையே, நிலைத்து நிற்கின்றன என்று கூறினார். அந்த வகையில் குரங்கு, வளைந்த முதுகைக் கொண்ட மாந்தனின் முந்திய நிலையை அடைந்து, பின்னர் நிமிர்ந்த முதுகைக் கொண்ட மாந்தனாக மாறியது என்றார். இயற்கையின் தற்செயலான நிகழ்வுகள், ஓர்உயிரினத்தின், உருவ, பண் பமைப்புகளை மாற்றின. அவை ஒன்றோடொன்று கலந்து புதிய உயிரினமாக உருப்பெற்றன. அந்த வகையில் முதுகு நிமிர்ந்த மாந்தன் உருவானான். 1891க்கும் 1894க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில், டாக்டர் யூசின் துமோ என்ற ஆய்வாளர், சாவாவின் மையப் பகுதியிலுள்ள, எரி மலைக்குக் கிழக்குத்திசையில், சோலோ என்ற ஆற்றங்கரையில், மாந்தனின் மண்டையோட்டையும், இடதுத்தாடை எலும்பையும் கண்டெடுத்தார். அத்துடன் பின் தடை வாய்ப் பல்லையும் கண்டெடுத்தார். இம் மூன்றும், குரக்கின வளைந்த முதுகு மாந்தனுக்கும், நிமிர்ந்த முதுகு மாந்தனுக்கும் இடைப்பட்ட நிலையிலானவனுடையவை என்று கருதினார். மண்டையோட்டை ஆய்வு செய்தவர்களில், அறுவர், அது மாந்தனின் மண்டையோடு தான் என உறுதி செய்தனர். அறுவர், வளர்ச்சியடையாத மாந்தன் என்று கருதினர். எண்மர், இடைப்பட்ட நிலை மாந்தன் என்று முடிவு செய்தனர். முழு மாந்தன் என்பதற்கான தொடர்புகள் விடுபட்டுள்ளன என்றும் கருதினர்.

இதனிடையே, உயிரினங்களின் தோற்றம் என்ற டார்வினின் கொள்கை, தனது வலுவை இழக்கத் தொடங்கியது. எச்.ரெயினிமர், டார்வினின் விளக்கங்களை மறு ஆய்வுகள் செய்து, இறையியல் தன்மை, உடலியல் தன்மை, பழமை

எவையுமே, டார்வினின் இயற்கையின் தேர்வுக் கொள்கையில் இல்லையெனக் கூறினார். மேலும், தொடர் வளர்ச்சியென்பது, டார்வின் கூற்றுப்படி, போட்டியால் உருவாவதில்லை, மாறாக போட்டியிடாமல், ஒத்துழைப்பதால் உருவானது என்றார். தற்சார்பும், தன்னம்பிக்கையும், புதிய இடத்தில் வாழ்வதற்கேற்ற தகுதியும், விட்டுக் கொடுத்துப் போதலும், ஓர் உயிரினம் நிலைத்திருக்க முதன்மையானது என்றும் கூறினார். இதற்குப் புறம்பான வகையில், சமூகக் கட்டமைக்கு மாறாக, தன் விருப்பப் படி வாழ்ந்த தீய உயிரினங்கள் அனைத்தும் அழிந்து போயின. ஒத்துழைத்து வாழும் தன்மையே, வெற்றி பெற்றுள்ளது. எனவே, ஒழுக்கமே, ஓர் உயிர் நிலைக்கு அடிப்படையானது. இக்கருத்தையே அக்காலத்து முனிவர்கள், அன்பும், தன்னலமற்ற, விட்டுக் கொடுக்கும் பண்பும், படைப்பின் உள்ளே மறைந்துள்ளன என்றும், வளர்ச்சிக்கான கட்டமும் அதுவே என்றும் கூறினர்.

டார்வின் கொள்கைகளில் மறுப்புகள் பலவும் உள்ளன. அருளாளர் மெண்டலும் அவரது கருத்துடையோரும், உயிர்கள் தன்னிலே தோன்றி, வெவ்வெறாக வளர்ந்தன என்பதை மறுக்கின்றனர். புவியியலாளர்களின் கருத்துகளுக்குப் புறம்பாக, டார்வின் அவர்களைத் தம்கொள்ளையால் அடிமைப் படுத்த முயல்வதாகக் குற்றம் சாட்டப் படுகின்றது.

வரலாற்றைப் படிக்கும் மாணவனுக்கு, மாந்தவியல் வரலாற்றின் அடிப்படையில், இப்புவியில் மாந்தன் தோன்றிய இடம் எது என்பதில் சிக்கல்கள் உள்ளன. ஒரு புள்ளியை நிலைநிறுத்தி அதற்கு முன்பும் பின்பும் என்றாவது இரண்டையும் இணைத்து சொல்லப்பட வேண்டும். அக்காலத்தில் முதல் மாந்தன், உலகின் எப்பகுதியில் அவன் தோன்றுவதற்கும் வாழ்வதற்கும் ஏற்புடைய, தகுதியான இடமாக எது இருந்தது என்பது ஆராயப்பட வேண்டும். இமயமலைப் பகுதியில் மாந்த இனம் தோன்றியிருக்க இயலாது. ஏனெனில் அது வாழ்வதற்குத் தகுதியற்ற இடமாகும். அதுபோலவே, இமயமலையை ஒட்டிய

காடுகளிலும், தெற்கில் அடர்த்தியான காட்டுப் பகுதியாகிய தண்டகாரண்யமும் வாழத் தகுதியற்றவை. கங்கைச் சமவெளி, தெற்கில் நீண்டு, தற்காலக் குமரி முனைக்கு சில தொலைவிலேயே அமைந்திருந்தது. இப்பகுதியில் எல்லாம். இயற்கையோடும், கொடிய விலங்குகளோடும், உணவின்றியும் மாந்தன் வாழத் தகுதியற்றவைகளாக இருந்தன. அக்காலத்து இந்திய ஆறுகள் அன்றும், வெள்ளப் பெருக்கால் நிறைந்தும் இருந்ததால்,அருகில் இருந்த நிலப்பகுதிகள், சதுப்பு நிலங்களாக இருந்தன. கங்கைச் சமவெளி, நீர் வடிகால் நிலமாக இருந்ததாலும், வேளாண்மைக்கு ஏற்றதாக இருந்ததாலும், கொடிய விலங்குகளின் அச்சுறுத்தல்கள் இன்மையாலும், தங்குவதற்கேற்ற சூழல்கள் இருந்தமையாலும், நீர் கட்டுப்பாடு இன்மையாலும், மாந்தன் வாழ்ந்து, மக்கள் தொகை பெருக ஏற்ற இடமாக அமைந்திருந்தது. முதல் மாந்த இனம் இந்தியப் பெருங்கடலுக்கும் தண்டகாரணியக் காட்டிற்கும் இடைப்பட்ட பகுதியில் தான் வாழ்ந்து வளர்ச்சியடைந்திருக்கலாம்.

எனக் கருத இடம் உண்டு. அங்கிருந்த நிலப்பகுதி, கடல் மட்டத்துக்கு மேல் நிலையிலும், காடுகளுக்குத் தொலைவிலும் இருந்ததால், பலவகையான கொடிய விலங்குகளிடமிருந்து தம்மைக் காத்துக் கொண்டு, குறுங்காடுகளிலும், மரத்தின் உச்சிகளிலும், தம் இருப்பிடங்களை அமைத்துக் கொண்டனர். அக்காலத் தட்ப வெப்பச் சூழ்நிலை, தற்காலத்தில் உள்ளது போன்றே ஏற்புடையதாக இருந்ததால், தன்மயிர், தனக்குப் பாதுகாப்பாக இருந்ததால், ஆடைகள் தேவைப்பட்டிருக்க வில்லை. மண்ணுக்குத் தேவையான நீர், ஆறுகள் அருகிலிருந்ததால் குறைவின்றி கிடைத்து வந்தது. முதல் மாந்த இனம், மரக்கறியுணவையே உண்டிருக்க வேண்டும். அம்மாந்த இனத்தின் மண்டையோடுகளில் உள்ள பற்கள், மரக்கறியுணவை உண்பதற்கான வடிவமைப்பையே கொண்டிருந்தன. விலங்குகளின் கூரிய பற்கள் போன்ற

அமைப்பு காணப்படவில்லை. பழங்களும் விதைகளும் அவர்களுடைய உணவுத் தேவைகளை நிறைவு செய்வதற்கெற்றே வகையில், பெருமளவில் கிடைத்தன. பழங்காலத்து மாந்தனின் எச்சங்களும், கற்பதிவுகளும், இத்தகைய முடிவுகளை எடுக்க உதவுகின்றன.

விவிலியச் செய்தியின்படி, கடவுள், உலகிலுள்ள உயிரினங்கள் அனைத்தையும் தனித்தனியாகவே படைத்தார் என்றும், மனிதனைத் தமது தெய்வச் சாயலில் படைத்தார் என்றும், அவன் செய்த தவறுக்கள் கூட, தன் அறிவைப் பயன்படுத்தியதின் விளைவே என்றும் சொல்லப்பட்டுள்ளது. பல்லாண்டுக்கால பட்டறிவின் பயனான, நாகரிக வளர்ச்சியில், மாந்தன், மதிமாந்தனாக உருவெடுத்தான்.

## 18. பழங்கால மாந்தனின் எச்சங்கள்



டாக்டர் யூசின் துபோ, 1891- 92 ஆண்டுகளில், சவாவில் கண்டெடுத்த மண்டையோடு மற்றும் எறும்புகள், நிமிர்ந்த மாந்தன் வாழ்ந்திருந்த, குமரிக்கண்டத்தின் ஒரு பகுதியாகக் கருதப்படுகின்றது. அதனைத் தொடர்ந்து, அதே வகையான, அதே காலத்துக்குரிய நிமிர்ந்த மாந்தனின் எலும்புகள், தென்னாப்பிரிக்காவிலும் கண்டெடுக்கப்பட்டது. இவ்விரு பகுதிகளிலும், குமரிக் கண்டத்தின் கிழக்கு மற்றும் மேற்குப் பகுதிகளாகும்.

மிகப் பழைய மாந்தனின் எச்சம் சோகன்னசு பர்க்.

" மிகப் பழங்காலத்து மாந்தனின் தாடை எலும்பின் எச்சம், ஒரு குகையில் கண்டெடுக்கப்பட்டது. தோராயமாக, இதுவே, இதுவரை கண்டெடுக்கப்பட்ட மாந்த எச்சங்களில், மிகவும் பழமையானதாகவும், இதுவரை எங்கும் கண்டெடுக்கப்படாததாகவும் உள்ளது" - டாக்டர் டி. இராபின்சன், டிரான்சுவால் அருங்காட்சியகம்.

டாக்டர் இராபின்சனும் மேலும் இரண்டு அறிவியலாளர்களும், அண்மையில், இந்த எச்சங்கள் பற்றி,

ஸ்டெர்க் போண்டைன் என்ற இடத்தில் அறிவித்தனர். குகையுள்ள இவ்விடம், சோகன்னசு பர்க்கிலிருந்து,27 கல் தொலைவில் உள்ளது.

பின் பல்லுடன், முழுவதுமாகக் கிடைக்கப் பெற்ற இத்தாடை எலும்பு, அப்பகுதி இனத்தின் எச்சமாகக் கருதப்படுகின்றது என, அறிவியலார் கூறுவதாக, டாக்டர் இராபின்சன் சொன்னார்.

இரண்டு வகையான அமைப்புகள் உள்ள மாந்தன்.

வாஷிங்டன்.

இங்கிலாந்தின் மாந்தவியல் ஆய்வாளர், டாக்டர் இலீக்கி, 1,750,000ஆண்டுகளுக்கு முன்னர், ஆப்பிரிக்காவில், முற்றிலும் வேறுபாடுள்ள இரு வகையான மாந்தன் அருகருகேயுள்ள இடங்களில் வாழ்ந்திருந்தனர் என்பதைக் கண்டறிந்துள்ளார்.

இந்தக் கண்டுபிடிப்புபற்றிய அறிவிப்பை வெளியிட்ட டாக்டர் இலீக்கி, கென்யாவில், 14 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்திருந்த ஒன்றின் கற்பதிவு எச்சங்கள் கிடைத்துள்ளனவென்றும், அவை மாந்தனுடையதா அல்லது குரக்கினத்துக் குரியதா என்றால், இரண்டும் இல்லையென்றே அவர் அறிவித்தார். நேசுனல் சியோகிராபிக் சொசைட்டிக்கு அவர் அளித்த நேர்காணலில், இப்புதிய கற்பதிவுகள், தாங்கனிகாவில் கிடைத்தன என்றார். அந்நிறுவனத்தார் கூறுகையில், இலீக்கி கண்டறிந்த கற்பதிவுகள், தற்கால மாந்தனின் உருவ அமைப்புடன் நெருங்குவதாகவும், தென்னாப்பிரிக்க மாந்தனை ஒத்திருப்பதாகவும் உள்ளன, என்றனர்.

600,000 ஆண்டுப் பழமையான, மாந்தக் கற்பதிவுகள் ஆப்பிரிக்காவில் கண்டுபிடிப்பு

**லியோ போல்டுவில் (பெல்சியக் காங்கோ)**

உலகின் மாந்தவியல் ஆய்வாளர்களில் ஒருவரான,

டாக்டர் லூயிசு இலீக்கி, அவருடைய மனைவி, தாங்கநிகாவில், 600,000 ஆண்டுப் பழமையான, மாந்தனின் கற்பதிவுகளைப்பற்றி கூறுவதோடு, அவையே, மிகப் பழங்காலத்து மாந்தனின் வடிவம் என்றும் கூறுகிறார்.

வாழ்ந்து கொண்டிருக்கும் உலகின் மிகச் சிறந்த தனித்திறமை பெற்ற ஆய்வாளரான இலீக்கி, கிழக்கு ஆப்பிரிக்க மாந்தவியல் தொடர்பான ஆய்வுகளில் முன்னணியில் இருப்பவர். அவர், தமது பல்லாண்டுக்கால ஆய்வுகளின் அடிப்படையில், உலகின் முதல் மாந்தன் ஆப்பிரிக்காவில் தோன்றியவனே என்ற தம் நம்பிக்கையை, மெய்ப்பித்துள்ளார். தற்போது, கென்யாவின், நைரோபியாவிலுள்ள அருங்காட்கியகத்தில் தலைவராக உள்ள இலீக்கி, பான்-ஆப்பிரிக்கக் காங்கிரசு முற்கால வரலாற்று அமைப்பிடம் கூறியதாவது: "அவரது மனைவி, மாந்தக் கற்பதிவுகள் சிலவற்றை, விலங்குகளின் கற்பதிகளுக்கிடையே, ஓல்டுவல் சியார்க், தாங்கநிகாவில்," சனிக்கிழமை, சூலை 17ஆம் நாளில் கண்டெடுத்தார் என்றார். கரடு முரடான கற்கருவிகளும் கண்டெடுக்கப்பட்டுள்ளனவென்றும், அவை அக்கால மாந்தரின் வாழ்க்கை முறையை விளக்குவதாகவும், மேலும் தெரிவித்தார். அந்த எலும்புகளும் மண்டையோடும்,600,000 ஆண்டுகளுக்கு முற்பட்டவை எனவும் கூறினார்.

பீகிங் மாந்தன், மற்ற மாந்த இனத்தோடு ஒப்பிடுகையில், அங்குக் கிடைத்த கற்பதிவுகளால், பீகிங் மாந்தனின் காலம், 500,000 ஆண்டுகள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. டாக்டர் இலீக்கி, அக்கால மாந்தனின் மூளையோடு, 600 கன சென்டிமீட்டர் என்றும், தற்கால மாந்தனின் அளவு, 1450 கனசென்ற மீட்டர் அல்லது 88.485 கன அங்குலம் என்றும் கூறுகிறார்.

**இலக்கம் ஆண்டுகளுக்கு முற்பட்ட குரங்கின் மண்டையோடு - சோகன்னசு பர்க்.**

குரக்கின மாந்தனின் முழு வளர்ச்சியடைந்த மண்டையோடு, 10 இலக்கம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என,

அம்மண்டையோடு பற்றிய கண்டுபிடிப்பு பற்றி, டாக்டர் இரோமோன்டார்ட், என்ற புகழ்பெற்ற மாந்தவியல் ஆய்வாளர், புதன்கிழமை இரவு, இங்கு தெரிவித்தார். அவரைப் பெருமைப் படுத்த நடத்தப்பட்ட நிகழ்ச்சியொன்றில் அவ்வாறு கூறினார்.

கடந்த 14 ஆண்டுகளாக, மக பனங்கட் என்ற டிரான்வாலின் வட பகுதியில், மாந்தகுரக்கினக் கற்பதிவுகளும் மண்டை யோடுகளும் தோண்டி எடுக்கப்பட்டன. இதுவரை அகழ்வாய்வு செய்து எடுக்கப்பட்டவைகளில், மிகவும் நேர்த்தியாக, சிதைவு படாமல் இருந்தன, என்றார்.

அண்மையில் எடுக்கப்பட்ட மண்டையோடுகள்50,000 டன்கள் அப்புறப்படுத்தப்பட்ட சுண்ணாம்புச் சரங்கப் பாறைகளின் இடிபாடுகளிலிருந்து எடுக்கப்பட்டவை என்றார். அவற்றுள், சில மாக்குரங்களின் (baboon) மண்டையோடுகளும் இருந்தன. இந்த வகைக் குரங்குகள் அனைத்தும், தன்னின ஊனுண்ணிகளாகும் என்று, டார்ட்கூறுகிறார். இந்த மண்டையோடுகளை ஆய்வு செய்ததில், ஒன்றையொன்று அடித்து உண்டதின் எச்சங்களே இவைகள் என்று தெரியவந்துள்ளன.

ஒரு கோடியே 40 இலக்கம் ஆண்டுகளுக்கு முந்திய, பற்களின் கற்பதிவுகள் கண்டெடுக்கப்பட்டன. அவை மாந்தன், அரைமாந்தன், குரங்கு இவற்றில் எவருக்குப் பொருந்தும் எதைத் தெரியவில்லை யென, இலீக்கி, வாசிட்டனில் தெரிவித்தார். 1,75,000 ஆண்டுகளுக்கு முற்பட்ட உயிரியும் கண்டறியப்பட்டது.

## 19. தமிழரின் தோற்றம் படி மலர்ச்சி

*(தோராயமாக, 2,00,000 - 50,000 கி.மு)*



பழங்காலத் தமிழர்களின் முன்னோர்கள், மலைப்பகுதிகளில் அல்லது அப்பகுதிகளைத் தேர்வு செய்து வாழ்ந்திருக்க வேண்டும். அக்காலத்திய அவர்களுடைய விலங்காண்டி வாழ்க்கை, உணவு, உடை, இருப்பிடம் ஆகிய மூன்று தேவைகளைச் சார்ந்திருந்தது. குகைகளில் வாழ்ந்திருந்து, மரங்களில் கனிகளை உண்டு, கொடிகளின் வேர்க்கிழங்குகளைப் பறித்து, பறவைகள் விலங்குகளை வேட்டையாடி, பசுவின் பாலை அருந்தி, இலைகளை உடுத்தி, தோலாடை களை அணிந்து, தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொண்டனர்.

தவசங்களைப் பெருமளவில் பயிர் செய்து வாழ்ந்திருந்தவர்கள் மக்கள் தொகை பெருகவும், மலைவாழ் மக்கள் மலையை விட்டுக் கீழறங்கி, சமவெளிகளிலும் குறுங்காடுகளிலும், ஆறுகளுக்கு அருகில், வாழத் தலைப்பட்டனர். ஆறுகளே அக்காலத்தில் பொக்குவரத்துக்கு ஏற்ற வழிகளாயிருந்தன. ஆறு என்ற தமிழ்ச் சொல்லுக்கு, வழி என்ற பொருளும் உண்டு. சமவெளிகளில், கால் நடைகளை

வளர்த்தும், மழையை எதிர்பார்த்து சிறு தவசங்களைப் பயிரிட்டும் வாழ்ந்து வந்தனர்.

நெல், வாழை போன்ற பயிர்களுக்கு, குறுங்காட்டுச் சமவெளிகள் ஏற்ற நிலங்களான அமைந்திராததாலும், இயற்கையான முழு நேர வேளாண்மைக்கு அவ்விடம் தகுதியற்றிருந்ததாலும், சில முல்லை நில மக்கள், மேலும் கீழிறங்கி, வளமான, வேளாண்மைக்குரிய இடங்களில் குடியமர்ந்து வளமாகவும் செழிப்பாகவும் வாழ்ந்திருந்தனர். காட்டு விலங்குகளின் அச்சுறுத்தல், நாடோடி வாழ்க்கை போன்ற இடர்ப்பாடுகளினின்றும் விடுதலை பெற்று, நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். மருத நிலம், அவர்களுக்குப் பாதுகாப்பாக இருந்தது.

அவ்வேளாண்மைக்குரிய மருத நிலத்தின் தான் நகரங்களும் பெரு நகரங்களும் தோன்றா கலைகள், அறிவியல் போன்றவை வளர்ந்தன. முழுமையான, சரியான நாகரிகம் மலர்ந்தது.

மாந்த நாகரிகம், மூன்று நிலைகளில் அறியப்படும். மலைப்பகுதி நிலை, குறுங்காட்டுப் பகுதி நிலை, வேளாண்மை நிலை, தொழில்கள் வளர்ந்த நிலையில், மீன்பிடிப்போர், நகரங்களை விட்டு, கடற்கரைப் பகுதிகளில் குடியேறினர். மலைப் பகுதிக்கும் குறுங்காட்டு பகுதியில் வாழ்ந்திருந்தோர், தங்கள் வாழ்க்கைத் தேவைகளுக்கேன, வழிப்பறிகளிலும் கொள்ளையிடுதலிலும் ஈடுபட்டனர்.

மேற்கண்ட நிலைகளில், தமிழ்நாட்டின் குடியிருப்புப் பகுதிகள், இயற்கையாகவே ஐந்தாயின. அவை, மலைப்பகுதி, குறுங் காட்டுச் சமவெளிப் பகுதி, வேளாண் நிலப்பகுதி, கடற்கரைப் பகுதி, பாலைப் பகுதியென அறியப்படும். இவை முறையே, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் பெயரிடப்பட்டன. இந்நிலங்களுக்கான செடிகொடிகள் மரங்கள், விலங்குகள் பற்றி, தமிழ் இலக்கண நூலார் வகுத்துள்ளனர்.

குமரிக் கண்டத்தின் நிலவியல் கூறுகள், தற்காலத் தமிழ் நாட்டின் நிலவியல் அமைப்புகள் போலவே அமைந்திருந்தன. மிகப் பெரிய ஆறுகளான பஃறுளியும் குமரியும், மேற்கிலிருந்து கிழக்காகப் பாய்ந்து, தென் எல்லையிலும், வட எல்லையிலும், மூழ்கிப் போன குமரிக் கண்டத்தை வளப்படுத்தியிருந்தன.

தமிழரின் தோற்றப் படிப்பெயர்ச்சி முதன் முதலில் எங்கு அறியப்பட்டிருந்தது?

தமிழர் வாழ்ந்திருந்த ஐந்து நிலப் பகுதிகளும், ஒன்றையொன்று சார்ந்தே அறியப்பட்டிருந்தன. புவிப் பரப்பில், இந்தியாவின் விந்திய மலைக்குத் தெற்கே, அச்சிறு பிரிவு அமைந்திருந்தது. மக்கள் பெருக்கம், உணவுப் பண்டங்களைப் பங்கிட்டுக் கொள்ளுதல், அவற்றை ஒவ்வொரு கால அளவிலும், மக்கள், நிலம் விட்டு நிலம் பெயர்ந்து சென்றபோது எடுத்துச் செல்லுதல், போன்ற நிகழ்வுகளால், பல நிலைகளில், மாந்த நாகரிகம் வளர்ந்தது. வேடர், நாடோடியர்,கால் நடை வளர்த்தோர், மீனவர், வேளாண்மை செய்தோர், கால நிலை வளர்ச்சிக்கும் மாற்றங்களுக்கும் உட்பட்டு, தங்கள் நாகரிகத்தை வளர்த்துக் கொண்டனர். இந்தியாவுக்கு வெளியே, மேற்கண்ட ஐந்து நிலப்பகுதிகளிலும், விரிந்தும், பரவலாகவும் அறியப்பட்டிருந்தன. முல்லை நிலம், ஸ்டெப்பி புல்வெளியென, அல்டாயில் மலையைச் சார்ந்தும், குறிஞ்சி நிலம், பெரும் மலைத்தொடராக, பிரென்ன முதல் இமயம் வரையிலும், அதற்காப் பாலும், இப்புவியின் இடையை வளையம்போல் வளைத்துச் சுற்றியிருந்தன. நெய்தல் நிலம், பாலை நிலம், சகாராவில் தொடங்கி, அரேபியா, பாரசீகம், மங்கோலியா என விரிந்திருந்தது.

மாந்த நாகரிகம், தென்னிந்தியாவினின்றும், மேலே சொல்லப்பட்ட இடங்களுக்குப் பரவியதா அல்லது அவ்விடங்களிலிருந்து தென்னிந்தியாவுக்கு வந்ததா, இக்கேள்விக்கான விடையை தற்போது அளிப்பதில் சிக்கல்

நிலவி வருகின்றது. மாந்த இனத்தின் நாகரிகமும் வளர்ச்சியும் ஒரு குறிப்பிட்ட எல்லைகளுக்குட்பட்ட பகுதிகளில் தான் நிகழ்ந்திருக்குமேயன்றி, மேலே குறிப்பிடப்பட்டுள்ள, பரந்த நிலப் பகுதிகளில் தோன்றியிருக்க வாய்ப்புகள் இல்லை. ஒரு குறுகிய பகுதியினின்றும் மக்கள், வெளியே புலம்பெயர்வதற்கான வாய்ப்புகளே மிகுதியாக அறியப்படும். அதுவே அவர்களுக்கு எளிதாகவும் நிகழும். மாந்த இனத்தின் பண்டைய வரலாறு, இயற்கையின் பட்டறையில், இயல்பாகவே, உருவாயிற்று என்ற அளவில், அதற்கான புவியியல் கூறுகளும் தட்பவெப்ப சூழ்நிலைகளும், தட்சிணபதம் எனப்படும் விந்திய மலைக்குத் தெற்கில் உள்ள பகுதிகளில் தான் இயற்கையாகவும், இயல்பாகவும் அமைந்திருந்தன. யூரேசியா மற்றும் ஆப்பிரிக்கப் பகுதிகளில் அவ்வாறான புவியியல் சூழல்கள் அமைந்திருக்க வில்லை.எனவே, இயற்கையானது, மாந்த இனத் தோற்றத்தையும், அதன் வளர்ச்சியையும், நாகரிகத்தையும், முன்னெடுத்து வளர்த்தது இந்தியாவின் தென்பகுதியில் தான் என்பதும், நாகரிகத்தின் ஒவ்வொரு படி நிலையும் முன்னேற்றம் கண்டது, தென்னிந்தியாவில் தான் என்பதால், இதனை, மாந்தவியல் தோற்றத்தின் அருங்காட்சியகம் என்றும் கூறலாம்.

தமிழன் என்ற திராவிட மாந்தன், ஆசுத்ரோ-நீக்ரோ இனத்தோடு, நேரிடையான தொடர்பைக் கொண்டிருப்பதாகவே தெரிகின்றது. தற்காலத்தில், இப்பழங்குடியினம், தக்காணத்திலும், இந்துத்தானத்தின் தென்பகுதியிலும், இலங்கையின் வடகிழக்குப் பகுதியிலும் உள்ளனர். பழங்காலத்தில், இம்மரபினர், இந்துத்தானம் முழுமையிலும், தங்களுக்குரிய குடியிருப்புகளாகக் கொண்டிருந்தனர் என்றும், இங்கிருந்தே மேலும் நகர்ந்து, புலம்பெயர்ந்து சென்றனர் என்பதும் அரியக் கிடக்கின்றது. ஒரு புறத்தில் ஆசுத்திரேலியர், மலாயருடனும் மறுபுறத்தில், மங்கோலியர் நடுத்தரைக்கடல் மக்களுடனும், தென்னிந்திய

மக்கள் தொடர்புடைய இனத்தவராயிருந்தனர் என்பதைக் காணமுடிகிறது. அவர்களின் தோலின் நிறம், மாநிறமாக அல்லது கறுத்தும், சில பழங்குடியினரிடையே மஞ்சள் கலந்த பழுப்பு நிறமாகவும், மறுபக்கத்தில் கறுமை நிறமையாகவும் காணப்படுகின்றது. தலைமயிர், தலையின் அமைப்பு ஆகியவை, நடுத்தரைக் கடல் பகுதி மக்களுக்கு உள்ளதைப் போல், ஏறக்குறைய சுருளாகவும், கோரைத் தன்மையுடனும், ஊத்தி கோமியர் போல், கம்பளினத் தன்மை போல் இல்லாமல் உள்ளது. (Euthycomy and ulotrichi tribes) . தாடி, நடுத்தரைக் கடல்பகுதி மக்கள் போல், நீண்டு வளர்ந்துள்ளது. முட்டை வடிவிலான முகம், மலாய் மக்களையும், பகுதி நடுத்தரைக் கடல் மக்களையும் ஒத்திருக்கிறது. நெற்றி உயர்ந்தும், மூக்கு குறுகியும், உதடுகள் ஓரளவுக்குத் தடித்தும் உள்ளன.

**வேலசு என்பவரின் குறிப்புகள் :**

“நான் (வேலசு), 1881-82, மாரிக்காலத்தில் இலங்கை சென்றிருந்த போது, திராவிடப் பழங்குடியினரான தமிழர்களைச் சந்திக்க நேர்ந்தது. குறிப்பாக, மலைப் பகுதியில் வாழ்ந்திருந்த தோட்டத் தொழிலாளர்களாக அவர்கள் இருந்தனர். அவர்களுடைய கறுமை-பழுப்பு உடலைப் பார்த்து வியப்படைந்தேன். நீக்ரோக்களின் சுருட்டை மயிருடன் மாறுபட்டிருந்தது. திராவிடர்களில் மிகப்பழமையான மரபினர், நீலகிரியில் வாழ்ந்து வருகின்றனர். கறுமையான உடலில், மயிர்கள் எங்கும் காணப்படுகின்றன. அவர்களின் புருவங்கள், செர்மனியின் நியாண்டர் தல் மாந்தனை ஒத்திருக்கின்றன. தோடர்களும், பிற திராவிடர் பழங்குடியினரும், தொடக்க கால மாந்த இனத்தாருடன் ஒற்றுமைப்படுவதால்,இவ்வினம், தொல்குடியைச் சார்ந்ததே என அறியலாம். அவர்களுடைய மொழி, தற்போது இந்திய-செர்மானிய மொழிக்கப்பில் உள்ள தென்றாலும், மிகப் பழமையான அறியப்படாத ஒரு மொழியின் திரிபாகவே அது இருக்கலாம் என்று கருதப்படுகின்றது.”

ஆசுத்திரேலியர், திராவிடர், நூபியர், நடுத்தரைக் கடல் மக்கள் ஆகிய நான்கு இனங்களும், மேலும் ஆய்வுக் குட்படுத்தப்பட வேண்டும். பல கூறுகளில், இந்நான்கு இனத்தவரும் நெருங்கிய தொடர்புடையவர்களாக உள்ளனர். அவற்றில் சிறப்பாகச் சொல்லப்படவுள்ளது. அவர்களுடைய தாடியின் அமைப்பு, ஏறக்குறைய கோரை மயிராகவும், குறைந்த அளவில் சுருளையும் கொண்டுள்ளன. தென் ஆசியப் பகுதிகளைச் சார்ந்த இனம், இரண்டு கிளைகளாகப் பிரிந்து, தென் கிழக்கில் ஒன்றும் வடமேற்கில் மற்றொன்றும் சென்றன. ஆசுத்திரேலியரும் திராவிடரும் முதற்கிளையாகவும், நூபியரும் நடுத்தரைக் கடல் மக்களும் மற்ற கிளையாகவும் உள்ளனர்.

எக்கல் என்பாரின் கருத்துப்படி, 12 இனங்களில், மூன்று இனங்கள், 1. திராவிடர்கள் (தென்னிந்தியர்கள்,சிங்களவர்), 2. நூபியர் (ஆப்பிரிக்கர்) 3. நடுத்தரைக் கடல் பகுதி மக்கள் (நாகாசியர்- பாஸ்க், செமிட்டிக், இந்திய-செர்மானியர்), பல கூறுகளில் தொடர்புடையவர்களாகின்றனர். மற்ற இனங்களைப் போல் அல்லாமல், இம்மூன்று இனங்களும், நீண்ட நெடிய தாடி அமைப்பைக் கொண்டுள்ளனர்.தற்போது திராவிடர்கள், தென்னிந்தியாவிலும், இலங்கையின் வடகிழக்குப் பகுதிகளில் மட்டுமே அறியப்படுகின்றனர். பழங்காலத்தில், திராவிடர் இனம், இந்தியாவெங்கும் பரவி வாழ்ந்திருந்தது, இந்தியாவினின்றும் பல இடங்களுக்குப் புலம் பெயர்ந்தும் சென்றது.

## 20. தமிழ் மொழியின் தொடக்கம்

(தோராயமாக,200,000-100,000 கி.மு)



தமிழ்மொழி, தொன்மையானது மட்டுமின்றி, உலகின் முதன்மையான செம்மொழியாகவும் உள்ளது. தமிழ் மொழியின் தொடக்கம், இயற்கையில், இயல்பாகத் தோன்றி, படிப்படியாக வளர்ந்து, கீழ்க்கண்ட ஆறு ஒலிகளை, தன்னகத்தே கொண்டுள்ளது.

*1.* உள்ளக்கிளர் வொலிகள் ; (Emotional sounds)

எ.கா: ஆ - ஊ முதலியன, வலியை உணர்த்துவன.

ஓ - அய் முதலியன, மகிழ்வை உணர்த்துவன

அய், ஆ,ஓ முதலியன, வியப்பை உணர்த்துவன

ஏ, ஆ - முதலியன, கடந்தகால மடைமை இரங்கலை உணர்த்துவன.

ஆ என்ற ஒலி இருமுறை ஒலிக்கப்படும் போது, ஆகா என்று புகழ்தலையும், ஆவா என்பது இரங்கலையும், ஓ, ஓகோ என்ற போது, தெருட்சியையும் வெளிப்படுத்துவன.

2. விளிக்கும் ஒலிகள் :(Vocative sounds) ஏ, ஓ, ஆ முதலியன ஏய், ஓய்,வே போன்றவை, கொச்சை ஒலிகள்

3. 1. பின்பற்றும் ஒலிகள்: (Imitative sounds)

பின்பற்றும் ஒலிகள் மூன்று வகைப்படும். அவை,1. பறவைகள், விலங்குகளின் ஒலிகளைப் பின்பற்றல், 2. உயிரற்றவை எழுப்பும் ஒலிகளைப் பின்பற்றல், 3. மாந்தவினம் எழுப்பும் ஒலிகளைப் பின்பற்றல்

கூவுதல் : கூ, கூவு, கூவுமாறு ஒலித்தல்,

கர் : கரைதல்

இம்- இமிர், இமிர் : வண்டுகளைப் போல் முரல் ஒலித்தல்.

உர் - உரறு : உறுமு, அரிமாவைப்போல,

உர் - உறுமு : காட்டு விலங்குகளைப் போல், முறுமுறுத்தல்.

சீட்டு - சீறு : சினம் கொண்ட பாம்பின் காற்றொலி

இசு - இசை : ஒலிப்படுத்து.

கனை : கனைத்தல்.

பிளிறு : யானையின் நீட்டொலி.

விலங்குகள், பறவைகள்:

கூ - குயில், இந்தியக்குயில்.

காகா (மறுஒலிப்பு) காக்கா, காக்கை, காகம்- காக்கை.

நிமிர் - நிமிறு (ஒலியிடப் பெயரால்), வண்டு.

கிச்சு( கீச் கீச்) - கிச்சான் : சிட்டுக்குருவி

மா - மாடு, எருது அல்லது ஆ

காள் - கழுதை

குர் - குரங்கு

கீர் - கீரி , கீரிப்பிள்ளை.

2. உயிரற்றவைகளின் ஒலிகள்:

தொண் - தொண்டகம், குறிஞ்சிப் பறை

உறும் - உறுமி : மயிலைப் போல் ஒலி தரும் பாறை

டம்டம் (டாம்டாம்) பீப்பீ (குழல்) - குழந்தைகளின் விருப்ப ஒலிகள்.

3. மாந்தவினத்தின் ஒலிகள்:

சி-சி, சிரி - சிரித்தல் (சிசி, மறுஒலிப்பு)

கெக்ககெக்க - கெக்கலி , உரக்கச் சிரித்தல்.

தூ - துப்பு, உமிழ்தல்

காறு - காறி உமிழ்தல்

ஓ - ஓக்காளி, வாந்தியெடுத்தல்.

விக்கு - விக்கல் எடுத்தல்.

தூம்மு - தும்மு- தும்முதல்.

குறட்டு - குறட்டை, தூக்கத்தில் எழுப்பப்படும் ஒலி.

உயிர் மெய்களான ழகரமும் றகரமும், முறையே லகர, ரகர உயிர் மெய்களின் விரிவாகும்.

பழங்காலம் தொட்டே, தோற்றச் சொற்களில் அவை பயன்படுத்தப்பட்டன.

4. அடையாள ஒலிகள் (Symbolic sounds)

ம், உம், சொல்லப்படுவதை ஏற்கும் ஒலி.

சீ,சே, சை,பூ ஏற்க இயலாத ஒலிகள்.

பெ பெ ( மறு ஒலிப்பு), கோழி முதலிய வீட்டுப் பறவைகளை அழைக்கும் ஒலிகள்.

ஊது, வாயால் காற்றை வெளிப்படுத்துதல், நெருப்பை ஊதுதல்.

ஙா என ஒலிக்க, வாயை முழுவதும் திறத்தல், இலி என்னல், பற்களைக் காட்டுதல்

வாய் ஒலிகளைப் பெருக்கும் செயல்கள் மூலம் பெறும் ஒலிகள்.

கவ்வு என்ற சொல் இரண்டு வகைகளைத் தோற்றுவிக்கின்றன.

கவ்வு : பிடித்துக் கொள்ளுதல் , முதலானது.

கவ்வு : கவட்டுதல், இரண்டாவது.

5. கவ்வு - கவளம், வாய் நிறையும் அளவிலான உணவு.

அரிசிச் சோறு, ஒருமுறை வாயில் வைக்கப்படுவது.

கவ்வு - வவ்வு, கையால் பற்றுதல், வலிந்து பற்றுதல்
வவ்வு - அவ்வு, மனத்தால் பற்றுதல், விரும்புதல், முறை தவறியும் பற்றுதல்.
அவ்வு - அவா, விருப்பம், அவவு, விரும்பு, அவாவு, விரும்பு. ஆவு, ஆவல், பெரும் விருப்பம்.
கவ்வு - கவர், விரும்பு, வலிந்து எடு.
கவர் - கவரு, ஒருவனுடையதை வலிந்து பற்றுதல்.
கவ்வு - கவுள், கன்னங்கள், யானையின் தாடை
காவ்வு - கவவு , தழுவு
கவ்வு - காவல் , கவனி
கவலை , பிளவு, குறுக்குச் சாலை, கவனம், மிகு விருப்பம்.
கவர் , கிளையின் கவை, தொடைகள் விரிப்பு
கவட்டை, ஒரு தண்டின் இரு கிளைகள், சுண்டுவில் (catapult)
கவடி, சோழி, தாவும் தவளை.
கவண், சுற்றும் வில் (sling)
கவண், வில், கால் நடைகளுக்கான தீவனம் வைக்குமிடம்.
கவணம், காயத்தின் மேல் போடப்பட்டுள்ள கட்டு.
கவண்டு, சுண்டு வில்.
கவண்டி , மேலதே
கவண்டை, மேலதே
கவான் , தொடைச் சந்து.
கவை, தண்டின் இரு கிளை, கவட்டை
கப்பு, கிளையின் பிரிவுகள்
கப்பு- கப்பல், பல பாய் மரங்கள் உள்ள மரக்கலம்.
கவள் - கவளி, வெற்றிலைக் கட்டு, நூல்கள் வைக்குமிடம்.

6. சுட்டிக் காட்டும் ஒலிகள் (Deictic sounds)

சுட்டொலிகள் மூன்றாகும். அவை , ஆ-ஈ-ஊ எனப்படும். இம்மூன்றும் முதனிலை உயிரெழுத்துகளாகும்.
சேய்மை விளி: ஆ.அ
அண்மை விளி : ஈ.இ

முன்மை விளி : ஊ, உ

ஆ என்ற எழுத்தை ஒலிக்கும் போது, வாய் அகன்று கொள்கிறது. சேய்மை இடத்துக்கு எதிர்த்திசையிடத்துக்கு எழுப்பப்படும் ஒலி.

ஈ என்ற எழுத்தை ஒலிக்கும் போது, உதடுகள் பின் பக்கமாக இழுக்கப்படுகின்றன. அண்மைப் பொருளை விளக்கப் பயன்படும்.

உ என்ற ஒலி, உதடுகளைக் குவிக்கும் போது எழும். தமக்கு முன் அல்லது எதிரில் உள்ள பொருளை விளிக்கும் ஒலி.

இவ்வாறாக, இம்மூன்று ஒலிகளும், தமிழின் தோற்றக் காலத்திலிருந்தே இன்று வரையில் மாற்றமில்லாமல் ஒலிக்கப்பட்டு வருகின்றன. இதற்கு மாறாக, மேற்கு ஆரியம் மற்றும் வேத ஆரிய மொழிகளில் காணப்படும் திரிபுகள், கடன் பெற்றவைகளாகவும், உறுதித் தன்மையற்றவைகளாகவும், குறிப்பிடத்தக்கனவாக இல்லாமலும் உள்ளன.

தமிழிலுள்ள உயிரின் நெடில்கள், நீண்ட, நெடுங்காலத் தோற்ற முடையவை. பின் குறில்கள், மொழியின் வளர்ச்சிக் காலத்தில் தோன்றின.

தொல்காப்பியம் என்ற தொன்மையான இலக்கண நூல் கூறுகிறது.

" நெட்டெழுத்தே ழே ஓரெழுத் தொரு மொழி "
ஏழு நெட்டெழுத்து உயிர்களே, ஓரசையுள்ளவை
" குற்றெழுத் தைந்தினும் மொழி நிறை பிலவே "
ஐந்து குறிலெழுத்து உயிர்களும் சரியான சொற்களாக அமையா.

மேலே சொல்லப்பட்ட மூன்று உயிரெழுத்துக்களும், விளி நிலையில் நீண்டும், மிகப் பழமையான பயன்பாட்டுச் சொற்களாகவும் உள்ளன.

## 21.தமிழின் வளர்ச்சியும் – விரிவாக்கமும்

*(தோராயமாக, 100,000 - 50,000 கி.மு)*



கூட்டு, ஒப்பீடு, காரணத் கொள்கை, தொடர்ச்சி ஆகியவற்றின் அடிப்படைகளில், எண்ணங்களே எண்ணங்களைப் பிறப்பிக்கின்றன. இத்துறையில், சிலர் குறைந்த தகுதியையும், மேலும் சிலர் விரிவடைந்த, பெருக்க, வளமுள்ள தகுதிகயையும் பெற்றுள்ளனர். மாந்தனால் அறியப்பட்டவைகள் அனைத்திலும் ஊ என்ற ஒலியே மிகவும் பெருக்கமும் வளமும் உள்ள ஒலியாகும். தமிழ் மற்றும் திராவிட மொழிகளில், 75 விழுக்காட்டுச் சொற்கள், ஊகாரச் சுட்டுகளாக உள்ளன. மற்ற மொழிகளில் குறைந்த அளவில் உள்ளன.

குமரிக் கண்டத்துத் தமிழர்கள், தன்னிகரற்ற அறிவாற்றலைக் கொண்டிருந்தனர். என்பது உண்மையே. இயற்கை மற்றும் செயற்கையின் நகர்வுகளையும், உயிருள்ள மற்றும் உயிரற்றவைகளையும் உன்னிப்பார்த்து, படிப்படியாக, பொருண்மைச் சுழற்சியைக் கண்டறிந்தார்கள்.

பொருண்மை வளையம் அல்லது சுழற்சிக்குரிய எண்ணங்கள்:

1. முன்மை, 2. மூலத் தோற்றம், 3. முன் நகர்வு 4. நெருக்கம் 5. சந்திப்பு 6. இணைப்பு 7. வளைதல் 8. உட்புகுதல் 9. கலத்தல் 10. மீண்டும் தோன்றல். தாயின் கருவினின்று குழந்தை அல்லது விலங்கின் சேய் பிறந்து முன்னிலை பெறுகிறது. முன்னிலையென்பது, முதலில் அல்லது முன் வரிசையில் நிற்பது எனப் பொருள் கொள்ளப்படும். ஒரு மாந்தன் குடியிருப்பை விட்டு வெளியே வரும்போது, அவனுடைய தோற்றம், அவ்வழியில் நிலை பெறுகிறது. அதாவது, முன்னிலையில் வருவது.

அனைத்துப் படைப்புகளும் தங்கள் இருப்பிடத்தை விட்டு, வெளியே வருகின்றன. உணவு தேடல், சமூகக் காரணங்கள், பிற என்றவாறு, உடல் இயக்கங்கள், முன்னேறிச் செல்ல விழைகின்றன.

இயக்கமானது நிகழும் போது, அது குறிப்பிட்ட இலக்கு அல்லது இடத்தைநோக்கி நெருங்குகிறது. இவ்வாறு இரண்டு பொருட்கள் அல்லது எவையோ இரண்டு, தன்மரபைச் சார்ந்தவை ஒன்றையொன்று நெருங்குகின்றன. அப்போது சந்திப்பு நிகழ்கின்றது.

அவையிரண்டும் அருகில் நெருங்கி ஒன்றையொன்று தொடும்போது, கலப்பு நிகழ்கின்றது. கலத்தலில் தடை ஏற்படின், நெருங்கிய ஒன்று தன் வழியே திரும்புகிறது அல்லது வளைகிறது. தெருவில் நடக்கும் பார்வையற்றவன், கிணறு அல்லது குன்றைச் சந்தித்த பயணி, கல்லைக் கண்டு நடப்பவன், பெருங்கல்லை எதிர்கொள்ளும் நத்தை, அவைபோலப் பலவும், தன்வழியில் திரும்புகின்றன.

எதிர் கொள்ளும் தடையின் ஊடே, வழி ஏதாவது தென் படின், ஓட்டை, சந்து, போன்றவற்றின் ஊடே, நுழைவது நிகழ்கின்றது.

சுரங்கப் பாதை வழியே மலையைக் கடப்பது, புழு அழுகிய மரக்கட்டையின் வழியே நுழைவது, பூச்சிகள் நூலைத்

துளைப்பது, வண்டுகள் சாணத்தினுள்ளே நுழைந்து செல்வது, ஒருவனின் மார்பில் வாள் பாய்வது, மரத்தூண்டில் துரப்பணம் நுழைவது என்றவாறு உட்புகுதல் நிகழும்.

உட்புகுதல் நிறைவானவுடன், புகுந்த ஒன்று மீண்டும் தோன்றும். இவ்வாறு ஏற்கனவே முதலில் சொல்லப்பட்ட சுழற்சி மீண்டும் நிகழ்வுறும். பொருளின் விரிவும், திறந்த வெளியில் நுழைவதை உட்புகுதல் என்றே கருதப்பட வேண்டும்.

**எண்ணங்கள் கிளைகளாதல்**

எண்ணங்களின் கிளைகள், அக்கிளைகளின் கிளைகள், பலவாறாக, பன்முகத் தன்மை கொண்டவைகளாக, பலமுறை தொடர்ந்து நீண்டு நிகழும். மேலே சொல்லப்பட்ட, ஒன்பது வகையான எண்ணங்களும், பொருண்மை வளையங்களாகி, திரும்பத்திரும்ப தோன்றி, எண்ணங்களை, இவ்வழியில், வரவேற்கும். எடுத்துக்காட்டாக, விலகுதல் அடியிற்கண்ட நீண்ட வரிசையைத் திறக்கும்.

சாய்தல், சரிதல், விலகுதல், ஒருக்கணித்தல், கீழ் நோக்கிச் சரிதல், பிரிதல் முதலியன.

வளைதல், தாவுதல், சுருளல், முதலியன.

வில்வளைவு, வளைதல், குவிவு, கொக்கி வளைவு முதலியன.

திரும்பல், மடித்தல், இரட்டித்தல் முதலியன.

வளைதல், கோணாலதல், கொக்கி போல்வளைதல் முதலியன.

வட்டம், நீள் சதுரம், முட்டை வடிவம் முதலியன.

அலையலைவு, அலைவரி, சறுக்கியம் முதலியன.

வளையம், வளையல், பூண், சுற்று, உக்கரம், சுழற்சி முதலியன.

சுற்றுப்புறம், சுற்றிவருதல் முதலியன.

சுற்றி வளைத்தல், சுழன்று செல்லல் முதலியன.

சுருளுதல்

மூடுதல், உருளுதல் முதலியன

உருளைத்தன்மை.

உருண்டைத் தன்மை, முட்டை வடிவத் தன்மை

சுழலல், சுழலும் தன்மை.

வினைச் சொல் விளக்கங்கள் :

1. முன்மை : உதோ -வியப்பிடைச் சொல், லோ - முன்னால்

உதோளி - வினையடை, என் முன்னுள்ள இடத்தில்.

ஊங்கு - வினையடை, என் முன்னால்.

உண்ட - பெயரடை, யார் அல்லது எது என் முன்னால் உள்ளவர் - உள்ளது.

உவன் - பெயர்ச்சொல், என் முன்னால் இருப்பவன்.

உவல் - உவர் - உடு - உவை.

2. தோற்றம் :

உல்லரி - பெயர், வேட்டம் , அரும்பு

உலவை - பெயர், பச்சை இலைகளை மேலாகக் கொண்ட குச்சி.

1. உரு - வினை, நொய் முளை, மேற் சுடுகை.
2. உரு - நிலைத்தல், தோன்றி நிலைத்தல்
3. உரு - வடிவம் பெறுதல்
4. உரு - சுருண்டு நீளுதல்

உரு - தோற்றத்திலிருந்து, வடிவம், ஒரு பொருள், பொருண்மை முதலியன. (பெயர்)

உரு - உருபு, வடிவம் ( பெயர்)

உருவு - உருவம், வடிவம், உருவமாக காட்சிக்குப் புலனாதல், உடல், தோற்றம், இலை, பொம்மை முதலியன (பெயர்)

உருவு- உருபு ( இலக்கணம்), ஒன்றை உருவாக்குதல் மூலம் ஒன்றினை நீக்குதல்(பெயர்)

உருவம் - ரூப ( சமற்கிருதம்)

**3. முன்னோக்கிய இயக்கம் :**

உள் (ளு) - வினை. ஒருவரின் மனதை முன்னோக்கி உந்துதல். (செயல்படு பொருள் குன்றாவினை)

உள்ளம் - செயலுக்கான ஆக்க உள்ளுணர்வு ( பெயர்)

உந்து - 1. முன்னோக்கி அழுத்து, தோன்றச் செய். (செ.பொ.கு.வினை)

2. முன்னோக்கித் தள்ளு, முன்பின்னாக அசை.

3. அம்பைப் போல் நுண்குறியைத் தாக்குதல்

4. தேரை ஓட்டுதல்

5. போ, உடன் நகர்.

6. அனுப்பு. பிரி.

உந்து - உஞ்சி- உஞ்சல் - ஊஞ்சல் : முன்பின் ஆடும் தொங்கும் பலகை.

உன்னு : முன்தள்ளு, முன்பின்னாக அசை. (செ.பொ.கு.வினை)

உகை : நட, விலங்கைப் போல நட, ஊர்தி போன்று செல், படகைப் போல் நகரு ( செ.பொ.கு.வினை) குதிரையைப் போல் ஓடு, ஓட்டு, அம்பைப் போல் விடுவித்துக் கொள்.

உடை : முன்புறம் உதை ( செ.பொ.கு.வினை)

உய் : இடரிலிருந்து தப்பித்து விலகி ஓடு.( செ.பொ.குன்றா வினை)

ஓட்டு, கொண்டுசெல், ஊர்தியில் எடுத்து செல்.( செ.பொ.கு.வினை)

உய்-உயிர்: வாழ்க்கை, உடலை இயக்கும், உடலில் இயங்கும் நிலைப்பாடு.

உச- உசு: ஒருவன் மேல் அல்லது விலங்கின் மேல், நாயை ஏவும் ஒலி.(வியப்பிடைச்சொல்)

ஊங்கு : ஒருவன் மேல் அழுத்தம் கொடு.( செ.பொ.குன்றா வினை)

ஊக்கு : செயலாற்றத் தூண்டு, ஊக்கம் கொடு.(செ.பொ.கு.வினை)

குமரிக் கண்டம் கடலுள் மூழ்கியதால், அங்கு அறியப்பட்ட, நடை முறையிலிருந்த முதல் இடைச்

சங்கங்களும், அவற்றில் படைக்கப்பட்ட இலக்கியங்களும் அழிந்து போயின. நூற்றுக்கணக்கான, இல்லை ஆயிரக்கணக்கான தமிழ்ச் சொற்களும், மறைந்து போனதால், பல மறைந்த சொற்கள், தற்காலத்தோடு தொடர்பற்றுப் போயின.

4. அண்மை:

உறு, அருகில் வா (செ.பொ. குன்றாவினை)

(உள்) - அள்-அன், நெருங்கு, அருகில் இழு, (செ.பொ.கு.வினை)

அண்-அண்டு, நெருங்கு, அண்டை, அண்மை. (மேலதே)

5. சந்திப்பு:

உறு : சந்தி, திரட்டு, அடர் ( செ.பொ.குன்றாவினை)

உத்தி: விளையாட்டில் அணி பிரித்துக் கொள்ளுதல்

உடன்: அப்பொழுதே, இணைந்தே (வினையடை)

உடங்கு : இணைவது ( மேலதே)

(உள்) - அள். மிகுந்திரு, அடர்ந்திரு, (செ.பொ.குன்றா வினை)

அளி, இணைதல் (மேலதே)

அளை, கலக்கு ( செ.பொ.கு மற்றும் குன்றாவினை)

6. தொடர்பு:

உறு, தொடு ( குன்றிய குன்றா வினைகள்)

ஊறு, தொடுவுணர்ச்சி

உறவு, தொடர்பு, நெருக்கம் (பெயர்)

உன்னு, பேச உதடுகளை இணைத்தல் (குன்றாவினை)

உதை, உதைகால்(பெயர்)

உறிஞ்சு, விலங்குகளைப்போல் உரசு (குன்றாவினை)

உரசு, தேய் அல்லது உரசு(மேலதே)

உராய்,தேய், விலங்குகள் தம் உடலை மரத்தில் தேய்ப்பது (குன்றாவினை)

உரை, பொன்னை உரைத்துத் தேய்த்தல் (குன்றிய வினை)

7. விலகுதல் :

உலவு - உலாவு. வெளியில் செல், ஊரைச் சுற்றி வருதல், வட்டமிடுதல்(குன்றிய வினை)

உலம்வா, சுழலவிடு (மேலதே)

உலகு - உலகம், புவி, வேறு உலகம், சுற்றி வருதலைக் குறிக்கும் (பெயர்)

உருள், சுற்றுதல், (குன்றாவினை)

உழலை, ஆலையில் சுற்றி வரும் தண்டு, நெய், சாறு பிழிதலில் (மேலதே)

உறை- இறை, வளைவு (பெயர்)

இறைஞ்சு, வேண்டு ( குன்றாவினை)

இறா, ஒருவகை நண்டு மீன்(பெயர்)

இறால், தேடை (பெயர்)

இறவு, மலைச்சாரல் (பெயர்)

இறப்பு, இறவாணம் (பெயர்)

8. உட்புகுதல்:

உள்,உள்ளே, உட்பக்கம் (பெயர்)

உளி, கொத்தும் இரும்பு (பெயர்)

உலர், 1. பறவைகள் மூக்கினால் சிறகுகளைப் பிரித்தல்

2. ஈரமான தலைமயிரை கை விரல்களால் கோதிவிடுதல் (குன்றாவினை)

உழு : கலப்பையில் உழுதல் (மேலதே)

உடு, உடுவை, பள்ளம், கோட்டையைச் சுற்றியுள்ள அகழி. (மேலதே)

9. மீண்டும் தோன்றுதல் அல்லது வெளியேற்றம்:

உளு, அழுகிய மரத்தில், புழுக்கள் உருவாக்கும் துளை. (குன்றாவினை)

உருவு, கடந்துசெல், வெளியேறு. (குன்றிய வினை)

ஊ என்ற உயிர்மெய், உல் என்றாகிறது. உல், என்ற முதல்வேர், மேலும் ஆறு இரண்டாம் கிளை வேர்களை உருவாக்குகின்றது.

குல்- சுல்-துல்-நுல், புல், மற்றும் முல். ஒவ்வொரு வேரும், முதல் வேரின் தன்மையை, பண்பைப் பெற்று, பொருண்மை வளையத்தை உருவாக்குகின்றன.

மேலே சொல்லப்பட்ட ஏழு வேர்களும், எவ்வாறு பல சொற்களைத் தமிழில் உருவாக்குகின்றன எவ்வாறு எல்லாவகையான உருமாற்றங்களை, நீண்ட நெடிய தொடர்ச்சியான வரலாற்றில், உட்புகுந்த உருவாக்கியுள்ள என்பதை, இங்கே நான் விளக்கியுள்ளேன்.

**விலகல்:**

உல்

உலா - (பெயர்) வெற்றி பெற்ற மன்னைப் போல், நகரைச் சுற்றி வருதல்,

உலாவு - (குன்றாவினை)

1. சுற்றுதல், ஒரு பொருளைச் சுற்றி வருதல், ஒரு அணிவகை

2. சுற்றிவரல், நகர்தல், மனமகிழ்வுக்காக நடத்தல் அல்லது ஊர்தியில் சுற்றுதல்

உலாவு - உலவு : (குன்றாவினை), வெளியில் சுற்றிவருதல், விரிந்து செல்லுதல்

உலவை(பெயர்): காற்று, சுற்றிச் சுற்றி வீசுவது.

உலாத்து (குன்றாவினை) சுற்றி நடந்து வருதல், நடப்பதற்கு வெளியேறுதல்,

உலாத்துக் கட்டை - (பெயர்): கதவில் உள்ள சுழலச்சு.

உலாஞ்சு (குன்றாவினை)

1. நகர்வு, வேலையைக் கண்காணிக்க சுற்றிவருதல்

2. நங்கூரத்தைப் போன்ற பின் அசைவு.

உலம் (பெயர்) : உருண்டையானது, உருண்டைக் கல்.

உலக்கை (பெயர்) : தவசங்களைக் குத்த மேல்-கீழ் அசைக்கப்படும் தண்டு.

உலங்கு (பெயர்) : உருண்டையான கல்.

உலந்து (பெயர்) : புழு, கூட்டுப்புழு.

உலம்வா (குன்றாவினை): மனக்கலக்கத்தால் ஏற்படும் சுழற்சி.

உலம் வரல் - உலமரல்- அலமரல்(பெயர் வினை): மனச்சுழற்சி, இன்னல்.

உலகு(பெயர்) : புவி, உலகம், மற்ற உலகங்களும், கோளவடிவில் தன்னைத்தானே, சுற்றிக் கொள்ளுதல்.

உலகம் (பெயர்) : உலகு என்ற சொல்லின் பெருமைப் பொருள்

உழல்(பெயர்): சுழல், சுழற்சி

உழலை (பெயர்): நெய், சர்க்கரை ஆலைகளில், சுழலும் தன்மையுள்ள தண்டு கதவு நகர, நடப்பட்ட தண்டு.

உலன்றி (பெயர்) : மாட்டுக் கழுத்திலிருந்து நீண்டிருக்கும தண்டின் திரிநிலை.

உழற்றி (பெயர்) : உருளுதல், திருடுதல், முறுக்குதல்

உலற்று (குன்றாவினை) : வலியை நீக்க, கை கால்களை அசைத்துக் கொள்ளுதல்

1. சுற்றிவரக் காரணி
2. திருக, சுழலச் செய்தல் (குன்றா வினை)

உருள் (குன்றாவினை) : உருளல்

உருளி (பெயர்) : சக்கரம்

உருளை (பெயர்) : உருளை

உருளை - உருதை (பெயர்) : உருளை உருதை - ரோதை (வழக்குச் சொல்)

உருண்டை(பெயர்) : உருண்டை வடிவமானது, பந்து, பந்து வடிவில் உள்ளவை.

உருட்டு(குன்றியவினை) : 1. உருளச் செய்
2. பந்துவடிவமாக்கு
3. அச்சமூட்டு

உலவு - உறவு (குன்றாவினை) : கடலைப்போன்ற தொடர்ந்த இயக்கம்.

உரவு - உராவு (குன்றாவினை) : பரந்து விரிதல்

உல் - அல்-அலை (குன்றாவினை) : அங்குமிங்கும் அசைதல்

அலை (பெயர்) : நீரலை, தொடர்ந்து வரும் அழுத்தம்.

அலகு (பெயர்) : தாடை, கீழ்த்தாடை

அலக்கு (பெயர்) : இலை, பழங்களைப் பறிக்கும் கொக்கியுள்ள கோல்.

அலவன், நண்டு, பிளவுபட்ட கால்கள்.

அல் - ஆல் (குன்றாவினை) : மயிலைப்போல், சுழன்று நடமிடுதல்.

ஆலத்தி (பெயர்) : சிலைமுன்பு சுற்றிக் காட்டப்படும் ஒளி, மாப்பிள்ளை, வாகையருக்கும் உரியது.

ஆலா (பெயர்) : சதுப்புநிலப் பறவை, வானில் நிற்பது போல் வட்டமடிப்பது.

ஆலை (பெயர்) : இயங்கிக் கொண்டிருக்கும், நெய், சர்க்கரைப் பொறி

ஆளட்டி (பெயர்) : மெல்லிசை வகை, மூவெட்டு இராகங்களில், திரும்பத்திரும்ப இசைக்கப்படுவது.

ஆடு (குன்றாவினை) :

1. சுற்று, நடனமாடு, விளையாடு.
2. வேலைசெய், கரும்பை பிழியும் வேலை.
3. மின் விசிறியைப் போல் சுழற்று.

ஆடை (பெயர்) : உடலைச் சுற்றி அணியப்படுவது

உரவு -இறவு (பெயர்): இறால், தேனடை.

இறவுள் (பெயர்) : மலைச் சரிவு.

இறவாணம், இறவாரம், இறப்பு : கூரையின் மேற்பகுதி.

இறா (பெயர்) : கூன் மீன். செம்மீன் (மலை)

இறால் : மேலதே மற்றும் தேனடை

இறாட்டு : மேலதே

இறாட்டை : நூல் சக்கரம்

இறாட்டினம் : மேலதே சுற்றிவரும் மகிழ்வுச் சுழலி

இறாய் (குன்றாவினை) : பெண்ணின் புருவம், வணங்கு

இறைஞ்சு(குன்றாவினை) : வணங்கு, வளை, கீழே தொங்கவிடு குன்றாவினையில், பணிவான இணக்கம், உடலை வளைத்து வணங்குதல்

குல் : குலவு, குலாவு(குன்றாவினை) : வளை , வளைவு,

குலுக்கை : குலுப்பல்,

குலுமை (பெயர்) : தவசக்குடுவை

குலுத்தம் (பெயர்) : கொள், அதன் நெற்று, வளைவான கொக்கிபோன்று இருக்கும்.

குல் - குன்-குனி(குன்றாவினை) :

1. வளைவு, வளைக்கப்பட், வில்லைப் போல,
2. தலையை, உடலை வளைத்து, வணங்குதல்

குனுகு (மேலதே) : வளை, தோளை வளைத்தல்

இன் - கூன் (மேலதே) : 1. வளைவு, வளைத்தல்
2. கூன் முதுகு, வளைந்த முதுகு.

கூனல் (பெயர்) : 1. வளைவு , வளைந்த தன்மை
2. வளைந்த முதுகு
3. சங்கு
4. பிறைநிலா.

கூனி(பெயர்) : சின்னக் கூனி, சிறு இறால்.

குனை (பெயர்) : தோல் பை, மூலைகள் வளைந்துள்ளது.

குல்-குர்-குரம் (பெயர்) : குதிரையின் குளம்பு

குரங்கு(குன்றாவினை) : வளை, வளைவு,வில்

குரவை (பெயர்) : பெண்கள், வட்டமாக நின்று ஆடும், நாட்டுப்புற நடனம்.

குருல்(குன்றாவினை) : சுருள், பெண்ணின் தலைமயிர்

குருகு (பெயர்) : வளைந்த கழுத்தையுடைய நீர்ப்பறவை, கொக்கு, அன்னம்.

குறாள் (குன்றாவினை) : வளை, வளைத்தல், வளைவு
குறண்டு(மேலதே) : 1. வளைக்கப்பட்ட, கோணலாக
2. சுருட்டுதல், ஊர்வன போன்று.
குறடு (பெயர்) : இழுக்கிப்பொறி
குறண்டம் (பெயர்) : நாரை.
குறங்கு : கறைஞ்சு, (குன்றாவினை) : நீர்ச் சுழல் காற்று.
குறு -கிறு-கிறுக்கு (பெயர்) : மனநிலை சரியில்லாதவன், மனநோயாளி.
கிறு கிறு (குன்றாவினை) : மயக்கம், தலைசுற்றல்.
கிறுகிறுப்பு : மேலதே
குளம் (பெயர்) : நெற்றி, பிறை வடிவம் போன்றது.
குளம்பு (பெயர்) : விலங்கின் காலடி
குழியம் (பெயர்) : பந்து, கோளம்.
குளிகை, குடிகை (பெயர்): உருண்டையான மாத்திரை, மருந்து.
குளி (பெயர்) : வளைந்த வாழைப்பழம்.
குளல்(குன்றாவினை) : சுருள், சுருட்டு, பெண்கள் தலைமயிரைச் சுற்றுவது.
குழியம் (பெயர்) : 1. உருட்டுத் தன்மை, கோளத்தன்மை,உருளைத்தன்மை,
2. மூளை, தடித்து வளைந்த கருவி.
குழை (குன்றாவினை) : வளைக்கப்பட்ட, வளையப்பட்ட சுருட்டப்பட்ட.
குள்-குன் -குண்டு (பெயர்): கற்பந்து, உருண்டையான, கல், கூழாங்கல்.
குண்டன் (பெயர்) : வளைக்கப்பட்ட
குண்டி : எருவாய்ப் பகுதி
குண்டை : மேலதே, தடித்த கல்.
குண்டை (பெயர்) : வட்டம், பாழெண், காதணி, வானம்.

குண்டலி (பெயர்) : எருவாய்க்கும் பிறப்புறுப்புக்கும், இடையேயுள்ள புதிர்ப்பகுதி அல்லது மறைவுப்பகுதி.
குணக்கு (பெயர்) : கோணல், நீண்ட வளைவு, குறுகிய வளைவு.
குணகு(குன்றாவினை): வளைதல், கோணலாதல்
குணங்கு(மேலதே) : வளை
குணலை (பெயர்) : நாணத்தால் உடல் வளைதல்.
குணி (பெயர்) : ஊனமுற்ற விலங்கு.
குணுக்கு (குன்றிய வினை): வளை
குணுக்கு (பெயர்) : காது ஓட்டை பெரிதாக தொங்கவிடப்படும் வளையம்.
குட (பெயரடை) : வளைந்த , வளைவு
குடம் (பெயர்) : 1. வட்டமான மட்கலம்
2. பெரிய வெல்லக் கட்டி
3. தூணில் கோளவடிவமான பகுதி
குடம்-குசம்-குயம் (பெயர் : துறடு, வளைந்த கொக்கி.
குடங்கு (குன்றாவினை) : வளை
குடக்கம் (பெயர்) : வளைவு, கோணல்
குடந்தம் (பெயர்) : வழிபாட்டுக்கென உடலை வளைத்து வணங்குதல்.
குடகம்-கடகம்(பெயர்): 1. வளையல்
2. பனை ஓலையில் செய்யப்பட்ட வட்டமான கூடை.
கடகம்-கடாகம் (பெயர்): 1. கோளம், கோளவடிவமான
2. செப்புக் கொதிகலன்
குடா (பெயர்) : வளை, வளைவு, வளைகுடா, குடா
குடி (பெயர்) : கண் இமை.
குடில் (பெயர்) : 1. வளைவு, கோணல்
2. வளைவான வானம்.
3. விண்மம்.

குடிலம் (பெயர்) : 1. வளை, வளைவு, கோணல், மென்வளைவு
2. வான் வளைவு.
3. விண்மம், ஐம்பூதங்களில் ஒன்று.
4. அறியப்படாத மாயை, பின்னர் அறியப்படுவது.
5. புதிரான ஓம் என்ற சொல்.

குடிலை (பெயர்) : 1. பேரண்டம் பற்றிய மாயை.
2. புதிரான ஓம் என்ற சொல்.

குடிகை-கடிகை (பெயர்) : வளையல், நீர்க்கடிகாரம், 24 நிமையம்.

கடிகையாரம்-கடிகாரம்: பொழுது அல்லது நேரம் காட்டி.

குள்-கொள் (பெயர்) : கொள், வளைவான காய்ந்தது.

கொள் - கொண்- கொண்டி- கொம்பு (பெயர்) : வளைந்த கிளை, குச்சி

கொம்பு-கம்பு (பெயர்) : குச்சி, சுழி.

கம்பு - கம்பம் (பெயர்) : உயரமான தூண்

கொள்-கொள்கு - கொட்கு(பெயர்) :
1. சுற்றும் சுழற்சி
2. வட்டப் பாதையில் சுற்றி வருதல்

கொள்-கோள் : சூரியனைச் சுற்றிவரும் வானத்து உறுப்பு.

கொட்கு-கொக்கு (குன்றாவினை) : கழுத்து வளைந்த நீர்ப்பறவை.

கொக்கு-கொக்கி (பெயர்) : வளைவான இரும்பு அல்லது ஊசி.

கோண் - கோடு (குன்றாவினை) : வளை, வளைவு, வளைந்த (பெயரடை)

கொடுவாள் (பெயர்) : வளைந்த கத்தி, வாள்

கொடுங்கோல் (பெயர்): வளைந்த குச்சி, கழி, கொடுங்கோல் அரசு.

கொடுமை (பெயர்) : 1. கோணங்கித்தனம்
2. கொடூரம்,கொடுஞ்செயல்

கொடுகு (குன்றாவினை) : கொடுமைப் படுத்தல்

கொடுக்கு (பெயர்) : நஞ்சுள்ள வற்றின் நச்சுமுனை, தேள் கொடுக்கு

கொடி (பெயர்) : வளையும் தன்மையுள்ள கொடி

கொடிறு (பெயர்) : கன்னம், தாடை, கடைவாய்.

குல் - கொல்-கோல் (பெயர்) : வட்டத்தன்மை, உருண்டைத் தன்மை உருளைத் தன்மை, குச்சி, கழி.

கோலி (பெயர்) : பளிங்கு

கோளம் (பெயர்) : கோளம், கோளவடிவம், பந்து, சுரப்பி

கோளகம் (பெயர்) : மிளகு.

கோளகை (பெயர்) : கோளம், அழகுபடுத்தப்பட்ட கணையாழி, யானைத்தந்தம், பேரண்டம்

கோளா(பெயர்) : நெய்யில் வறுக்கப்பட்ட இரைச்சி, மரக்கறி உணவு.

கோல் - கோள் - கோண்(குன்றாவினை) : வளைக்கப்பட்ட

கோணம் (பெயர்) : வளைவு,மூலை, மூலைக் கோணம், வளைந்த வாள், முனையகர்ச்சிக் கொடுவாள்

கோணம்- காணம் (பெயர்) : குதிரைக் கொள்

எ.கா. நோட்டம் - நாட்டம் (பெயர்) :
தேர்வு, உற்று நோக்கல், பார்வை, கண் கோல், கால் (தூண்), ஒட்டம்-ஆட்டம்.

கோணை (பெயர்) : கோணல், கொடுமை.

கோணையன்(பெயர்): கோணல்காரன், முட்டாள்.

கோடு (பெயர்) : வெள்ளை அல்லது சிவப்பு வகை மலபார் லில்லிப்பூ

கோடகம் - கேடகம் (பெயர்) : வட்டமான கேடயம்
எ.கா. கோடு-நேடு, மோடு - மேடு

கேடகம்- கேடயம் ( பெயர்) : தலைகீழ் ஒளிவட்டச் சட்டம். சிலைகளை எடுத்துச் செல்ல

கேடகம்- கிடுகு (பெயர்) : கேடயம்

கோட்டம் (பெயர்) : வளைவு, கோணல்,வணங்குதல், ஒருசார்பு, பகைமை, பொறாமை, உள்ளடக்கம், வங்கி சிறை, கோயில், தோட்டம், மாவட்டம், மாநிலம் நகரம், பெருநகரம் முதலானவை.

கோட்டி (பெயர்) : பிந்தம், மூளைக் கோளாறு.

கோட்டை (பெயர்) : தவசக் கொள்கலம், நிறையின் அளவு, நெற்கதிர்க்கட்டு, வலுவான அரண்மனை, நிலவைச் சுற்றிய வட்டம், நில அளவு.

சுல் :

சுலவு(குன்றாவினை) : சுற்று, வட்டச் சுருளாக்கு, சுழலவிடு, சுற்றவிடு, உலவவிடு

சுலவு-சுலாவு (குன்றாவினை) : சுற்றவிடு, காற்று

சுல்-சில் (பெயர்) : தட்டையான, வட்டமான ஒன்று, தன் கண்ணாடி ஊர்தியின் சக்கரம்.

சுல் (சுன்) - சுன்னம் (பெயர்) : வட்டக்குறி, பாழ் எண், சுன்ன (பிராகிரும்).

சுன்- (சின்) - சினை : முட்டைகள், கரு, கருவுற்றிருத்தல்.

சுல் - சூல் (பெயர்) : முட்டை, கருத்தரிப்பு, கருவுற்றிருத்தல். கருத்தாங்க விடுத்தல் (குன்றாவினை)

சூலி(பெயர்) : கருவுற்ற பெண்.

சுள்- சுளகு (பெயர்) : தவசங்களைத் தூற்றல்

சுலி (குன்றாவினை) : சினக் குறிப்பை முகத்தில் காட்டுதல், சினம் கொள்ளல் இணக்கமின்மையைக் காட்டுதல், (குன்றாவினை)

சுளுக்கு (மேலதே) : பலாப்பழத்தின் சூழ்

சுளையம் (பெயர்) : பாழ்எண், திருடும் நோக்குடன் ஒரு வீட்டைப்பற்றியவற்றைத் தெரிந்து கொள்ள விரும்புதல்
சுளையம்- சொளையம்.

சோளம் (பெயர்) : புன்செய்த் தவசம்

சுல் -சுண்டு(குன்றாவினை) : முன்விரலால் சுட்டுதல், காட்டுதல் குலுக்குதல், ஒன்றினை இழுத்துவிடுதல்

சுல் - சுட்டி (பெயர்) :
வட்டமான அணி, பெண்கள் அணிவது. குழந்தைகள், இரவலர்கள் நெற்றியில் அணிவது.விலங்குகளின் நெற்றிச் சுழி. உடலில் தோன்றும் வட்டமான வெண்புள்ளிகள்

சுத்திகை, சுட்டிகை (பெயர்) : பெண்கள், நெற்றியில் அணிவது.

சுழல் (குன்றாவினை) : சுழலவிடு, சுற்றவிடு, சுருளவிடு, திருப்பு, வட்டப்பாதையில் சுற்ற விடு, சுற்றித் திரியவிடு, அலையவிடு

சுழலி (பெயர்) : குழந்தைகளின் வலிப்பு நோயை அணுகுதல்

சுழளை (பெயர்) : கலம், கொள்கலம், பித்தலாட்டம், ஏமாற்றுதல்.

சுழற்று(குன்றாவினை) : சுற்றிவிடுதல்

சுழற்றி (பெயர்) : கையால் சக்கரத்தைச் சுற்றுதல், திருப்புள்ளியால் திருப்புதல்

சுழி(குன்றாவினை) : வளைவாக்கு, வளையவிடு (குன்றாவினை) சுருளவிடு,

வளையவிடு (குன்றாவினை) :
1. சுழல், சுழிப்பு, நீர்ச்சுழற்சி
2. வளைவு, வட்டத்தன்மை, வளையம்

3. பாழ் எண்
4. சுருள் மயிர்
5. நல்லூழ் அல்லூழைக் குறிக்கும் உடலில் உள்ள வட்ட மச்சங்கள்

சுழியன் : துடுக்குத் தனமானவன்

சுழியம் : இனிப்பு உருண்டை
சுழியம்-சுசியம்-சூய்யம் (ஸ்லாவ் மொழிச் சொல்)

சூ(குன்றாவினை) : 1. சுற்றிவா, கடந்துசெல், மூடு
2. வட்டமிடு, மிதக்கவிடு, கொட்டவிடு
3. கருது, எண்ணு.
4. சூது செய், சூழ்ச்சி செய்.

சூழ்நிலை (பெயர்) : சுற்றுப்புறத்து நிலை.

சூழல் (பெயர்) : சூழ்நிலை

சூழ்ச்சி (பெயர்) : ஆழ்ந்தாராய்வு, திட்டமிட்ட சூழ்ச்சி, சூழ்ச்சிப் பின்னல்.

சூழ்ச்சியம் (பெயர்) : கூர்மதி, பொறி.

சூது (குன்றாவினை : வளைத்துப்போடு, மூடு, தவசக்குவியல்.

சூதகம் (பெயர்) : வளையல்

சுல்-(சுர்) - சுரி (குன்றாவினை) : வளையவிடு, சுழலவிடு
சுற்றவிடு, மடிப்பமை
சுருளவிடு, வட்டமாக.
நீர்ச்சுழற்சி, வளைவு, வளையம், திருகாணி, காளையின் நெற்றிச் சுழி. (பெயர்)

சுரி முகம்(பெயர்) : வளைவுகள் கொண்ட கூர்முகம் கொண்ட சங்கு, நத்தை

சுரியல் (பெயர்) : வளையல்

சூர்(குன்றாவினை) : சுற்றுதல், சுழறுதல்

சூர்ப்பு (பெயர்) : சுழற்சி (காற்று)

சுருள் (குன்றாவினை) : சுருட்டு, சுருட்டப்பட்டது.

சுருட்டு(குன்றாவினை): சுருள் என்பதின் வினை.
சுருளுதல், உருளுதல் (பெயர்)
சுருட்டு, தொற்று நோய் பரவல்.

சுருளி (பெயர்) : உருட்டு, விரிவடை, காதணி.

சுருளி (பெயர்) : யானைக் கான தாற்றுக் கோல்

சுருணை (பெயர்) : உருட்டப்பட்ட, சுருட்டப்பட்ட ஒன்று.

சுருட்டி (பெயர்) : இசையில் ஒருவகை.

சுருட்டை (பெயர்) : நெளிந்த மயிர், ஒருவகைப்பாம்பு.

சுற்று (குன்றாவினை) : சுழலவிடு, சுற்றவிடு, உருளவிடு,
தலைச்சுற்று (மயக்கம்) சுற்றிவா.
பக்கத்தில் சுற்றிவா, சோர்ந்து சுற்று,
உடலைச் சுற்றி அணி அல்லது கட்டு,
அலைப்படுத்து, பாய்போல் சுருட்டு,
கயிற்றைச் சுருட்டு

சுற்றம் (பெயர்) : அக்கம் பக்கத்தார், உறவினர்.

சூறு (குன்றாவினை) : சுற்றிவளை

சூறை (பெயர்) : சுழல் காற்று, முடிக்கப்பட்ட பெண்ணின் கூந்தல்

சுள்(சல்)-சாளரம் (பெயர்) : அணிக் கோவைப் பலகணி.

சள்-சாளை (பெயர்) : வட்டமான குடிசை.

ஆளய்யம் -சாளையக்கை : ஒரு கையால், கட்டைவிரல் ஆள்காட்டி விரல், நடுவிரல் ஆகியவை நட்டமாக, மற்றவை உள்ளங்கையைத்தொட, மணிக்கட்டை கீழே திருப்புதல்.

சாள்-சாய் (குன்றாவினை) : 1. மடக்கு, கீழ்ப்பக்கமாகத் திருப்பு
2. சாயச் செய், கீழ்ப்பக்கமாகத் தொங்கவிடு

3. சாயச் செய், வானத்து உறுப்பைப் போல
4. கீழ்நோக்கு, கீழே படு.
5. பகுதியாக, மனச் சாய்வு
6. நிழலைப் போல் கிழக்கு நோக்கு.
ஒன்றின் மேல் சாய்ந்திடு, ஒன்றைச் சார்ந்திடு (குன்றாவினை)

சால்-சார் (குன்றாவினை) : மேலதே.

சார்-சாரல் (பெயர்) : 1. மலைச் சரிவு.
2. மலைச் சரிவில் தூறும் மழை.
3. வழிந்தோடும் மழை, நீர் புகுதல்.

சார்- சாறி (பெயர்) : 1. சுற்றியக்கம்
2. சக்கரச் சுழற்சி, குதிரை, தேர்களில் போர் வீரர்கள் மேற்கொள்ளும் பயிற்சி.

சாரி- சாரிகை (பெயர்) : 1. சுற்றியக்கம்.
2. சக்கரச் சுழற்சி, குதிரை, தேர்களில் போர் வீர்கள் மேற்கொள்ளும் பயிற்சி.

சாரி - சாரிகை (பெயர்) : 1. மேலதே, சுழற்காற்று.

சார்- சாறு (குன்றாவினை) : 1. தூணில் சாய்தல், சரிதல், விலகுதல்
2. வழுக்கி விழு.
3. வெளிப்புறமாக வழுக்கி விழு.
4. ஒரு பணியில் தவறுதல்
5. சொரிதல், அறித்தல்

சாலை- சொரிதல், சாலிவா (ஆங்கிலம்) - உமிழ்நீர் சுரத்தல்

சால் - (சாண்) - சாணை (பெயர்) : 1. கருக்கேற்றும் சக்கரம்

(சானைச் சக்கரம்)
2. புளிமூட்டை, வட்ட வடிவிலானது.
3. தவசக் கதிர்களை, வட்டவடிவில் போட்டு வைத்தல், தவசங்களைப் பிரித்தெடுக்க கோள் - கோண், சால் -சாண்.

சான் - சாடு (குன்றாவினை) : 1. சாய்ந்த மரம் போல.
2. இரண்டு பக்க மலைச் சரிவு போல.
3. ஒரு பக்கமாக மோதுதல்
4. ஒரு தலைச் சார்பான நிலை.
5. நிழலைப் போல விழுதல், சாய்தல்
சான்-சாடு , கோண் - கோடு.

சாடு சாட்டம் (பெயர்) : சரிவு.
வாட்ட சாட்டம் அல்லது வாந்தஞ் சாந்தம்.

சாடி (பெயர்) : 1. சாய்வு, சாய்ந்த மனப்பான்மை, சார்புநிலை.
2. மறைமுக அறிவிப்பு, குறிப்பு, கைகை மொழி.
3. வான் உறுப்புகள் போல் மறைதல்
4. வழுக்கிச் செல், விழு. உருண்டு விழு, மேலிருந்து கீழாக.

சரு - சருவு (குன்றாவினை) : சரிவு, பக்கச் சாய்வு. பாறையின் செங்குத்துப் பக்கம்

சருவம் (பெயர்) : அகன்ற வாயினின்றும் சரிந்த நிலையிலான கலம்.

சருவு-சருகு- சருக்கு- சறுக்கு (குன்றாவினை) : வழுக்கி விழு. தத்திவிழு, கருத்தூன்றிய பார்வை சாய், சாய்ந்துவிழு, ஒருபக்கமாகவிழு கவனியாமல் விழு. கடுமையான கருத்து மயக்க நிலை உயரத்திலிருந்து உருண்டுவிழு.

சருக்கு - சருக்கம் (பெயர்) : வட்டம்.

சருக்கம்-சருக்கரம் - சருக்கரை (பெயர்) : வட்டமான பனை வெல்லக்கட்டி வெல்லம்

சருக்கரை - சக்கரை(பெயர்) : தூள் வெல்லம் வட்டு, வட்டக் கட்டி கரும்புச் சாற்றினின்றும் பெறப்படுவது

சருக்கரம் - சக்கரம் (பெயர்) : வட்டம், சக்கரம், வட்டக் கட்டை, வட்ட உருளை, செக்கு முதலியன

சருக்கரம் - சருக்கரம்- சக்கரம் - சக்காரம் (பெயர்): சர்க்கரை.

அக்காரநீர் (பெயர்) : பதனீர் அக்கார அடிசில், பாலில் சமைத்த அரிசிச்சோறு, நெய்யும் சர்க்கரை கலந்தது.

அக்கார அடலை- அக்காரடலை (பெயர்) : சர்க்கரையில் சமைத்த சோறு.

அக்காரை (பெயர்) : இனிப்பு ஆப்பம்.

உக்காரி (பெயர்) : மேலதே

சக்கரம் அல்லது சருக்கு (சக்கு) - செக்கு : நெய்பிழியும் பொறி.

சக்கரம்- சக்கடம் - சக்கடா (பெயர்) : மாட்டுவண்டி.

சக்கடம் - சகடம் (பெயர்): சக்கரம், வண்டி, தேர், நான்காவது விண்மீன்

கூட்டம்.சகடு, தட்டு, கிண்ணம், பெரிய பறை.

சகடை (பெயர்) : வண்டி, பெரிய பறை,

சாண்டை (பெயர்) : பெரிய பறை.

சகடு (பெயர்) : வண்டி, சகடு என்ற நான்காவது விண்மீன் கூட்டம்

சகாடு - சாகாடு (பெயர்) : வண்டி.

சாகாடு - சாடு (பெயர்) : வண்டி.

சகடி (பெயர்) : வண்டி.

சகடிகை (பெயர்) : கை வண்டி, கை - அழுத்தமில்லாத பின்னெட்டு, எ.கா. குடி-குடிகை, கன்னி - கன்னிகை.

சகோடம் (பெயர்) : 16 நரம்புகள் கொண்ட யாழ்.

சகோடம் - சகோரம் (பெயர்) : சக்கரப் பறவை.

சக்கு- சங்கு (பெயர்) : சங்கு, பெரிய ஓட்டைக் கொண்டது.
எ.கா. பக்கு - பங்கு
வளை-புரி:பெரிய முதுகு ஓடு.

சங்கம் (பெயர்) : சங்கு என்பதின் பெருமைப்பொருள்.

துல் : (துல்) தொலு- தொழுப்பு (பெயர்) : உழவுச் சாலை மாற்றுதல்

(துல்) - (துர்) - துரு- துறடு - துறடி (பெயர்) : யானையின் துதிக்கை, காய் கனிகளைப் பறிக்கும் நீண்ட கோல்.

துறடி - தோட்டி : துதிக்கை.

துறு - திறம்பு (குன்றாவினை) : 1. மாற்று, திரும்பு,
2. சுளுக்கு விலக, விலகிச் செல் (குன்றிய வினை).

(துடம்) - தடம் (பெயர்) : வளைவு, திருப்பம்
முடிச்சு, முடி கயிறு
கொக்கி, இணைப்பு

தடம் - தடவை (பெயர்) : நேரம், திருப்பம்

தடம் - தரம் (பெயர்) : நேரம், திருப்பம்

(துர்) - (திர்) - திரி (குன்றாவினை) : 1. சுற்றி வா, நடந்து வா, அங்குமிங்கும் செல், அலை
2. விலகு, திரிபுபடு
3. மாற்று
4. திருப்பு
5. சுழலச்செய், வான உறுப்புகள் போல் சுற்று
குன்றா வினை : 1. முறுக்கு
2. மாற்று, வேறுபடுத்து
3. பெறு
4. சுழி, தலை முதலியன. துணி அல்லது நூலை சுருட்டுதல் அல்லது முறுக்குதல் (பெயர்)

திரிவு (பெயர்) : மாற்றம், சிதைவு

திரிகை (பெயர்) : கைப்பொறி, குயவன் சக்கரம்

திரும் - திரும்பு (குன்றாவினை) : திருப்பு, திரும்பி வா

திருப்பு (குன்றிய வினை) : காரணப் பெயர் - திரும்பு

திருப்பம் (பெயர்) : திருப்பு முனை

திருப்பி (பெயர்) : திருப்பும் கருவி, மேல் கீழாகத் திருப்பப் பயன்படும் கருவி

திருகு (குன்றாவினை) : திருப்பு, திருகு, மாற்று, முருக்கு திருகி (பெயர்), திகிர் - திகிரி (ஒலியிடம் பெயர்தல்)

1. வட்டம், வட்டமாக
2. சக்கரம்
3. குயவன் சக்கரம்
4. வட்டவட்டை என்ற சண்டைக் கருவி
5. அரச முத்திரை

திருக்கு (பெயர்) : 1. முறுக்கு
2. சிறிய திருகாணி
3. மனத் தடுமாற்றம்
4. தீய சிந்தனை

தெரும் (பெயர்) : 1. சுழிப்பு, சுழற்சி, சுற்ற விடுதல்
2. மயக்கம்
3. குழப்பம், சிக்கல், எதிர்ப்பு

தெரும் விரல் - தெரு மரல் (பெயர்) : பார்க்க, தெரும் நூல் :

நுழவு - நழுவு (குன்றா வினை) : நழுவுதல், ஊர்தல், கடமை தவறல்

நுடம் (பெயர்) : முடம், உடல் ஊனம்

நுடங்கு (குன்றாவினை) : 1. வளைத்திடு
2. எளிமைப்படுத்து
3. உலுக்கு, ஆட்டு, நடுங்கு, குலுங்கு
4. பதறு
5. ஆடு

(நூல்) - நெல் - நெளி (குன்றாவினை) :
1. வளை, உள்ளே வளை
2. பலவாறு வளை
3. வளைத்து திருப்பு, முறுக்கு
4. பாம்பைப் போல் ஊர்

நெளியாளன் (பெயர்) : கூன் முதுகுக்காரன்

நெளி - (நெர்) - நெரி (குன்றாவினை) :
வளை, வளைவு, வளைவான

நெரி - நெறி (மேலதே) : நீள் வளைவு, சுருள வளை
நெற்றிமுன் தலை, நுதல்

(நெருள்) நெருடு (குன்றாவினை) : 1. முறுக்கு
2. கதிரைக் கையால் முறுக்கித் திருகுவது.

(புல்) - (புர்) - புரள் (மேலதே) :
1. புரட்டிப் போடு, உருட்டு, மேல்கீழாகப் புரட்டு
2. தலை, காலாக, புரட்டுதல்
காலம் அல்லது பருவ மாற்றம்

புரள் (குன்றிய வினை) - புரட்டு : 1. ஒன்றை மேல் கீழாகத் திருப்புதல்
2. உழுதலின் போது மண்ணை, மேல் கீழாக்குதல்

3. முறைகேடு, புரளி (பெயர்) :
பொய்யுணர்த்தல், பொய்த்தன்மை

புரட்சி (பெயர்) : தலை கீழாக்குதல், மாற்றம் செய்தல் மலர்ச்சியை உருவாக்குதல்

புரட்டி (பெயர்) : வறுத்தலில், உணவுப் பண்டங்களைத் திருப்பிப் போடும் கருவி

புரள் - பிறழ் (குன்றாவினை) : மாற்று, சொன்ன சொல்லை மீறு,

புரண்டை (பெயர்) : நாற்பட்டையான கொடி வகை

புரண்டை : பிரண்டை

புரி (குன்றாவினை) : 1. திருப்பு, 2.சுருட்டு,
3. சுருள வை, 4. சுற்று

புரி (பெயர்) : 1. திருப்பு, வைக்கோலைப் போல
2. சுருள வை, முடியைப் போல
3. நீள் சுருள், திருகு
4. சங்கு
5. நகரம், ஊர் - மதில் சுவருள்ளது

வலம்புரி (பெயர்) : வலப்பக்கம் சுருண்டு வாயுள்ள சங்கு

இடம்புரி (பெயர்) : இடப்பக்கம் சுருண்டது

புரிசை (பெயர்) : கோட்டையமைப்பு, சுற்றிலும் மதிற்சுவர் உள்ள ஊர்

புரி - பரி (குன்றா வினை) : வட்டமான சுற்றுப்புறம்

பரிசு (பெயர்) : தோலால் மூடப்பட்டு, ஆற்றைக் கடக்கும் படகு

பரிசு - பரிசல் : மேலதே

பரிசை (பெயர்) : வட்டமான கேடயம், சிறு கேடயம், பெரிய குடை, வட்ட வழவமான பரிசல்

பரிதி (பெயர்) : 1. வட்டம், சுற்றளவு
2. ஊர்திச் சக்கரம்,
3. எறிவட்டை,
4. சக்கரப் பறவை,
5. சூரியன்,
6. சூரிய, நிலா வட்டம்.

புரு - புருவம் (பெயர்) : கண் புருவம்

புள் - (பள்) - பண்டி (பெயர்) :
சக்கரம், வண்டி,
சாடம், ஊர்தி

பண்டி - பாண்டி : 1. பாண்டி விளையாட்டிற்கான

சிறுவட்டச் சில்லி
வட்டு - வட்டை,
2. பாண்டி விளையாட்டு,
3. எருது, மாட்டு வண்டி
எ.கா. குண்டு - குண்டை

பாண்டி - பாண்டில் (பெயர்) : 1. வட்டம் 2. சிறு கலம்
3. அகல் விளக்கு 4. தாளம்
5. படுக்கை தாங்கி
6. கேடயத்துக்கான வட்ட விளிம்பு
7. வட்டக் கண்ணாடி
8. சக்கரத்தின் வட்டை
9. வண்டி 10. எருது
11. விளக்குத் தண்டு
12. நாடு (மண்டலம்)

புருள் - புருடை - பிருடை (பெயர்) :
1. யாழ் நரம்பைச் சரிப்படுத்தும் சாவி 2. திருகாணி

முல் :

(முல்) - முன் - முனி (பெயர்) : வில்

(முன்) - மனவு, மனா (பெயர்) : 1. போலிமுத்து, சங்கு மணி, சங்கு

(முல்) - (முர்) - முரி (குன்றாவினை) : வளை

முரல் - முருடு (பெயர்) : 1. பெரிய குறடு
2. வேர் முடிச்சு
3. பறை

உறுகு (பெயர்) : பிறை வடிவிலான காதணி

முறம் (பெயர்) : தூற்றும் கருவி, (சுளகு)

முறு - முறுக்கு (குன்றிய வினை) : 1. கயிற்றைத் திருகுதல்
2. விரைவுத் திருகு முறை
3. சுழற்று (குயவன் சக்கரத்தைப் போல)

திருப்புதல், திருகாணியைத் திருப்புதல், வட்டமான திண்பண்டம், நடுக்கம், வலிப்பு, உறுதித் தன்மை, முரட்டுத்தனம்

முறுக்கி (பெயர்) : திருகும் கருவி

முறை - மிறை (பெயர்): வளை, வளைவு

முற்று (குன்றிய வினை) : பக்கச்சுற்று, பக்கத் தடுப்பு

முற்றுகை (பெயர்) : சுற்றுப்புறம், எடுப்பும் தடுப்பும்

(முல்) - முண்டு (பெயர்) : 1. மரத்தின் வேர் முடிச்சு 2. வீக்கம், உப்புதல் 3. கூன் அல்லது வளைவு

முண்டை (பெயர்) : 1. முட்டை 2. பழக்கண்

முட்டன் (பெயர்) : திருநீற்றுக்கான சாண உருண்டை

முட்டை (பெயர்) : முண்டை

முட்டு - முத்து (பெயர்) : 1. வட்டமான சிறு விதை 2. முத்து 3. அம்மைக் கொப்பளம் 4. தண்ணீர்த் துணி

முத்தம் (பெயர்) : பெரிய அளவிலான முத்து

முடம் (பெயர்) : 1. வளைவு 2. வளைக்கப்பட்டது 3. கைகால் ஊனம்

முடவன் (பெயர்) : நொண்டி

முடவு (பெயர்) : நொண்டி நட

முதலை (பெயர்) : 1. பெரிய குறடு 2. மரத்தில் வளைவு 3. பந்து, கோளம் 4. முண்டு, சிறு முகிழ்

முடங்கு (குன்றாவினை) : 1. வளை 2. முடமாக்கு

முடக்கு (குன்றிய வினை) :வளை

1. வளை, வளைவு
2. தெரு மூலை
3. ஒரு நோய் (பெயர்)

முடக்கம் (பெயர்) : 1. வளை, வளைவு
2. ஊனம்
3. சோம்பியிருத்தல்,
வங்கியில் உள்ள பணத்தைப் போல

முடங்கு - மடங்கு (குன்றா வினை) : 1. வளை 2. திருப்பு
3. ஒளிக்கோட்டம்

மடங்கல் (பெயர்) : 1. வளைவு 2. திரும்புதல்
3. அரிமா அடிக்கடி
பின்னோக்கிப் பார்ப்பது

முடக்கு - மடக்கு (குன்றிய வினை) :
1. கைக்காலை மடக்குவது
2. கத்தி, கட்டிலை மடக்குவது
3. குதிரை, வண்டி
ஆகியவற்றைத் திருப்புவது
4. மீள்வது 5. கால்நடைகளை
அடைத்து வைப்பது.

முடி (குன்றிய விளை) : முடிச்சுப் போடு

முடிச்சு (பெயர்) : 1.முடி, கட்டு 2. தலைமயிரைக்
கட்டு 3. கயிற்றைக் கட்டு

முறி - மறி (குன்றாவினை) : 1. வளை 2. திருப்பு 3. பின்பக்கம்
திருப்பு 4. பக்கத்தில் திருப்பு
5. முறுக்கு
1. வந்த வழியே திருப்பு
2. தடு 3. மேல்கீழாகப் புரட்டு
2. மீளச் செய்,
இரட்டிப்பாக்கு (குன்றாவினை)

மறியல் (பெயர்) : தடுத்து நிறுத்துதல்

மறித்து, மறித்தும் (வினையடை) : மீண்டும்

முறுகு, மறுகு (குன்றாவினை) : சுழல விடு

முண்டு - மண்டு - மண்டி (பெயர்) :
1. காலை மடக்குதல்
2. முட்டிக் காலிடுதல்

(முன்) - (மன்) - மணி (பெயர்) : 1. சிறிய வட்டமான ஒன்று
2. முத்து, மணி 3. தவச மணி
4. வலை மணி
5. வலை முடிச்சு 6. பழக்கண்
7. நேரம், காலத்தை அறிவிக்கும் மணி, மணிக்கூண்டு

மண்டு - மண்டலம் (பெயர்) : 1. சுற்று 2. சுற்றுவட்டம்
3. சுருள் (பாம்பு, கயிறு)
4. மாய வட்ட வரைபடம்
5. சூரிய, நிலவு ஒளிவட்டம்
6. போர் வீரர்களின் வட்ட வடிவ அணிவகுப்பு
7. கைச் சைகை
8. சூரிய, நிலவின் வட்ட அமைப்பு
9. மாவட்டம், மாநிலம்
10. 40 நாட்கள் கொண்ட தொகுப்பு.

மண்டலி (குன்றாவினை) : 1. பாம்பைப் போல, கயிற்றைப் போல சுருட்டு 2. கால்களை வில்லைப் போல் வளைத்தல்
3. செய்யுளின் ஈற்றெழுத்து அல்லது சொல்லை, அடுத்த செய்யுளின் முதலில் வைத்தல்

மண்டலம் - மண்டிலம் (பெயர்) : 1. சுற்று, சுற்றுவட்டப் பாதை
2. சூரிய நிலவின் வட்ட அமைப்பு

3. வட்டமாதல்
4. குதிரையில் வட்டமாகச் சுற்றி வருதல்
5. சூரியன் 6. நிலவு 7. புவி
8. வானம் 9. கண்ணாடி (பாண்டில்)
10. மாவட்டம், மாநிலம்

வல் :

தமிழில் உயிர் மெய்யான வகரம், உயிரான உகரத்துடன் இணைந்து முதலெழுத்தாக அமையாது என்பதால், அடுத்த நிலையில் வகரத்துடன் மூன்றாவது அணியில் இணையும். வல் என்பது, புல் - முல் என்பதற்கு மாற்றாக அமையும்.

வல் - வல்லம் (பெயர்) : வட்டமான ஓலைக் கூடை
வல்லி (பெயர்) : வளையும், நெகிழும் தன்மையுள்ள கொடி
வல (குன்றா வினை) : வளை, வட்டமிடு, வட்டச்சுற்று
வலை (பெயர்) : வலை, மும்மடி ஈர்ப்பு வலை
வலி (குன்றிய வினை) : வளை, வளைவு, திடீரென குறுக்கு
வில் : வளைவான வில்
விலா : விலா எலும்பு
வள்ளம் (பெயர்) : 1. வட்டமான குவளை
2. மணிக்குடுவை
3. தவசத்தை அளக்கும் அளவு
வள்ளி (பெயர்) : 1. கைவளை, வளையல், மணிக்கட்டு வளை
2. ஏறும் ஒன்று, கொடி
வளவி (பெயர்) : கூரைச் சரிவு, இறவாணம்
வளவு (பெயர்) : இணைப்பு, வீடு
வளரி (பெயர்) : சென்று திரும்பி
வளா (பெயர்) : வளைவு, பரப்பளவு, பரந்திருப்பது (குளம்)

வளார் (பெயர்) : வளைந்த சிம்பு
வளார் - வலாஞ்சி (பெயர்) : வளைந்த சிம்பு
வளாவு (குன்றிய வினை) : சுற்றி வளை, மூடு
வளகம் (பெயர்) : 1. மூடுதல் 2. சுற்றி வளைத்தல் 3. புவி 4. ஒரு பரந்த இடம்
வளி (பெயர்) : சுழல் காற்று, காற்று
வளை (குன்றா வினை) :
வளை, கோணலாக
வளை, அங்குமிங்கும் செல்
1. சுற்றி வா, சுற்றி வளை, கீழே சாய் (குன்றாவினை)
2. வட்டம், சுற்றுப்புறம், வளையல், வட்டத்தட்டு, சங்கு (பெயர்)
வளையம் (பெயர்) : 1. வளையம், கணையாழி 2. வளையல் 3. இணைப்பு வளையம்
2. தாமரைப் பூவிதழ்
வளையல் (பெயர்) : கைவளை
வளைவி (பெயர்) : வளையல், தாழ்வான கூரை
வளைசல் (பெயர்) : நெளிவு, வளைவு, கோணல், எல்லைகளுக்குட்பட்டது, சுற்றுச்சுவர், அரசவை
வளை - வணை (குன்றாவினை) : வளைத்தல் செய், மயிர்ச்சுருள், தாவிக்குதி, வளைவான கூரை, யாழின் வளைந்த இறுதிப் பகுதி (பெயர்)
வணரி (பெயர்) : சென்று திரும்பி
வணங்கு (குன்றா வினை) : உடலை வளை, தாழ்மையுடன் உடலை வளைத்து இறைவனை வணங்குதல் (குன்றிய வினை)
வணங்கு - வாங்கு : வளை, வளைத்தல், வளைந்த

குறுவாள் (பெயர்)

வங்கம் (பெயர்) : வளைவு, வளைந்த ஆறு

வங்கா (பெயர்) : வளைவான ஊது குழல்

வங்கி (பெயர்) : கையில் அணிவது, வலது இடபுறங்களில் வளைந்தது, வளைந்த குறுவாள்

வண்டு (பெயர்) : 1. வளையல் 2. சங்கு 3. விரல்கள் மூலம் காட்டும் சைகை, இணையா விணைக்கை என்ற 33 பிரிவுகளில் ஒன்று. 4. தவசங்களை அளக்கும் போது, நீர்த்துளிகள் படாமலிருக்கப் பயன்படுத்தப்படும் வைக்கோல் சுருணை. 5. தவசங்களை மூடும் வைக்கோல் சுருணை 6. ஒரு கலத்தின் வாயில் கட்டப்பட்டுள்ள துணி

வண்டி - வண்டில் (பெயர்) : சக்கரம், வண்டி, மாட்டு வண்டி

வட்டு (பெயர்) : 1. வட்ட வடிவமான ஒன்று 2. பாண்டி விளையாட்டில் பயன்படுத்தப்படும் சிறு வட்டு (ஒட்டாஞ்சில்லி) 3. குடைக் கம்பிகளை இணைக்கும் வட்டமான துணி 4. இனிப்புக் கடை 5. அப்பள மாவு உருண்டை

வட்டி (குன்றா வினை) : 1. வட்டமானது, சுற்றுவது 2. வளைவு, சுழல்வது, சுற்றிச் சுழல்வது, உருள்வது, எறிவட்டு (பெயர்) வட்டமான பனை ஓலைக் கூடை

(கடகம்)
3. வட்டில், ஓர் அளவை

வட்டில் (பெயர்) : 1. உண்பதற்கானச் செப்புக் கலம்
2. நாழிகைக் கன்னல்

வட்டிகை (பெயர்) : வட்டம், சுற்றுவட்டம், கூடை, பரிசல்

வட்டம் (பெயர்) : வட்டம், வட்ட வடிவம், குயவன் சக்கரம், சூரியன் நிலவின் ஒளிப்புற வட்டம், வளையல், வட்ட விசிறி, அளவுத் தட்டு, தட்டி, புதுமலர்ச்சி, கோள்களின் வட்டப்பாதை, சுற்றுப் புற வட்டம், சில ஊர்கள் இணைந்த வருவாய் எல்லை.

வட்டரவு (பெயர்) : வட்டமை

வட்டன் (பெயர்) : குண்டன்

வட்டான் (பெயர்) : வட்டில், கிண்ணம்

வட்டை (பெயர்) : சக்கரப் புறச் சுற்று வட்டம், சக்கர விளிம்பு, சென்னை அளவு

வடை (பெயர்) : உளுத்தம் மாவில் சுட்ட வட்டப் பணியாரம்

வடகம் (பெயர்) : மாவு, பச்சிலை, நறுமணப் பொருட்கலவை சேர்த்து உருண்டை பிடிக்கப்பட்டு, வெயிலில் காய வைத்த தாளிக்கும் பொருள்

வட்டக்கை (பெயர்) : சுற்று, சுற்று வட்டாரம், ஓரிடம், ஒரு பகுதி, கிண்ணம்

வட்டாரம் (பெயர்) : சுற்றுப் பகுதி, குறிப்பிட்ட பரப்பளவுள்ள பகுதி

வட்டணம் (பெயர்) : வட்டக் கேடயம்

வட்டணி (குன்றா வினை) : வட்டமாக, சுற்று வட்டமாக அமை,

வட்டமாக, சுற்று வட்டமாக உருவாக்கு.

வட்டணை (பெயர்) : 1. வட்டம், வட்ட வடிவம் 2. தாளம் 3. குதிரையின் வட்டச் சுற்று 4. கோளம், பந்து 5. கேடயம் 6. வாளைச் சுழற்றுதல்

வல் - (வர்) - வரி (குன்றா வினை) : 1. பூச்சுப் பூசு 2. வரை 3. எழுது எல்லை குறித்தல், எல்லையிடல், அடக்கு வரைவு

வரி + அணம் - வரணம் (பெயர்) : 1. சுற்றுப்புறம் 2. சுற்றுப்புறச் சுவர், மதில் 3. மூடப்பட்ட, திரையிடப்பட்ட 4. மேலாடை 5. இலிங்க இலை 6. வண்ணம், ஓவியம் 7. மடல் 8. வண்ணப் பொடி, பூச்சு 9. சாதி 10. இசையின் ஒரு பிரிவு

வரணம் - வண்ணம் (பெயர்) : 1. பூச்சு 2. நிறம் 3. அழகு 4. அழகுபடுத்தல் 5. சாதி 6. நறுமணப் பொருட்கள் 7. இயற்கையின் தன்மை 8. வழி, பாங்கு, முறை 9. செய்யுளின் ஒலி ஒழுங்கு 10. திருப்புகழின் சொல்லொலி 11. இசைப் பிரிவு 12. பாடல்

வண்ணத்தான் (பெயர்) : துணி வெளுக்கும் தொழிலாளி

வண்ணான் (பெயர்) : மேலதே

வண்ணத்துப்பூச்சி (பெயர்): பட்டாம் பூச்சி

வரணம் - வரணி (குன்றிய வினை) : விளக்கு, புகழ்ந்து பேசு

வரணி - வண்ணி (பெயர்) : விளக்கு

வாள் (பெயர்) : நீண்ட கத்தி, குறுங்கத்தி,

| | | |
|---|---|---|
| | | வளைந்த குறுங்கத்தி |
| வாளி (பெயர்) | : | 1. காது அல்லது மூக்கு வளையம் 2. நீர்க்கலத்தின் கைப்பிடி 3. குதிரையின் சுற்று ஓட்டம் |
| வாளி (பெயர்) | : | வைகை, சிறிய காதணி |
| வாசி (பெயர்) | : | சிலையின் மேல் அழகுபடுத்தப்பட்ட வளைவு, வாசி - வாசிகை |
| வாரி (பெயர்) | : | கடல், கடல் சூழ்ந்த புவி |
| வாரணம் (பெயர்) | : | 1. சங்கு 2. கடல் 3. வட்டக் கேடயம் 4. பாதுகாப்பு 5. லிங்க மர இலை |
| வாரணனன் (பெயர்) | : | நெய்தல், கடற்கடவுள் |
| வாடு (குன்றா வினை) | : | சோர்ந்து போ, கீழே அல்லது திரும்பி உட்கார், படு |
| வாட்டம் (பெயர்) | : | சரிவு |
| வாட்டி (பெயர்) | : | திருப்பு, நேரம் |
| குறிப்பு | : | தமிழரின் தாய் நிலமும், தமிழ் நாடுமான குமரிக்கண்டம் கடலுள் மூழ்கியதால், ஆரியத்துக்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்கள், குறிப்பாக ஆயிரக்கணக்கான வழக்குச் சொற்களும், இலக்கியச் சொற்களும் மறைந்து போயின. அவை அடைக்குறியில் காட்டப்பட்டுள்ளன. இலக்கணப் பெயர்கள் நீங்கலானவை. |

## 22. தமிழ் வளர்ச்சியின் நான்கு நிலைகள்



மூத்ததும் முதன்மையானதும் உயர்ந்து பண்பட்டதுமான தமிழ் மொழி, தனது வளர்ச்சியில் நான்கு நிலைகளை, அதாவது 1. ஓரசை மொழிநிலை (Mono-Syllabic) 2. புணர் நிலை (compounding) 3. சொல்லுருத் திரிபு நிலை (Inflexional) 4. பற்சொல்லுருத் திரிபு நிலை (Poly inflexional) ஆகிய நான்கு நிலைகளைக் கடந்து வந்துள்ளது.

ஓரசை நிலையில், சில ஒப்பொலிகளைத் தவிர்த்து, மற்ற சொற்கள் அனைத்தும், ஓரசைச் சொற்களாகவே இருந்தன.

எ.கா. : மா : விலங்கு, ஈ : கொடு

புணர் நிலையின் போது, இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சொற்கள் இணைந்து கலப்புப் பொருளை உணர்த்த, நடைமுறை வழக்கில் அவை தத்தம் பொருளை இழக்காமலும் சேர்க்காமலும், தனித்தன்மையுடன் விளங்கின.

எ.கா. : இல் - ஆள் : இல்லாள், மனைவி அல்லது இல்லத்துப் பெண் என்றும், நா - இ (ய்) நாய், நீண்ட நாக்கைக் கொண்டது என்றும் சொல்லப்பட்டன.

ஆளி என்ற சொல், தொடக்கத்தில் பெண்ணையே குறித்ததாகச் சொல்லப்படுகின்றது. ஈ அல் இ, தொன்மையான பகரப் பெயராகவே (Pronoun) சொல்லப்பட்டு, ஈடு அல்லது இடு என்ற பொருளையே குறித்தது.

கூட்டுச் சொற்களான இணைச் சொற்கள், நட்டாக்கம் (Agglutination) என்றவாறே அழைக்கப்பட்டதாக பல ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

சொல்லுருத் திரிபு நிலையில், தொடர்ந்த அல்லது இறுதி ஆக்கக் கூறுகளாக, பல கூட்டுச் சொற்களாக அமைந்திருந்தவை, தங்கள் தோற்றச் சிறப்பை இழந்து, ஆக்க உருபுச் சொற்களின் பின்னொட்டுகளாயின. (Formative Suffixes)

எ.கா. : இல்லாள் : மனைவி, நாய் : நீண்ட நாக்கைக் கொண்ட விலங்கு.

பற்சொல்லுருத் திரிபு நிலையில், மேலும் பல சொல்லுருக்கள், கூட்டுச் சொற்களில் இணைந்தன.

எ.கா. : பெருமான் (பெரு+மக+ஆன்)

செய் விப்பி (செய்ய+ஈ+ய்), வினை முதலும், முடித்தலும். ஆன், மாற்றம் பெற்ற அல்லது மெல்லொலி பெற்றதின் ஆண், ஆணைக் குறித்த சொல்லாயிற்று.

ஈ : கொடு, அளி, எதையும் செய்ய விடு என்பன, வி மற்றும் பி என்றவாறு வினைப் பொருளில் மாற்றம் பெற்றது.

எ.கா. : செய்யை + ஈ - செய்யவி - செய்வி, வினை முடித்தலாயிற்று.

படிப்ப (=படிக்க) + ஈ - படிப்பவி - படிப்பி, கற்க, படிக்க வினை முதலாயிற்று.

உண்ண+ஈ - உண்ணவி+ஈ - உண்பி, உண்ணக் கொடு பகுப்பாய்வு நிலையில் (Analytical Stage), பல மொழிகள், சொல்லுருத் திரிபு நிலையிலிருந்து, புணர் சொற்கள் அல்லது ஓரசைச் சொற்களுக்கு, கணிசமான அளவில் மாறின. இந்நிலை எளிமைப்படுத்திக் கொள்ளுதல் அல்லது சிதைவுறுதல்

என்றவாறு, வளர்ச்சிக்குத் தடையான அமைந்திருக்கலாம். எனவே, ஓரசை நிலையென்பது, மிகப் பழமையானதாக அல்லது மொழித் தோற்றத்தின் இறுதி நிலையாக, வரலாற்றின் அமைவிலும், நிலைப்பாட்டிலும் அமைந்திருந்தாக அறியப்படுகின்றது.

### 7. திரிபு நிலை மாற்றங்கள்

திரிவு நிலையென்பது, ஒரு மொழியின் வளர்ச்சியில் அடிப்படையான நெறிமுறையாகும். அவை, கூட்டல், சடுதி மாற்றம், விடுபாடு ஆகிய செயல் வகைகளில் அடங்கும்.

**(அ) பொது வடிவங்கள்**

*1. கூட்டல்கள்*

வேர்களுக்கான ஆக்கவொட்டுக் கூட்டல்கள் (Formative additions)

எ.கா. : திரு - திருந்து, சரியெனக் கொள், திருத்து அல்லது செம்மைப்படுத்து, பண்படுத்தப்படல், செம்மைப்படுத்தப் படல்

முள் - முழுகு, நீரில் அமிழ்தல், அமிழ்த்தப்படு.

அடிச்சொற்களின் பெருக்கம்

எ.கா. : தொலை - தொலைச்சு, கொல், அழி; இல்லாமல் செய்

கிடை - கிடைச்சு, தக்கை

உயிர்மெய்களில், இரட்டிப்பும், மீள் இரட்டிப்பும்

எ.கா. : பகு - பக்கம், ஒற்றைச் சார்பு, நூலில் ஒரு பக்கம்

எழுது - எழுத்து, எழுதுதல், ஓர் எழுத்து

பாடு - பாட்டு, பாடல்

எண் - எண்ணம், சிந்தனை

கொள் - கொள்ளை, சூறை

மூவகைத் திரிபு முறை

எ.கா. : 1. ஆழல் - தாழல், நெருப்பு

அளாவு - வளாவு, தண்ணீர் - வெந்நீர் கலத்தல்

உருள் - சுருள், சுருட்டு

ஏண் - சேண், தொலைவு, உயர்வு

2. காடலம் - காவடம், பத்துக்கல் தொலைவு

பரவர் - பரதவர், வணிக மீனவர்

இலகு - இலங்கு, ஒளிரு

பிறகு - பிறர்க்கு, பின்னே

3. திரும் - திரும்பு, பின்புறமாகத் திரும்பு

கடை - கடைசி, இறுதி

**கூட்டுச் சாரியை :**

எ.கா. : கா+அல் - காவல், காப்பு, பாதுகாப்பு

தீ+ஒன் - தீயோன், கெட்டவன்

வாழ்+கை - வாழ்க்கை, வாழ்தல், வளமாக வாழ்தல்

சல+கை - சலங்கை, ஆடுபவன் காலில் உள்ள சிறு மணிகள்

உள்+கை - உள்ளங்கை, கையின் உட்புறம்

**சிறப்புத் தேர்வின் இடைச்சொல் :**

அள் : அள் : நெருங்கியிரு, கூட்டமாக இரு, அடர்ந்திரு, நெருக்கமாயிரு

அளவு, அளாவு, தொடு

அளை, கூட்டு, கல

அள் - அண்

அண் - அண்ணு, அருகில் இரு, நெருங்கி வா

அண்மு, நெருங்கு

அண்டு, அருகில் வா

அண, இணைக்கப்படு, சேர்க்கப்படு

அணவு, சேர், தழுவு, இணை

அணுகு, சேர்

அணை, தழுவு

அண் - அடு

அடு, நெருங்கு, வா, சேர்

அடுக்கு, வரிசைப்படுத்து, ஒழுங்கடுக்கு

அடர், அருகில் அணை, நெருக்காயிரு

அடை, சேர், பெறு

அடைசு, நெருங்கு, இணைய வை

**முன்னொட்டுகள் :**

எ.கா. : அல்=வு, அவலம், கேடு. நல் - ன, நல்ல,

குல் - கு, சிறிய, குறுகிய

முன் : முன்னேறு, வளர்ச்சியுறு, முன்னேற்றம்

பின் : பின் செல், தொடர்ந்து வா

அகம் : அகப்படு, பிடிபடு, வளைக்கப்படு

புறம் : புறப்படு, வெளியே செல், பயணத்தைத் தொடங்கு

நல் : நற்றாய், ஒருவனின் பெற்ற தாய் நல்லம்மாள், தாய்வழி மாமன்

தன் : தற்கொலை, தன்னையே மாய்த்துக் கொள்ளுதல்

தம் : தம்பின் - தம்பி, இளைய உடன்பிறப்பு தாய் (தம்+ஆய்), அம்மா

அனை - ஆனை நெருஞ்சி

மணி - மணிக்குடல், சிறு குடல்

**ஆக்க உருபின் பின்னொட்டு, இடைச் சொல் :**

எ.கா. : ஆ : நிலா மதி, ஒளிரும் தன்மை

ஈ : (மறைந்தது)

ஊ : (மறைந்தது)

அ : கர, மறை, மறைவு

இ : கரி, சுறுசுறுப்பாயிரு

உ : கரு, கருப்பாக்கு, கருமையாயிரு

அவு : உழவு, உழுதல், பயிர்த்தொழில்

இவு : தெளிவு, ஒளிப்பட, பளிச்சிடல்

உவு : கழுவு, தூய்மைப்படுத்து, கறை நீக்கு

அகு : வரகு, ஒரு தவசம்

இகு : வணிகு, வணிகம், வணிகர்
உகு : உருகு, இளகு
அகம் : கலகம், எதிர்ப்பு, கிளர்ச்சி, எதிர்க்கிளர்ச்சி
இகம் : வணிகம்,
உகம் : சருகம், பசுக்களைத் தாக்கும் நோய்
இம் : ....................
உம் : உரும், இடி
அன் : கடன்
இன் : கலின், கால் தண்டையொலி
உன் : பொருள், சரியான
அல் : கடல்
இல் : அணில்
உல் : ...........
அள் : அரள், அச்சப்படுதல்
இள் : செகில், செதில்
உள் : இருள், இருட்டு
அழ் : புகழ்
இழ் : மகிழ்
உழ் : கலுழ், கலங்கல் நீர், மனத் தடுமாற்றம்
அர் : சுடர், மிகு ஒளி
இர் : குளிர்
உர் : புகுர் - பூர், நுழைதல்
அறு : இடறு, தவறுதல்
இறு : கொடிறு, குறடு
உறு : .........
அடு : கறடு, ஒழுங்கின்மை
இடு : முசிடு, சிவப்பு எறும்பு
உடு : குருடு, பார்வையின்மை
அது : வலது, வலப்பக்கம்
இது : சிறிது, சிறிய

உது : மருது, மருத மரம்

அம் - (பின்னொட்டு) - மதி - மதியம் (நிறை மதி)

இல் - (பின்னொட்டு) - தொட்டி - தொட்டில்

**பின்னொட்டுகளின் மிகைப்படிச் சேர்ப்பு :**

எ.கா. : புள் - புழல் - புடல் - புடலை, புடலங்காய்

சுள் - சுண்ணம் (சுண்ணாம்பு), சுதை

வள் - வட்டு - வட்டம் - வட்டாரம்,

ஒரு குறிப்பிட்ட பரப்புள்ள பகுதி சிறப்பு இடைச் சொற்கள் பற்றிய எடுத்துக்காட்டுகள், அடுத்து வரும் சொற்களில் ஆக்க உருபு இடைச்சொற்கள் மற்றும் பின்னொட்டுகள் சொல்லப்படும். இவை உண்மையில் சுட்டுச் சொற்களாகும்.

**உகரத்தின் விளக்கக் கூற்று :**

குற்றுகரம், சில வினைகளில் கூடி, மூக்கொலியாக வரும். அவை நிகழ்கால, எதிர்கால வினைகளில் இணைப்பட்டு, விளக்கக் கூற்றுக்கு உதவும்.

எ.கா. : எண் (கருது, எண்ணு) - எண்ணுகிறான்,

அவன் எண்ணுகிறான்

எண்ணுவான், அவன் எண்ணுவான்

அள் : இரு கைகளாலும் எடுத்தல்) - அள்ளுகிறான், அவன் அள்ளுகிறான் அள்ளுவான், அவன் அள்ளுவான்

உகரத்தை ஒலித்தல் :

மூக்கின் மெல்லொலி, வல்லின உயிர்மெய்யாகும் போது, அவ்வல்லொலியை உகரம் பின் தொடரும். தமிழைப் பேச, தமிழர்களின் பேச்சுறுப்புகள், வல்லொலியை இறுதி உயிர்மெய்யாக ஒலிப்பதில் தோன்றும் இடறலைத் தவிர்ப்பதற்காக, உடன் வரும் உயிரை முத்தான உகரம் துணை செய்கிறது அல்லது உயிரெழுத்து உதவுகிறது.

எ.கா. : கோன் - கோடு, வளை, கோணல் படுத்து

நன் - நறு, நல்ல, மணமுள்ள

மெல் - மெது, மென்மை

ஒளிர் - ஒளிறு, ஒளி கொடு

மேற்கண்ட நடைமுறை, சில நேரங்களில் பகுதியாகவே பின்பற்றப்படுகின்றது. லகரமும் ளகரமும், ஓரசைக் குறிலாக வந்து, ழகரம் அல்லது ரகரமாகவும் மாறுகிறது. உயிரெழுத்து உடன் வரும் போது, அதற்குத் தடையேதும் ஏற்படுவதில்லை.

எ.கா.: குள் - குழி, ஓட்டை, பள்ளம்

கொள் - கொம்பு - கொழு கொம்பு : கொடியேறப் பயன்படும் கொம்பு

முல் - முழை : துருபு

பல் - பகு : பெரிதாகு, ஊது (Bulky)

கள் - கரு : கருமையாகு கரி, கரிக்கடை, கருமையானது

இணைப்பின் போக்கு, சடுதி மாற்றத்துக்கும் சில நேரங்களில் உள்ளாகும்.

எ.கா. : அம் - அன் - அல் - அள் - அழ்;

அர் - அறு - அடு, அம் - அவு - அகு,

அவு - அபு, அடு - டு அல்லது து, அவு - வு, அபு - பு

உடல் + பு - (உடம்பு), உடம்பு, உடல்

**சடுதி மாற்றங்கள் :**

**உயிரெழுத்து மாற்றங்கள்**

ஓர் உயிரெழுத்து, மற்றோர் உயிராக மாறலாம். இடையில் ஓர் உயிர் துணை வரும் போது அது நேரிடையான மாற்றமாக இல்லாமலும் அமையலாம். ஆனால் பொதுவான

**உயிரெழுத்து மாற்றங்கள் வருமாறு :**

எ.கா. : அ - இ : பருமை, தடித்தது, பகுத்தது - பெருமை, உயர்வு, புகழ்

(சத்தான்) - செத்தான் - இறந்தான்

(சக்கு) - செக்கு, நெய் பிழியும் பொறி

(வண்டை) - வெண்டை, வெண்டைக்காய்

எ.கா. : ஈ - உ பிறகு - புறகு, பின்புறம் (பெயர்), பின்பக்கமாக

(வினையடை) பின், பிறகு

எ.கா. : உ - அ குட்டை - கட்டை, குள்ளமான

குடும்பு - கடும்பு, இல்லம், உறவுகள்

துளிர் - தளிர், முளைத்தல்

முடங்கு - மடங்கு, மடிக்கப்பட்ட, திருப்பப்பட்ட, விலக்கப்பட்ட

எ.கா. : உ - ஈ புறள் - சுழல வை, செயலிழ

பிறழ் - ஒரு பக்கமாக மாறு, சொன்னவற்றை மீறு

புரண்டை - பிரண்டை : நான்கு பக்கமுள்ள கொடி

முடுக்கு - மிடுக்கு : திடம், உறுதித் தன்மை

குச்சு - குச்சி : சிறிய கழி, கம்பு

குஞ்சு - குஞ்சி : இளம் பறவைகள்

பஞ்சு - பஞ்சி, பருத்தி

எ.கா : ஊ - ஈ தூறு - நீறு; மாவு, பொடி

துண்டு - திண்டு : முறுக்கு, திரி

எ.கா. : ஒ=அ கொம்பு - கம்பு: நீளத் தண்டு, குச்சி

மொண்டை - மண்டை : கலம்

மொண்ணை - மண்ணை : முனை மழுந்தம்

எ.கா. : ஓ - ஆ ஓட்டம் - ஆட்டம் (வினையடை) : விருப்பம் நோடு - நாடு; தேர்வு செய், ஆய்வு செய் உயிரிசைபு மாற்றம்

எ.கா. : குடி - குடும்பு : குடும்பம்

தோலி - தொலும்பு: தசை

அடுசில் - அடிசில் : சமைத்த உணவு

வடகு - வடுகு : தெலுங்கு

**குற்றுயிரை நீட்டித்தல்**

எ.கா. : கண் - காண் : பார்

படு : துன்புறு, பாடு : இடர்ப்படுதல், உழைத்தல், கடினப்பணி

புழை : வழி, குழல், புடைவாயில், குறுகிய வழி, சாளரம்

பூழை : வெடிப்பு, சிறு கதவு, புடை வாயில், கணவாய்
நெட்டுயிர்ச் சுருக்கம்

எ.கா. : ஆங்கு - அங்கு : அங்கே

ஏவன் - எவன் : யார்

தேய்வு (தேவு) - தெய்வம் : கடவுள்

வாங்கு - வங்கு : வளை (த்தல்)

நாம் - நம் : எம்

குறை நிரப்புகின்ற உயிர் வேர்களின் நீட்சி.

ஒரு சொல்லின் இறுதியான இரண்டு மூன்று ஒலிகள் விடப்படும் போது, உயிர் வேர் நீண்டு, இழந்த ஒலிப்புகளை ஈடு செய்யும்.

எ.கா. : பகு - பா : பிரி, பகிர்

பகுதி - பாதி : அரை

பெயர் - பேர் : பெயர்

பொழுது - போது : நேரம்

வணங்கு - வங்கு : வளை

வியர் - வேர் : வேர்வை

விழு - வீழ் : கீழே விழு

**உயிர் வேர்களின் மாற்றங்கள்**

தமிழில் இரண்டு வினைச் சொற்கள் உள்ளன. உயிர் வேர்கள், ஏவலில் ஒருமையாக, பன்மையாக நீண்டு, பேச்சு வழக்காகவும், மற்றது ஒருமையில் மட்டுமே இலக்கிய வழக்காகவும் அமையும்.

எ.கா. : வேர் ஏவல் ஒருமை, ஏவல் பன்மை

வள் (வர்) - வழு - வா, வரும் (பேச்சு வழக்கு)

வா வாருங்கள் (இலக்கிய வழக்கு)

தள் - (தார்) - தரு - தா, தாரும் (பேச்சு வழக்கு)

தா - தாருங்கள், (இலக்கிய வழக்கு)

மேற்கண்டவாறு இரண்டு வினைகள், வேர் உயிர்களில், கடந்த காலத்தில் குறுகி வரும்.

எ.கா. : வேர் இறந்த காலம்

காண் (பார், தெளி) கண்டான் (முற்று வினை)

கண்டு (இறந்த கால வினையெச்சம்)

கண்ட (பெயரெச்சம்)

நோ (வலிப்படு) நொந்தான் (முற்றுவினை)

நொந்து (இறந்தகால வினையெச்சம்)

நொந்த (பெயரெச்சம்)

வேர் உயிரில் இறந்தகால வினைச்சொல், மாற்றம் பெறுவது, ஆரியருக்கு முன்பே அறியப்பட்டிருந்தது.

வேர் இறந்த காலம்

கா (இற) செத்தான் (முற்றுவினை)

செத்து (இறந்தகால வினையெச்சம்)

செத்த (பெயரெச்சம்)

வல்லின உயிர்மெய்களில் மூக்கினமாக்கம்

போக்கு - போங்கு (இவ்வாறாக, நடப்பு)

குச்சம் - குஞ்சம் (தொங்கல் குஞ்சம்)

தட்டு - தண்டு, காம்பு

வித்து - (விதை) - விந்து (ஆணுயிர்)

சப்பணம் - சம்மணம் (குறுக்குக் காலில் அமர்தல்)

வெற்றி - வென்றி (வாகை சூடல்)

மூக்கொலிப்பில் வலித்தல்

கொம்பு - கொப்பு : கிளை

நண்டு வாய்க்காலி - நட்டு வாய்க்காலி, பெருந்தேள்

வகை எழுத்து, ஒலி, சொல், முன் பின்னாதல்

சதை - தசை, தோல்

கடுவாலி - கவுதாரி

இல்வாய் - வாயில்

இல்முன்று - முன்றில் - முற்றில் - முற்றம் : வீட்டு முற்றம்

மோனையில் உயிர் மாற்றங்கள்

அ=ஆ=அய்(ஐ)

எ.கா. : பசு, பச்சை; பாசி, பச்சை; பை, பச்சை, ஒப்பந்தணம்,
காய், இளமை, புத்தம் புதிய, கனியாத
இருமை, கருமை; எருமை; ஏமை, பன்றி
விழு - விழை, விரும்பு; விழ், விரும்பு; வெந்து,
சுடப்பட்டு; வேந்து, பெற, விரும்ப
உ=ஊ=ஒ=ஓ

எ.கா. : குனி, வளை, கூன், வளைவு,
கொடு, கோணலாகு; கோடு, வளைவு
உயிர்மெய்களின் மாற்றங்கள்
ஒத்த உயிர்மெய்கள் ஓரினமாதல்

எ.கா. : காண் + சி, காட்சி, பார்வை, கண்ணோட்டம், காட்சி,
மகிழ்வுறு நிகழ்வு;
கல்+தாழை, கற்றாழை
உயிர்மெய்களின் வரிசை மாற்று மெய்யிடம் பெயரல்

எ.கா. : குடவன் - குசவன் - குயவன், கலஞ்செய் கலைஞன்
நாயிறு - ஞாயிறு, சூரியன், ஞாயிற்றுக்கிழமை
நெயவு - நெசவு, நெய்தல்
பழம் - பயம், பயன், முழுப்பயன்
முகம் - முகன்
முற்றில் - முக்கில், விளையாட்டு முறம்
எழுத்து சொற்களின் தொடர் மாற்றங்கள்

எ.கா. : வாயில் - வாயல் - வாசல், கதவு
நீக்கம்
எழுத்துக்களில் மூவகை இழப்பு அல்லது குறைப்பு

1. முதற் குறை : எ.கா. : தாமரை - மரை; யானை - ஆனை
2. இடைக் குறை : எ.கா. : பெட்டை - பெடை, பறவைகளில் பெண்ணினம்
3. கடைக் குறை : எ.கா. : தம்பின் - தம்பி

நல் - ந (முன்னொட்டு) நல்ல
வேர்ச் சொல் மெய்களில் குறைப்பு, மறுப்பு

1. சில வினைகளின் பகுதிகள் :
எ.கா. : வேர்பகுதி
வரு,வா (ஒருமை)
வாமின் (பன்மை)
வந்தான் (இறந்தகால வினைமுற்று)
வந்த (இறந்தகால வினையெச்சம்)
2. வினைக் கருப்பொருள் மாற்று
எ.கா. : கோர் - கோ, கிண் - கிணிப்பு, பூக்கள்
பொழ் - பொ, துளை
3. புதிய வினைச் சேர்க்கை
எ.கா. : சாய் - சா, இற, இறந்துபடு
4. நீண்ட உயிர்க்கருப்பொருள் திரிபு
எ.கா. : கொழுது - கோது, மூக்கால் எடுத்தல்
பெயர் - பேர்
பொழுது - போது
மிகு - மி, மீதி வை
5. பெயர்ச் சொற்களின் பங்கேற்பு
எ.கா. : வேய்ந்தோன் - வேந்தன், மூவேந்தரில் ஒருவன், முடி சூடியவன்
6. பெயர்ச்சொற்களின் திரிபுகள்
எ.கா. : பாண் - பா, பாடல்
தெய்வு - தேவு, இறை
7. தொடர்புகள் : எ.கா. : தெங்கன் காய் - தேங்காய்
தம்+ஆய் - தாய்
ஒலியசை கெடுகை : எ.கா. : மக+கள் - மக்கள்
அக+களிப்பு - அக்களிப்பு
பலவடிவுடைச் சொற்கள்
அடைவு, அடவு, அடகு, அடை மானம் - ஒத்தி வைத்தல்
இறா, இறவு, இறால், இறாட்டு - கூனி மீன்
கொப்புள், கொப்பூழ், தொப்புள்,

தொப்பூழ் - தொப்புள்

சுள்ளை, சூளை - சுடும் இடம்

சொள்ளை, சொட்டை, சொத்தை - அழுகிய பழம், கெட்டுப் போனது

முகுளம், முகை, முகிள், மொக்கு, மொக்குள் - இதழ்

ந, நாவு, நாக்கு - சுவையுறுப்பு

விசிறு, வீசு - காற்றைத் திருப்புதல், சுற்றுதல், சுழற்றுதல், கைகளை நீட்டி நடத்தல்

பொருட் பிரிவுகள் :

மாறுபாடு : எ.கா. : கோயில், கோவில்
(கோ - மன்னன், இல் - வீடு)

தொடக்கத்தில் அரண்மனையைக் குறித்துப் பின்னர் இறை வணக்கம் செலுத்துமிடமாயிற்று.

இழிபொருட்பேறு : எ.கா.: பயல் (பெயர்), பொதுவாக, பையன். தற்போது, ஓராள், இளைஞன் அல்லது முதியவன். இதற்கு இணையான பெண்பாற் பெயர், சிறுக்கி

பறை : தோற் கருவி, தற்காலத்தில் இறுதி ஊர்வலத்துக்கான கருவியாக, தரம் குறைந்து சொல்லப்படுகிறது.

ஏற்றம் : களி என்ற வினைச்சொல், தொடக்கத்தில் மதுவைக் குறித்து, தற்போது, மகிழ்வைக் குறிக்கிறது.

விரிவு : காளை என்ற சொல் எருதையும், மறவனையும் குறிக்கின்றது. யானையும், தேனீயும் தும்பி என்று அழைக்கப்படும்.

தும்பி :

நீண்ட நாசி. தூங்கு என்ற வினைச் சொல், தொங்கு என்ற பொருளில் சொல்லப்பட்டு அடியிற்கண்டவாறு விரிவு பெற்றது. அசையும் கட்டிலில் உறங்கு, உறங்கு, கைவிடு, தாமதம் செய், கீழ்நோக்கு, நலிவுறு என்றவாறும் பொருள் கொள்ளப்படும்.

வரையறுக்கப்பட்டவை :

கறி என்ற சொல், பொருள் அளவில், காய்கறிகளையும், இறைச்சியையும் குறித்தாலும், பின்னதுக்கான சொல்லாக வரையறை செய்யப்பட்டுள்ளது. அதுபோலவே, மனை என்ற சொல், வீடு, வீடு கட்டவிருக்கும் இடம் என்றவாறு அறியப்பட்டு, பின்னதுக்கான பொருளாக அமைகிறது.

பொதுத்தன்மை :

அனைத்து மரங்களும், பறவைகளும், விலங்குகளும் பொதுவாக, ஒரு பொதுப் பெயரால் வழங்கப்பட்டு வருகின்றன. முறையே, மரம், பறவை (புள்), விலங்கு (மா) எனச் சொல்லப்படும்.

உண்மையில், வளைந்த ஒன்றே, கோடு எனப்படும். ஆனால் தற்போது அனைத்து வடிவிலானவைகளும் கோடு என்றே சொல்லப்படுகின்றன.

**தமிழின் செம்மொழித் தன்மை**

அரிதினும் அரிதான, வளமை கொண்ட தமிழின் சொற்களஞ்சியம்.

ஒவ்வொரு நாட்டிலும், மொழியென்பது வேளாண் மக்களாலும், இலக்கியம் என்பது புலவர்களாலும் அறிஞர்களாலும் படைக்கப்படுகின்றன. ஒரு பண்பட்ட செம்மொழியென்பது, நாகரிக மக்கள் புரிந்து கொள்ளும் வகையிலான கருத்தியலைக் கொண்ட சொற்களைக் கொண்டிருக்க வேண்டும். அச்செம்மொழி ஒரு சொல்லுக்கான பல பொருளைக் கொண்டிருப்பதோடு வெவ்வேறு சூழல்களிலும், அதன் பொருள் பொருந்தி வர வேண்டும். உண்மையில், மிகவும் போற்றத்தக்க வகையில், அதன் பெருமை குறைக்கப்பட்ட நிலையிலும், விவரிக்க இயலாத அளவில், ஒரு சொல், பல்பொருள் என்ற அரிதினும் அரிதான வளமை பெற்றுத் தமிழ் திகழ்கின்றது.

பன்னிரெண்டுக்கும் மேற்பட்ட தமிழ்ச் சொற்கள்,

மேகத்தைக் குறிக்கின்றன. இளை, எழிலி, களம், காளம், கார், குயின், கொண்டல், செல், மஞ்சு, மால், முகில், மை, விண்டு என அவை வழங்கப்படுகின்றன.

கீழைக்காற்று, மேலைக்காற்று, தெற்குக் காற்று, வடக்குக் காற்று ஆகியவை முறையே கொண்டல், கோடல், தென்றல், வாடை என அறியப்படும்.

நான்கு தலைமுறை வரையிலான ஆண், பெண் உறவுகள் அடியிற் கண்டவாறு சொல்லப்படும்.

| | |
|---|---|
| தந்தை (ஆண்) | தாய் (பெண்) |
| அச்சன் | அச்சி |
| அட்டன் | ஆச்சி |
| அப்பன் | அட்டி |
| ஐ, ஐயன் | ஆட்டி |
| ஆ ஞான் | ஆட்டை |
| தா | அம்மை |
| அவ்வை | அன்னை |
| அஞ்ஞை | தன்னி |
| ஆய் | போற்றி, போட்டி, |
| பாட்டன் - | தாத்தா |
| பாய், பாட்டி - | பாட்டி |

தாத்தா, தாதை, அப்பச்சன், அப்பாட்டன் - தந்தை வழி பாட்டன்கள் அம்மாச்சி, அமிஞை - தாய்வழி பாட்டி

பூட்டன் - தாத்தாவின் தந்தை

பூட்டி - பாட்டியின் தாய்

அப்பாய், அப்பாட்டி - தந்தைவழிப்பாட்டி

ஓட்டன், சேயான் - முப்பாட்டன்

ஓட்டி, சேயாள் - முப்பாட்டி

அக்கச்சி, அப்பத்தாய் ஆகியவை உண்மையில் பாட்டியைக் குறித்தாலும், தற்காலத்தில் அக்கா, குறிப்பாக மூத்த அக்காவைக் குறிக்கின்றன.

பொது மக்களிடையே, உறவு முறைகளைக் குறிப்பிட்ட சொற்களால் வழங்கவதற்கு மாற்றாக, பல சொற்களை, பால் வேறுபாட்டைக் குறிக்காத பின்னொட்டுகளை, இணைத்து தற்காலத்தில் அழைத்து வருகின்றனர்.

எ.கா. :

அப்பா, அய்யா, அம்மா, ஆத்தா - புது விளிப்புகள்

அப்பார், அண்ணார், அம்மான்,

ஆத்தாள் - பால் வேறுபாட்டைக் குறிக்காத பின்னொட்டுகள்

சில பெயர்கள், எதிர் பாலரைக் குறிக்கும் வகையிலும் உள்ளன.

எ.கா. : அப்பாட்டி, அம்மாச்சன் சிறப்பினத்தின் வேறுபாடுகள் எட்டு வகையான குதிரைகள் பற்றி திருவிளையாடற்புராணம் அடியிற்கண்டவாறு கூறுகிறது :

புரவி : உயரமான சுவர்களையும் தடுப்புகளையும் தாண்ட வல்லது.

குதிரை : வெகு தொலைவில் ஓடக் கூடியது.

பாடலம் : கழுத்தும் நெற்றியும் அகலமாக உள்ளது.

கோடகம் (கோணகம்) : கழுத்து முக்கோண வடிவில் உள்ளது.

இவுளி : பகைவரைக் கடுமையாகத் தடுக்க வல்லது.

வன்னி : உடல் முழுவதும் வெண்மை நிறமானது.

பரி : விரைந்து ஓடக் கூடியது.

கண்டுகம் : தூண்களைப் போன்ற கால்களை உடையது.

பாண்டியனின் அரசக் குதிரை, கனவட்டம் எனப்படும். இது கொழுத்தும் எடை கூடியதுமாகும். சோழனுடைய குதிரை, கோரம் (கோடகமாக இருக்கலாம்). சேரனுடையது பாடளம். சிற்றரசர்களுக்கானது கண்டுகம்.

மட்டம் என்பது, உயரம் குறைவானது. தட்டு என்பது நாட்டுப்புற, உள்நாட்டு வகை. இருபதுக்கும் மேற்பட்ட பெயர்கள் குதிரைக்குத் தமிழில் இருந்தாலும், குதிரை உள்நாட்டு விலங்கன்று. முதலை மூன்று வகைப்படும். அவை

இடங்கர், கராம், முதலை எனப்படும்.

இலையின் நான்கு வகைகள் :

இலை : வாழையிலை போன்று சற்றுக் கடினமானது.

தாளி : புல்முனை போன்று கடினமானது.

தோகை : கரும்பின் இலை போல், கீழே தொங்குவது.

ஓலை : தடிப்பானதும் கடினமாதுமான பனை இலை.

பூவின் ஐந்து நிலைகள் :

அரும்பு : மலராத பூ

போது : மலர விருப்பது

மலர் : முழுவதும் மலர்ந்தது

வீ : செடி அல்லது மரத்தினின்றும் விழுந்த பூ

செம்மல் : நிறம் மாறிய மலர்

பழத்தின் மூன்று வகை

பிஞ்சு : முன் காய்

காய் : கனியாதது

கனி, பழம் : கனிந்தது

குறிப்பிட்ட சில பழங்களின் தனிப்பெயர்கள் :

வடு : பச்சை மாங்காய்

மூசு : பசுமையான பலாப்பழம்

கச்சல் : பச்சை நிறமான வாழைப்பழம்

குரும்பை : பச்சையான தென்னை, பனம் பழம்

குறிப்பிட்ட ஒரு சொல் - பல்பொருள் கொண்டவை :

எ.கா. : உடம்பு: ஆன்மாவுடன் குறுங்காலத்துக்கு இணைந்திருப்பது.

1. உடல் : உயிருள்ளவரை ஒருவன் பெற்றிருப்பது.

2. மேல் உடை (இடுப்புக்கு மேலே, கழுத்துக்குக் கீழே)

உடக்கு : இறந்துபட்ட விலங்கின் உடல், செயற்கைக் கட்டமைப்பு, மீ நலிவுற்ற உடல்.

உயிர் நிலை : ஆன்மாவின் இருப்பிடம்

உரு, உருபு, உருவம் : உடலின் அமைப்பு, வடிவம்

ஊன் : தசை

கட்டை : மரக்கட்டையோடு சேர்ந்து எரியூட்டப்படும் உடல்

காயம் : வாழ்நாளைக் காட்ட உறுதித்தன்மைப் பெற, உடல் பெறும் மருந்து. காய் (நிலைத்திடு) - காயம்.

கூடு : பறவைக்குக் கூண்டு போல், ஆன்மாவுக்கு உறை

சட்டம் : சடம், சடலம், சடரம் : உடற்கூடு

சட்டை : ஆன்மா அணிந்திருப்பது

படி : படிமை - படிமம் - படிவம் : 1. துறவு வழி 2. விருப்பம், 3.சிலை

பண்டம் : விற்பனைப் பொருள்

பாண்டம் : மட்கலம் போன்றது

பிண்டம் : பெரும் தசை

பிண்டி - பிடி : பந்து போலாக்கு, கையால் ஒரு வடிவத்தைக் கொடு

புரம் : கோயில்

புறம் : ஒருவனின் வெளிப்பகுதி

மெய் : நிலையற்ற பெயர், அழியும் தன்மையுடைய உடல்

மேல் : உடலின் மேற்பகுதி

மேனி : அழகைக் குறிப்பிக்கும் உடற்பகுதி

யாக்கை : ஏழு வகை தனிம ஆக்கக் கூறுகளால் கட்டமைக்கப்பட்டது.

வடிவு - வடிவம் : உடலின் அமைப்பு. படிவு - வடிவு

உயிரற்ற உடல், விலங்கின் உடல் பற்றிய பெயர்கள் :

உடக்கு : விலங்கின் உள் கூடு

சவம் : சற்று முன் இறந்தவனின் உடல்

பிணம் : கெட்டுப்போன (மனித) உடல்

அழன் - அழமை : முற்றிலும் அழுகிப் போன உடல்

வேறுபட்ட வாயொலிகளின் வேறுபாடுகள் :

| | | |
|---|---|---|
| அசை | : | ஒலியழுத்தம் இட்டுப் பேசுதல் |
| அறை | : | வல்லொலியுடன் பேசுதல் |
| இசை | : | இசையோட்டம் |
| இயம்பு | : | இசையொலிப்புடன் கூடிய பேச்சு |
| உரை | : | தெளிவுபடுத்து, விளக்கு |
| உளறு | : | தொடர்பற்ற பேச்சு |
| ஒன் | : | ஏதோவொன்றைப் பற்றி |
| ஓது | : | முணுமுணு |
| கத்து | : | ஒலியெழுப்பு, உரக்கக் கூவு |
| கரை | : | அழை |
| கழறு | : | எச்சரிக்கை செய் |
| கிள | : | துல்லியமாகக் கூறு |
| கிளட்டு | : | மரபுக் கணக்கைக் கூறு |
| குயிழ், குயிற்று | : | இனிமைக் குரலில் பேசு |
| குழறு | : | நாத்தடுமாறு |
| கூறு | : | படுத்துக் கூறு |
| சாற்று | : | அறிவி |
| செப்பு | : | கேள்விக்கு விடையளி |
| கவில் | : | ஒரு ஒலி அல்லது சொல்லை திரும்பத் திரும்பச் சொல்லப்பழகு |
| நுதல் | : | தொடக்க அறிக்கையிடு |
| நுவல் | : | கற்பி, அறிவுரை கூறு |
| நொதி | : | நடு கதையைக் கூறு |
| பகர் | : | தெரு வணிகனைப் போல், பண்டங்களின் வலைகளை அறிவி |
| பறை | : | கமுக்கத்தை வெளியிடு, அறிவி |
| பன் | : | திரும்பக் கூறு |
| பனவு | : | பாடலைப் புகழ்ந்துரை |
| புகல் | : | ஆர்வமாகக் சிலவற்றைக் கூறு |

| | | |
|---|---|---|
| புலம்பு | : | தனிமையில் பேசிக் கொண்டிரு (பித்தனைப் போல) |
| பேசு | : | ஒரு மொழியில் பேசு |
| பொழி | : | ஆற்றொழுக்காக சொல்வன்மையுடன் பேசு |
| மாறு | : | விடையளி, மறுபடி இணை |
| மிழற்று | : | தேன் போல் இனிக்கும் குரலில் பேசு |
| மொழி | : | முறையான ஒலிப்புடன் பேசு |
| வல | : | கேட்பவர் பிணி க்குமாறு உரையாற்று |
| வலி | : | உண்மையை அழுத்திக் கூறு |
| விடு - தல் | : | சிறிது சிறிதாக வெளிப்படுத்து |

விடு-த்தல் : சிக்கலை அவிழ்

| | | |
|---|---|---|
| விட | : | குறிப்பிட்டுப் பேசு |
| விள்-ளு | : | வெளிக் கொணர், வெளிப்படுத்து |
| விளட்டு | : | விரிவாக முன் வை |
| விளம்பு | : | பொது அறிவிப்பை வெளியிடு |

சொற்களின் ஒற்றுமைத் தன்மை :

| | | |
|---|---|---|
| உரு (குன்றா வினை) | : | 1. கூராக்கு, குறி வை<br>2. தோன்று, நிலைப்பாட்டுக்கு வா<br>3. வெளிப்படுத்து |
| குரு (குன்றா வினை) | : | தோன்று |
| குரும்பை | : | தென்னை, பனை, முன் காய் |
| குருகு | : | இளம் நீர்ப் பறவை |
| குருட்டு | : | ஒத்தத்தன்மை |
| குருண்டு | : | 1. குறி பார்த்துச் சுடு 2. குழந்தை |
| குரு=கரு | : | 1. குழந்தை 2. விலங்கில் இளமை<br>3. கரு 4. முட்டை, நுண்ணுயிர் |
| நுரு | : | குறி பார்த்தல், ஒப்பந்தணம் |
| முரு - முருகு | : | ஒப்பந்தண அகவை, இளைஞன் |
| முருகன் | : | தமிழரின் தொன்மைக் கடவுள், இளமைக் கடவுள் |

சுரு - (மறைந்தது)

துரு - (மறைந்தது)

எண்கள் :

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து, நூறு.

இவ்வெண்கள், உகரத்தில் முடிவதை நோக்குக.

தன்னியப் பகரப் பெயர்கள் :

| | |
|---|---|
| ஒருமை | பன்மை |
| தன்மை | யான் யாம் |
| நான் | நாம் |
| முன்னிலை | நின் நிம் |
| படர்க்கை | தான் தாம் |

அ என்ற ஒலிப்பில் முடியும் பல சொற்கள், மொழியின் வளர்ச்சிக் காலத்தில் அவு, ஐ என்றவாறு சொல்லப்பட்டன எனத் தெரிகிறது.

| எ.கா. : பெயர்ச் சொற்கள் | வினைச் சொற்கள் |
|---|---|
| இர = இரவு | உல = உலவு |
| நில = நிலவு | விர = விரவு |
| மல = மலை | உர = உரை |
| அவ = அவை | வள = வளை |

ஆ இலக்கண அமைவுகள் (பேச்சு வழக்கு)

ஒவ்வொரு மொழியும் ஏதோவொரு இலக்கண முறையை அடிப்படையாக்கிக் கொண்டு உருவாக்கப்பட்டு, பொது மக்களால் வேறு வகையில் மாற்றம் பெறுகிறது. இலக்கண விதிகளும் இலக்கிய வகைகளும், இலக்கண வல்லுநர்களால் உருவாக்கப்படுகின்றன.

உண்மையாகக் கூறின், அனைத்து மொழிகளிலும், மூன்று வகையான சொற்கள் உள்ளன. அவை பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல் எனப்படும். தமிழிலும் அவ்வாறே உள்ளனவென்றாலும், நான்காவதாக உரிச்சொல் என்ற பகுதியும்

உள்ளது. உரிச்சொல் இலக்கணச் சொற்பிரிவு இல்லையென்றாலும், செய்யுளில் சொல்லாட்சித் திறன், மரபுக் கூற்று பயன்பாடு என்றவாறு சொல்லப்பட்டுள்ளன.

மேலே சொல்லப்பட்ட மூன்று சொல் வகையிலும் கீழிருந்து மேலாக அமையப் பெற்றுள்ளன.

எ.கா. : கூ என்பது, இடைச்சொல்லில் ஓர் ஒலியாக உள்ளது. கூ, கூவு என்பன பயனிலையாகப் பயன்படுத்தப்பட்டு வினைச்சொல்லாகிறது.

கூ, கூகை, கூவல் என்பன கூவுகின்ற செயலைச் சுட்டி, பெயர்ச் சொல்லாகிறது.

தனித்த குறிப்புப் பெயர்ச் சொற்களின் உருவாக்கம்.

தன்மை :

முதல் நிலை

| | |
|---|---|
| ஒருமை | பன்மை |
| முதல் வேற்றுமை | வேற்றுமையடி |
| ஏன் (நான்) | என் (என்னுடைய) |

எம் (உளப்பாடில்லா வடிவம்)

எம் (உள வடிவம்)

இரண்டாம் நிலை

| | |
|---|---|
| யான் | என், யாம் |

(உளப்பாடில்லா வடிவம்) எம் (உள வடிவம்)

மூன்றாம் நிலை

நான், நன், நாம் (உளப்பாடில்லா வடிவம்)

நம் (உள வடிவம்)

இயற்கையின் முதல் விதியே, தற்காத்தலாகும். அகம் (egoism) என்பது, உச்ச நிலையில் தோன்றும் மாந்த இயல்பு. ஓரசையான ஏ, மேலே நோக்குதல், மேலெழுதல், உயர்ச்சி, தற்செருக்கு என்றவாறு, முதல் குறிப்புப் பெயர்ச் சொல்லாக அமையும்.

ஓன், என்பது ஒன்று என்பதின் தோற்றமாகும். அது ஓல் என்பதிலிருந்து விரிந்தது. ஒருமைப் பின்னொட்டாகி, உம் என்

வழக்கற்றுப் போன வினையாகி, இணை, கூடு என்றவாறு பன்மைப் பின்னொட்டாயிற்று.

உம் - அம் - அம்பு - அம்பல் (பொட்டு) - அம்பலம் (கூடம்)
உம் - கும் - கும்பு (குன்றா வினை) கூட்டு, (பெயர்) கூட்டம்
கும்பு - கூம்பு (குன்றாவினை) மூடு (மலர்) மொட்டு (பெயர்)
கும் - குமி - குவி (குன்றாவினை) கூட்டு, மூடு (மலரைப் போல) கூட்டத்தின் எண்ணிக்கை, குறையக் குறைய, நெருக்கம் மேலும் மேலும் பெற்று, சுருக்கம் என்ற கருத்து, கூட்டத்தினின்று திரிந்தது.

ஏ+ஓன்+ஏன்; ஏ+உம்=ஏம் யாம் விலகி, நாம் இணைந்தது. வரையறையின் முடிவாக அமைந்தது. முதல் வேற்றுமைகளான ஏன் ஏம் ஆகியவை மறைந்தன. யான், யாம் என்பவை உயர்ந்த இலக்கியச் சொற்களாயின. நன் என்ற வழக்கு தமிழில் மறைந்தது என்றாலும் தெலுங்கு, கன்னட மொழிகளில் காணப்படுகின்றது.

முன்னிலை :

**முதல் நிலை**

| | |
|---|---|
| ஒருமை | பன்மை |
| முதல் வேற்றுமை | வேற்றுமையடி |
| ஊன், உன் | ஊம், உம் |

**இரண்டாம் நிலை**

| | |
|---|---|
| நூன் | நுன்,நூம்,நும் |

மூன்றாம் நிலை

நீன், நின்,நீம், நிம்

முதல் நிலைக்கும் மூன்றாம் நிலைக்கும் இடைப்பட்ட நிலையில், ஊன் - ஊம் என வேற்றுமையடியாகிறது. நும் என்பது செய்யுட் சொல்லாயிற்று.

நீன்=நீம் ஆகிய சொற்கள், இப்போதும், திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள குறிப்பிட்டுள்ள பகுதி தொழிலாளர்களால் பயன்படுத்தப்பட்டாலும், அவர்கள் தமிழர்களாக இல்லை. நீன் என்ற சொல் தமிழ் இலக்கியங்களில் காணப்படவில்லை.

பொதுவான மக்களறிந்த தன்மைப் பெயரடைச் சொல்லாக, முன்னிலைச் சொல்லாக, நீ, நீன் என்பதின் மாற்றாகவும், அதன் பன்மை, அர் சேர்ந்தும் வரும். படர்க்கையில் பன்மைப் பின்னொட்டாக நீயிர், அஐ, உயிராக இணையும். நீவிர் என்பது நீயிர் என்பதின் முரணியச் சொல்லாகும். இவையிரண்டும் நீர் என்றாகி நீம் என்ற பேச்சு வழக்கை தமிழ்நாட்டினின்றும் வெளியேற்றிவிட்டது.

படர்க்கை

முதல் நிலை

ஒருமை பன்மை

தான் (அவன், அவள், அது) தாம் (அவை)

இரண்டாம் நிலை

தான் (அவனுடைய, அவளுடைய, அதனுடைய)

தாம் (அவைகளுடைய)

ஆ, படர்க்கையின் பகரப் பெயர் உயிராக வந்து, சேய்மைப் பெயரடையாயிற்று. தொடக்க காலப் படர்க்கையின், ஒருமை பன்மைப் பெயரடைகள், ஆன், ஆம் என இருந்திருக்கலாம். பின்னர் தான், தாம் என்ற உரை வழக்குச் சொல்லாயின. பின்னர் தான், தாம் ஆகியவை தற்சுட்டுப் பெயரடைகளாயின.

## 23. இரண்டு பன்மை நிலையில் தன் பெயரடைகள்



பண்பாட்டு வளர்ச்சி தேவைப்பட்ட போது மக்கள் தொடர்பான சொற்களும், அவர்களின் செயல்கள் தொடர்பானவைகளும், மேன்மக்கள், இடைமக்கள், கடைமக்கள் என்றவாறு மூன்று நிலையில் அறியப்பட்டன.

தன்மை

முதல் வேற்றுமை வேற்றுமையடி

ஏங்கள் (உளப்பாடில்லா வடிவம்) எங்கள் (உள வடிவம்)

யாங்கள் (உளப்பாடில்லா வடிவம்) எங்கள் (உள வடிவம்)

நாங்கள் (உளப்பாடில்லா வடிவம்) நங்கள் (உள வடிவம்)

முன்னிலை

ஊங்கள்-உங்கள்

நூங்கள்-நுங்கள்

நீங்கள்-நிங்கள்

படர்க்கை

முதல் நிலை

தாங்கள்-தங்கள்

இரண்டாம் நிலை

தாங்கள்-தங்கள்

முதல் வேற்றுமைகளான ஏங்கள், ஊங்கள், நூங்கள் ஆகியவை வழக்கொழிந்தன. பின்னர் யாங்கள், நங்கள் என்பவையும் மறைந்தன.

நிங்கள் மலையாளத்தில் இப்போதும் பயன்பாட்டில் உள்ளது.

யாங்கள் என்பதற்கு மாற்றாக, நாங்கள் என்பது தவறாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. தாங்கள், தங்கள் என்ற முன்னிலைச் சொற்கள், மேன்மை, உயர்வு என்ற பொருளில் மேனிலையிலுள்ளவர்களைக் குறிப்பிடும் சொற்களாக உள்ளன.

**சுட்டடிச் சொற்களின் உருவாக்கம் :**

சேய்மைச் சுட்டொலி ஆ, அடியிற்கண்டபடி நிலைகளில், அண்மைச் சுட்டு, முன் சேய்மைச் சுட்டு ஒலிகளாகி, வியப்பிடைச் சொற்கள், பெயரடைச் சொற்கள், வினையடைச் சொற்கள், பகரப் பெயர்ச் சொற்கள் போன்றவற்றை உருவாக்கின.

ஆம் - ஆன் - (ஆல்) - (ஆள்)

ஆம் - ஆவ - ஆகு ஆல் - ஆடு

பெயரடை முன்னொட்டுகள்

வினையடை : ஆ (அது), ஈ (இது)

எ.கா. : ஆயிடை, அந்த இடம் அல்லது காலம்

ஆன், அங்கே; கின், இங்கே

ஆங்கு, அங்கே; ஈங்கு, இங்கே; ஊங்கு, என் முன்னே

பாகு - பாங்கு (பக்கம்)

ஆண்டு (அங்கே), ஈண்டு (இங்கே)

தோழ் - தோண்டு, பள்ளம் பறி

பகரப் பெயர்ச்சொற்கள் : அன், அந்த இடம்; இன், இந்த இடம், இந்த உலகம்

அது, இது

லகரம் கூட சில நேரங்களில் தகரமாகவும், டகரமாகவும் மாறும்.

எ.கா. : மேல் - மேடு; பல் - படு - பத்து

கலம்பம் - கதம்பம்; சலங்கை - சதங்கை

ஆமெ (அவள் - தெலுங்கு) தமிழில் அம் என்ற படியிலிருந்து வழக்கிழந்தது. பழங்காலத்துத் தமிழர்கள், இயற்கையாகவே நீண்ட ஒலியை எழுப்பினார்கள். மிகவும் பிற்காலத்தில்தான் பல தலைமுறைகள் கடந்த பின்பு, சுருக்கப்பட்டதால், சில சுட்டடிச் சொற்கள், நீளம் குன்றியவைகளாக இல்லை.

எ.கா. : அண்டு (அங்கே), ஈண்டு (இங்கே)

குறுகிய சுட்டடிச் சொற்படிகள் :

அம் - அன் - அல்; அம்=அவ்=அகு; அல் - அது

வியப்பிடைச் சொற்கள் :

அன்னா (அங்கே பார்), இன்னா (இங்கே பார்) பார்வை இடு அந்தா (அங்கே பார்), இந்தா (இங்கே பார்)

அதா, அதோ, இங்கே பார்

இதா, இதோ, இங்கே பார்

பெயரடை முன்னொட்டுகள் :

பெயரடைச் சொற்கள் :

அ (அது); ஈ (இது), உ (இது அல்லது அது)

எ.கா. : அக்காலம், அந்தக் காலம்

அந்த (அது), இந்த (இது)

அன்ன (அதுபோல), இன்ன (இது போல)

வினையடைகள் :

அங்கு (அங்கே); இங்கு (இங்கே), உங்கு (என் முன்)

அதோள் - அதோளி (அங்கே),

இதோள் - இதோளி (இங்கே)

உதோ - உதோளி (என் முன்)

(அம்பு) - அம்பர் (அங்கே), (இம்பு) - இம்பர் (இங்கே)

(உம்பு) - உம்பர் (என் முன்னே, மேலே)

அன்று (அப்பொழுது), இன்று (இப்பொழுது)

அல்லி (கன்னடம் - அங்கே), இல்ல (கன்னடம் - இங்கே)

அல் படிநிலையில் இருந்த தமிழ்ச்சொற்கள், வழக்கிழந்தன.

அவண் (அங்கே), இவண் (இங்கே),

உவண் (என் முன்னே)

இன்னே (இந்நேரத்தில்), இன்னும் (மேலும்),

இன்னி (இதன் பிறகு)

முன்னேறுதலும், மேலேறுதலும் முறையே பறவைகள் பறப்பதற்கும், செடிகொடி மரங்கள் வளர்வதற்கும் துணை செய்கின்றன. முன் சுட்டுச் சொல்லும், மேலெழுதல் என்ற பொருளையே கொண்டிருக்கிறது.

**பெயரடைகள் :**

குமரிக் கண்டத்துத் தமிழர்கள், உயர்ந்த பண்பாட்டையும் மெய்மவியலையும் கொண்ட உயர்ந்த நாகரிக மாந்தராக விளங்கியதால், உயர்ந்த அறிவுத் திறன் காரணமாக, உயிர்களையும், உயிர்கள் அல்லாதவற்றையும், உயர்திணை, அஃறிணை எனப் பிரித்திருந்தனர். முன்னது பகுத்தறிவுள்ள உயிர்களையும் பின்னது அது இல்லாதவற்றையும் குறிக்கும். முறைப்படி அவர்கள் உருவாக்கிய மொழியில், மாந்த இனம், தேவரினம், கடவுள் ஆகியவர் பற்றியே பால் வேறுபாடுகளையும், எண்களையும் வைத்தனர். பகுத்தறிவற்ற உயிர்கள், உயிரற்ற பொருட்கள் ஆகியவை எண்களால் மட்டுமே குறிக்கப்பட்டு, பாலின முறை விடப்பட்டது. இந்த இரண்டு திணைகளும், அவற்றின் சொற்களும், ஐந்து மெய்மவியல் பால் வகைகளாகப் பிரிக்கப்பட்டன. ஆண்பால், பெண்பால், (ஆண் மற்றும் பெண்களில் ஒருமை) பலர்பால் (உயர்வுப் பன்மை) ஒன்றன்பால் (அஃறிணையில் ஒருமை), பலவின்பால் (அஃறிணையில் பன்மை) எனவும், முதல் மூன்று பாலின வகைகளும் உயரினம் எனவும், இறுதி இரண்டும் கீழினம் எனவும் வரையறுக்கப்பட்டன.

எ.கா. : அவன் இவன்

அவள் இவள்

அவர் (அந்த ஆண்கள் பெண்கள்) இவர் (இந்த ஆண்கள், பெண்கள்)

அது இது

அவை இவை

தெலுங்குச் சொற்களான, அவனைக் குறித்த அதனு, அதடு என்பவை, தமிழின் அடு என்ற வேரினின் திரிபுகளாகும்.

அடு - அடியென பின்னொட்டாகத் தமிழில் மாற்றம் பெற்றது போல், தெலுங்கில் பகரப் பெயராக மாற்றம் பெறவில்லை.

எ.கா. : மறதி - மறந்து போதல்

உவன் : என் முன்னால் நிற்பவன்

உவள் : என் முன்னால் நிற்பவள்

உவர் : அண், பெண், அனைவரும் என் முன்னால் நிற்பவர்கள்

உடு : என் முன்னால் நிற்பது

உவை : என் முன்னால் உள்ள பொருட்கள்.

மாற்றுப் பெயராக்க மாற்ற முடிவுகள் அன் என்ற வேரின்றும் ஐந்து பாலின வகைகளைப் பெறுகின்றன.

அனை, அனல், அனர், அனடு அல்லது அன்று, அன, அன் என்ற வேரின் திரிபுகள் பொதுவாக சாரியை என்று உரையாளர்களால் சொல்லப்படுகின்றன.

அவன் அல்லது (அவள்), அவர், அவர்கள் போன்றவை நீ, நீர், நீங்கள் என்பனவற்றுக்கு இணையாக அமைகின்றன. காரணப் பன்மைப் பின்னொட்டு அர், ஆர், இர் என, ஆர் என்ற வினையில் தோன்றி இணைகின்றன.

பன்மைப் பின்னொட்டான கள், கள் என்ற வினையினின்றே உருவாகின்றது. செய்யுளில் கீழானவர்களுக்கு, கள் என்ற பின்னொட்டு பயன்படுத்தப் படுவதில்லை. பேச்சு வழக்கிலும், உரைநடையிலும் ஒருமைப் பன்மைகளில் பின்னொட்டாக, தகவுறு மாந்தருக்குச் சொல்லப்படும்.

**கேள்விகளின் அமைப்பு**

வினாச் சொற்கள், கேள்வி ஒலியான ஏ என்பதிலிருந்து பிரிந்தன.

பெயரடை முன்னொட்டு : ஏ, எது? எந்த?

எ.கா. : ஏயாள், எந்த ஆள்?

வினையடை : ஏன், ஏன்?

பெயர்ச் சொல்லும், குறிப்பு வினைச் சொல்லும் :

ஏது (பெயர்) என்ன? எது?

வினையடை: எப்படி, எவ்வாறு?

மாறுபட்ட நிலை :

பெயரடை முன்னொட்டு : ஏ, யா, எது?

வினையடைகள் : யாங்கு, எங்கே?

யாங்கணம் - யாஞ்ஞனம், எப்படி?

யாண்டு-எங்கே?

**குறுக்க நிலை :**

வியப்படைச் சொற்கள் : எடா, எடோ எண்டோ? எங்கே பார்க்கிறாய்?

**பெயரடை முன்னொட்டு :**

எ.கா. : எவ்வூர்? எந்த ஊர்?

பெயரடை : எந்த, என்ன? எது? எவ்வகையான?

வினையடைகள் : எங்கு? எங்ஙனம் - எஞ்ஞனம்? எப்படி? எவ்வது? எப்படி? என்று, எப்பொழுது? எற்று, என்ன? எவ்வகையான பொருள்?

அடியிற்காணும் வினைப் பெயரடைகள், ஒத்தமைவுள்ள சுட்டுப் பெயர்ச் சொற்களாக, ஐந்து பால் நிலைகளிலும் அமையும்.

| முதல் நிலை (மாற்றப்பட்டது) | இரண்டாம் நிலை (குறுக்கப்பட்டது) | மூன்றாம் நிலை |
|---|---|---|
| ஏவன் யாவன் | எவன் | |
| ஏவள் யாவள் | எவள் | |
| ஏவர் யாவர் | யார் | ஆர் எவர் |
| ஏவது யாவது | யாது | எது |
| ஏவை யாவை | யா | எவை |

சுட்டுப் பெயர்ச் சொற்களான அன்னவன், அன்னவள்,

அன்னவர், இன்னவன், இன்னவள், இன்னவர் ஆகியவை, ஆட்களின் இயற்கைப் பண்பைக் குறிக்கும் போது, வினாப் பெயரடைச் சொற்களான என்னவன், என்னவள், என்னவர் ஆகியவை (பொருத்தமாக எந்நாட்டான், எந்நாட்டாள், எந்நாட்டார்), நாடு, இமை, சில நேரங்களில் சமயத்தையும் குறிக்கின்றன.

வினாவொலியின் தோற்றம் தெளிவாக இல்லை. ஒருக்கால், பண்படாமல் வழக்கற்றுப் போன ஏ என்ற வினை (எழு), தொல் தமிழர்களால் வினாவேராகப் பயன்படுத்தப் பட்டிருக்கலாம். கேள்வியென்பது, தேவையும் ஐயப்பாட்டையும் சார்ந்தது.

ஆங்கிலத்திலும் தமிழிலும் உள்ள வரிகளை ஒப்பு நோக்கவும்.

A question will arise, A question was raised by him

(தமிழில்) ஒரு வினா எழும், ஒரு வினா அவனால் எழுப்பப்பட்டது.

பெயர்ச்சொல் முறை வகைகள்

1. ஒப்பொலிகளும் சார்பற்ற சொற்கள், வேர்கள், கிளைகள், தண்டுகள், பெயர்ச் சொற்களாக, தொன்மைக் காலத்தில் பயன்படுத்தப்பட்டு வந்தன.

எ.கா. : காக்கா, மா (விலங்கு) - இயற்கையான ஒப்பொலிகள்

காக்கை, காகம், மாடு - மாற்றப்பட்ட ஒப்பொலிகள்

உம், ஒரு கதை அல்லது நிகழ்வு பற்றி கேட்டறிந்ததின் வெளிப்பாடு - பெயர்களாக மாறியவை

பே, பே, தன்னச்சத்தின் வெளிப்பாடு

தற்காலத்தில் எந்தச் சொல்லும் ஒலியும், பெயர்ச் சொல்லாகி பயன்பாட்டுக்கு வந்துள்ளது. அதன் வேரைப் பொருத்து அவ்வாறு அவை அமைகின்றன.

1. சுள் - சூட்டைக் குறிக்கும் வேர்

செய் - செயல், சொல் - சொல்

அறி - அறிவு, மாற்று - மாறுதல், தண்டு வினை வகை

2. சடுதி மாற்ற மெய் வினைகள் :

எ.கா. : வெல்- வெற்றி பெறு; வென்- வெற்றி
வேல்,-விரும்பு; வேன்- விருப்பம்

3. உயிரின் நீட்சி பற்றிய வினைகள் :
எ.கா. : உண்- சாப்பிடு; ஊண்- உணவு
படு-துன்புறு; பாடு- துன்பம்

4. மெய்யின் மாற்று வினைகள் :
எ.கா. : ஆடு, விளையாடு, ஆட்டு, விளையாட்டு, நடனம்
கூறு-சொல், கூற்று- விளக்கம், பேச்சு

5. மூக்கொலி வினைகள் :
எ.கா. : வழங்கு - பயன்படுத்து, வழக்கு- பயன்பாடு

6. பின்னொட்டுச் சேர்க்கை :
தொழிற் பெயர்களில் பின்னொட்டுகள் ஐந்து வகையானவை.

அ. சுட்டிக் காட்டும் கூறுகள்
ஆ. இடப்பெயர்களின் விரிவாக்கம்
இ. உறுப்புகளின் பெயர்கள்
ஈ. அளவீடுகளைக் குறிக்கும் பெயர்கள்
உ. பெயர்களின் பண்புகளைக் குறிப்பவை

தொழிற் பெயர்கள் :

எ.கா. : செய் (செய்) + அல் = செயல், செயற்பாடு, வினை -
சுட்டுக் கூறுகள்
ரா (வா) + அவு =வரவு, வருதல்
கட்டு, பிணை, இணை, கட்டு, (கட்டணம்)
கட்டு + இடம் = கட்டிடம், மனை
கட்ட +அடம், கட்டடம், கட்டி முடிக்கப்பட்ட வீடு
கடம்+அணம், கட்டணம், திரை, வரி செலுத்துதல்
வஞ்சி (பழி) + அகம் = வஞ்சகம் - பழிநோக்கு
விடு (விடுத்தல்) + தலை = விடுதலை, வெளியேற்றுதல்,
விடுதலைப் பெறுதல் - இடம் - விரிவு
கல் + கை = கற்கை, கற்றல்
அடை (நம்பிக்கை) + மானம் = அடைமானம்,

ஒத்திக்கு வைத்தல்

வே (சூடுபடுத்து, கொதிக்க வை) + காடு = வேக்காடு,

கொதி நிலை - அளவீட்டுப் பெயர்கள்

காடு, ஒரு தொழிற்பெயர்ச் சொல்,

மிகுதியைக் குறிப்பது.

கடு (உயர்த்து, கடுமை) என்ற சொல்லின் நீட்சி.

தொழிற் பெயர்கள்,

து - மை போன்ற பின்னொட்டுகளின் விளக்கம் :

போனது, சென்றது என்ற இறந்தகாலம்

போகின்றது, நடந்து கொண்டிருக்கும் நிகழ்காலம்

போவது, செல்வதைக் குறிக்கும் எதிர்காலம் -

சுட்டுக் கூறுகள்

போனமை, சென்றது பற்றிய இறந்தகாலம்

போகின்றமை, செல்கின்ற நிகழ்காலம் - பண்புக் கூறுகள்

மை என்பது நீர் என்பதின் ஒப்புடை கருத்து. பண்பு, இயற்கையைக் குறிப்பது.

செயற் பெயர்கள் : தொழிற் பெயரின் பின்னொட்டுகள் தல் என வருவது ஒரு விதி.

எ.கா. : செய்தல், நடத்தல்

பெயரடைகளுக்கான பின்னொட்டுச் சேர்க்கை

கருத்துப் பெயர்ச் சொற்கள் :

எ.கா. : நல் (நல்ல) + மை = நன்மை, நல்லவை

நல் + அம் = நலம் , நல்வாழ்வு

வினைக் கூறுகளுக்கான கூடுதல் பின்னொட்டுகள் :

பெயர்களின் முகவாண்மை :

கொல் + இ = கொல்லி

வெட்டு + இ = வெட்டி

ஒருமைப் பின்னொட்டு இ, மூன்று பால் நிலைகளுக்கும் பொதுவானது. முற்காலங்களில் இவன், இவள், இது எனப் பெயரடையாகச் சொல்லப்பட்டன.

பெயர்ச் சொற்களுக்கான பால் தொடர்பான பின்னொட்டுச்

சேர்க்கைகள் :

கலப்புப் பெயர்ச் சொற்கள் அல்லது குறிப்பு வினைகள் :

எ.கா. : ஊரன், உரான், உள்ளூர் ஆள் (ஆண்பால், ஒருமை)

ஊரள், ஊராள், உள்ளூர்ப் பெண் (பெண்பால் ஒருமை)

ஊரர், ஊரார், உள்ளூர் மக்கள் (பலர்பால் பன்மை)

கண்ணன், கண்ணான், கண் அல்லது கண்களையுடையவன்.

கண்ணள், கண்ணாள், கன்னி (பெண்பால்)

கண்ணர், கண்ணார், (மேலதே, பலர்பால்)

கண்ணி, கண்களையுடையவள்

கண்ணிகள், கண்களையுடையவர்கள்

வீட்டுக்காரன், வீட்டுக்கு உரியவன்

வீட்டுக் காரி, வீட்டுக்கு உரியவள்

வீட்டுக்காரர், வீட்டுக்கு உரியவர்

ஒருமைப் பின்னொட்டான இ, கலப்புப் பெயர்களாக, பொதுவில், பெண்பாலுக்கும் பொதுப்பாலுக்கும் உரியது.

அனைத்து உயர்வுப் பன்மைச் சொற்களும், ஆண்பாலுக்கும், பலர்பாலுக்கும் பயன்படுத்தக் கூடியவை. பன்மைப் பின்னொட்டான அர் அல்லது ஆர், தன்மையில், கண்ணியர், வீட்டுக்காரியர் என்று உயர்த்திச் சொல்லப்படும். பன்மைப் பின்னொட்டான கள், அஃறிணைக்குப் பொருந்தாது. அது, பகுத்தறியும் மாந்த இனத்துக்குரியது. உயர்ந்தோரைப் பணிந்து விளிக்கும் பின்னொட்டாகும்.

வேர்ச்சொற்கள், இடைச்சொற்களின் இணைப்புகளால் வேறுபடுதல் திரிபெயர்ச் சொற்கள் :

எ.கா. : பள் - கீழ், பள்ளமான, பள்ளம் - கீழான, பள்ளமான நிலம், தாழ்வு

பள்ளை - குண்டான கட்டையான ஆள் அல்லது விலங்கு

பல தொழிற் பெயர்கள், செயப்படு பொருளை விளக்குவன. அவை, திரிபுப் பெயர்ச் சொற்கள் அல்லது வினைத் திரிபுகள் என்று டாக்டர் கால்டு வெல் கூறுகிறார்.

எ.கா. : பாடு (பாட்டிசைத்தல்) - பாட்டு (பாட்டு)

பெள் (விருப்பம், காதல்) பெண் (பெண் அல்லது விலங்கில் பெண்)

மாற்றுப் பெயர்ப் பின்னொட்டுச் சேர்க்கை அல்லது சுட்டுப் பகரப் பெயர் :

வினையாலணையும் பெயர்

எ.கா. : வந்த+ஆன் - வந்தான், வந்த அவன்

வந்த+அவன்-வந்தவன்

மேற்கண்ட இரண்டு நிலைகளில் முன்னது முடிவுற்ற வினையைக் கொண்டது; தன்மை, முன்னிலை, படர்க்கையில் பயன்படுத்தப்படுவது, பின்னது படர்க்கையில் மட்டும் பயன்படுத்தப்படுவது

வந்தேன், நான் வந்தேன்

வந்தாய், நீ வந்தாய்

வந்தான் என்பதில் உள்ள ஆன் என்ற பின்னொட்டு, வந்தவன் என்பதிலுள்ள அவன் என்பதற்கு மாறுபட்டது. அன் என்ற பின்னொட்டு, ஆண்பால் ஒருமையாகும். ஆன் என்பதின் குறுக்கம் ஆகி, ஆணையுணர்த்தும்.

சொல்லாக்க முறை

1. பயன்பாடு

சில ஒப்பொலிகள், ஒப்பொலிச் சொற்களாகி, வினையாகப் பயன்படுகின்றன.

எ.கா. : கூ, கூவு

சல சல, காய்ந்த இலைகள், ஓடும் நீர் எழுப்பும் ஒலிகள்

2. ஒப்பொலிகளின் மாற்றம் :

எ.கா. : செறு - சினம் கொள்

துப்பு - உமிழ்

3. வினைகளில் என் சேர்க்கை

எ.கா. : இல்+என் = இல்லென்

வெள்+என் =வெள்ளென், வெண்மையுறு, விடி

4. உ பற்றிய தெள்ளுரை :

எ.கா. : பல் (பர்) - பரு, குண்டாகு

வெள் - வெளு, வெள்ளையாக்கு

5. உயிர் வேரின் நீட்சி :

எ.கா. : கண் - காண், பார், தேடு

6. இடைச் சொற்களின் இணைப்பு :

எ.கா. : பல் - பல்கு, எண்ணிக்கையைக் கூட்டு

7. கூடுதல் உயிர்கள், பெயர்ச் சொற்களாக :

எ.கா. : கள் (கேடற்றது) + இ = களி, மகிழ்ந்திரு

தேன்+இ - தேனி, சுவைப்படு

8. துணை உயிர்கள், பெயர்ச் சொற்களாக :

எ.கா. : செவி (காது) + உறு = செவியுறு, கேள்

புறம் (வெளியே) + படு = புறப்படு, வெளியேறு

நீர் (தண்ணீர்) + ஆடு = நீராடு, குளி

9. தொழிற் பெயர்கள், கருப்பொருளாக :

எ.கா. : நகு + அய் = நகை, சிரிப்பு, சிரி (குன்றா வினை)

ஏவல் வினை

1. நேராணை :

எ.கா. : செய் (நீசெய்), ஒருமை

செய்யும் (நீங்கள் செய்யுங்கள்), பன்மை

செய்யுங்கள் (நீங்கள் செய்யுங்கள்), பன்மை

உம் என்ற பின்னொட்டு, ஏவல் பன்மை வினையில், ஊம் என்றிருந்து வழக்கிழந்தது. எளிய பன்மை, நிறைவுற்ற பன்மையாக, இலக்கிய வழக்கில், பயன்படுத்தப்படுகின்றது. பேச்சு வழக்கில், உயர்வுப் பன்மையாக உள்ளது. இதே பேச்சு வழக்கில் கூட்டுப் பன்மை பெரியோர், உயர்ந்தோரைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படுகிறது. ஒருமை, தமக்குக் கீழானவர்களை அழைக்கச் சொல்லப்படும்.

2. மறைமுக ஆணை அல்லது இசைவு :

துணை வினையான ஒட்டு, பின்னொட்டாக, வினைச் சொல் பாங்கில் பயன்படுத்தப்படும்.

எ.கா. : செய்ய + ஒட்டு = செய்யொட்டு - செய்யட்டு, அவன், அவள் செய்யட்டும். (ஒருமை)

செய்ய+ஒட்டு+உம் = செய்யொட்டும் - செய்யட்டும் (மேலதே).

ஆர்வப் பின்னொட்டு

என் அல்லது ஏ, ஏவல் வினையில் :

எ.கா. : செய்யேன், தயை கூர்ந்து செய்யலாமே.

செய்யட்டுமே, (மேலதே) விலக்கு வினை

அரிது என்ற வினை முற்று, படர்க்கை ஒருமை, அரு என்ற சொல்லின் திரிபாகும். செயவென் எச்சத்தில், இது பின்னொட்டாகும் போது, சிக்கலாகிறது.

செய்ய + அரிது = செய்யரிது, செய்யாதே

இச்சொல், தற்போது கேரளத்தில் பயன்படுத்தப்படுகின்றது.

செய்ய + அரிது + ஈ = செய்யாதீ - செய்யாதி, செய்யாதே (ஒருமை)

செய்யாதி - செய்யாதே - செய்யாதை, செய்யாதே (ஒருமை)

செய்யாதே + உம் = செய்யாதேயயும் (பன்மை)

செய்யாதே + உம் + கொள் =செய்யாதேயுங்கள் (பன்மை)

செய்ய + அரிது + இர் = செய்யாதிர் (பன்மை)

செய்யாதீர்கள் (கூட்டுப்பன்மை)

ஈ, ஈர் ஆகியவை, நீ, நீர் என்பனவற்றின் பின்னொட்டுகளாகும்.

முற்று வினை

முதல் நிலை

| இறந்த காலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|
| செய்து | செய்கின்று | செய்யும் |
| ஓடி | ஓடுகின்று | ஓடும் |
| போயி | போய் | போய் கின்று போகும் |

மேற்கண்ட வினைகள் ஆள், பால் அனைத்துக்கும் பொதுவானவை. இறந்தகால வினை வினை முற்றாகவும், எச்சமாகவும் பயன்படும்.

செய்து என்ற சொல்லின் து என்ற சேர்க்கை, அது என்ற சேய்மைச் சுட்டுப் பகரப் பெயரினின்றும் பிரிந்தது. இது

ஒருமையாகவும், வினைக் கருப்பொருளாகவும் அறியப்படும். சேய்மைச் சுட்டு என்பது, தொலைவை மட்டுமல்லாது, காலத்தையும் குறிக்கும்.

எ.கா. : அவ்வூர் - அந்த ஊர்

அக்காலம் - கடந்த காலம்

து என்பது, து, று, ற்று எனவும் மாறும்.

எ.கா. : கொள்+து = கொண்டு, பெற்று

கேள்+து = கேட்டு

நில்+து = நின்று

வில்+து = விற்று

ஓடி, இ என்ற சேர்க்கையால், அண்மைச் சுட்டுப் பகரப் பெயராகவும், பின்னொட்டாகவும், வினைக் கருப்பொருளாகவும் வரும்.

செய்கின்று என்பது, கின்று என்ற பின்னொட்டால், வினைக் கருப்பொருளாயிற்று. கின்று என்பது கடந்த கால முற்றுவினை. இது இல் என்ற கருப்பொருளின் நீட்சியாகும்.

மாற்றுப் பெயர் முடிப்புச் சேர்க்கையும், பழமையான பால் வகைப் பின்னொட்டுகளும் :

எ.கா. : இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம்

செய்தான் செய்கின்றான் செய்வான்

(ஓடியான்) ஓடினான் ஓடுகின்றான் ஓடுவான்

செய்யும் + ஆன் = (செய்யுமான்) - செய்யுவான் - செய்வான்

உண்ணும் + ஆன் = (உண்ணுமான்) - உண்ணுவான் - உண்பான்

கொடுக்கும்+ஆன் = (கொடுக்குமான்) - கொடுக்குவான் (கொடுக்குபான்) - கொடுப்பான்

புதிய தோற்றங்களுக்குப் பிறகு, பழையவை, குறிப்பிட்ட ஆன், பால், எண்ணிக்கை ஆகியவை கழிக்கப்பட்டு, இறந்த காலம், எச்சமாக உருவாயிற்று.

(சொல்லியான்) - சொல்லினான் - சொன்னான்

(போயியான்) - போயினான், போயான் - போனான்

ஆயியான் - ஆயினான் - ஆயான் - ஆனான்

பிறவினை வடிவங்கள்

1. இறுதி மெய்யின் கருப்பொருள் மீள் இரட்டிப்பு :

எ.கா. : ஓடு - (விரைந்து செல்) - ஓட்டு, இயக்கு

ஏறு (மேலேற்றம்) - ஏற்று,

மேலேற்று, சுமையை மேலே தூக்கு

பெருகு (பெருக்கம்) - பெருக்கு, பெருகத் தூண்டு,

முயல்-பல் பொருளாக்கு

போகு - போக்கு

2. மூக்கொலிக் கருப்பொருளை வன்மைப்படுத்தல் :

நீங்கு (விலகு) - நீக்கு, விலக்கு

திருந்து (செம்மையுறு) - திருத்து, பண்படுத்து

எழும்பு (எழு) - எழுப்பு, எழுப்பிவிடு

3. துணை வினையான ஈ, வினையெச்சமாதல்

எ.கா. : செய்யா+ஈ = செய்யவீ - செய்வி, செய்யத்தூண்டு

உண்ணா+ஈ = உண்ணவி - உண்பி, உண்ணச் செய்

படிக்க + ஈ = படிக்கவீ - படிப்பி, கற்கத் தூண்டு

4. துணை வினைச் சேர்க்கை

ஒத்து - ஓட்டு, இணை

எ.கா. : வாழ+ஒத்து (வாழவொத்து) = வாழ்த்து, வாழ்கவெனல்

நடக்க+ஒத்து- (நடக்கவொத்து) = நடக்கொத்து - நடத்து, வழிப்படுத்து

து - சு எனவும், று எனவும் இணைந்து திரிதல்

எ.கா. : பாய்த்து - பாய்ச்சு, நீர் பாய்ச்சு

நீல் (நீட்டு)+து = நீட்டு

காண் (பார்)+து = காட்டு

பயல் (பழகு) - பயிற்று, பழக்கு

தின் - (உண்ணு) - திற்று - தீற்று, உணவளி

ஓரசை, தகரம் அல்லது நகரத்தில் மறைதல் :

எ.கா. : பிள் (வெடிப்பு) + து = பிடு, பிளவுபடுத்து

நில்+து-நிறு, எடை போடு

செயப்பாட்டு வினை

செயப்பாட்டு வினையென்பது, படு என்ற துணை வினையின் இணைப்பால் அறியப்படுவது. செயவென் எச்சம் மற்றும் சில தொழிற்பெயர்களுடன் தொடர்புடையது. இவ்விரண்டில், பின்னது பொதுவானது.

எ.கா. : செய்யப்படு (செயவென் எச்சம்)

கட்டுப்படு (தொழிற்பெயர்)

கொலைப்படு (தொழிற்பெயர்)

எச்ச வினைகள், பின்னொட்டாக, பெறு என்ற சொல்லால், பொருளைப் பெறுகின்றன.

எ.கா. : அளிக்கப்பெறு

செயப்பாட்டுக் கருத்து, அவ்வப்போது தமிழில் உணர்த்தப்படுகின்றன. செயப்படு பொருள் குன்றாவினை அடியிற்கண்டவாறு அறியப்படும்.

புலியடித்துச் செத்தான் : ஒரு புலியால் கொல்லப்பட்டான். புலி அவனைக் கொன்றது; அவன் இறந்தான்.

தற்சுட்டு வினைச்சொல்

தற்சுட்டு வினை, கொல் என்ற துணை வினையை இணைப்பதால், இறந்தகால வினையெச்சமாகிறது.

செய்து கொள், உனக்கென செய்து கொள்,

அடித்துக் கொண்டான், தன்னையே அடித்துக் கொண்டான்.

சண்டையிட்டுக் கொண்டார்கள், அவர்களுக்குள் சண்டை போட்டுக் கொண்டனர்.

எச்ச வினை

இறந்த கால வினையெச்சம் :

ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது.

நிகழ்கால வினையெச்சம் :

கொண்டு என்ற பின்னொட்டாய் அமைகிறது. இது,

இறந்த கால துணை வினையான கொல் என்பதின் நீட்சியாகும்.

செய்து கொண்டு

செயவென் எச்சத்தை, தவறாகப் பார்த்து புரிந்து கொண்டுள்ளனர். உண்மையில் இது, எதிர்கால வினையெச்சமாகும்.

எதிர்கால வினையெச்சம் : இது பல்வேறு நிலைகளில் அறியப்படும்.

1. செயவென் எச்சம் :

எ.கா. : செய்ய

2. தொழிற்பெயர் :

செய்தற்கு (செய்ய) செய்வதற்கு

3. படி என்ற எதிர்கால வினை முற்று அல்லது ஆறு

செய்யும்படி

செய்யுமாறு

4. எதிர்கால வினை முற்று, ஆண்பால், ஒருமை

செய்வான்

நடப்பான்

பகரம், சில இடங்களில், ககரமாகவும் மாறும்

எ.கா. : நடக்கான்

கூ கீழினை வினைச் சொல் - பாங்கு

1. இறந்த கால வினையெச்சம் - ஆல்

எ.கா. : செய்து + ஆல் - செய்தால்

போய் + ஆல் - போயால் - போனால்

போயி + ஆல் - போயியால் - போயினால்

சொல்லி + ஆல் - சொல்லினாள் - சொன்னாள்

போயால், சொல்லியால் போன்றவை, தற்காலத்தில் தமிழில் வழக்கிழந்து போனாலும், மலையாளத்தில் இப்போதும் வழக்கில் உள்ளன.

2. கால் என்ற இறந்தகால வினையெச்சம் (நேரம், காலம்)

எ.கா. : செய்த + கால் - செய்தக் கால்

தகரம் என்ற மெய் இணைக்கப்படுகிறது.

செயவென் எச்சத் தோற்றம்

அல் என்ற பின்னொட்டு, தொழிற்பெயரில் இணைகிறது.

எ.கா. : செய்யல் வேண்டும், செய்ய வேண்டும். (கண்டிப்பு)

கொடுக்கல் - கொடுக்க

வியங்கோள் வினை

வியங்கோள் வினை, வினையெச்சத்திலிருந்து பிரிந்து, மூன்று நிலைகள் மற்றும் பால் வேறுபாடுகளுக்கும் பொதுவாக அமைகின்றது.

1. அ என்ற பின்னொட்டு, செய்ய என்ற வினையிலிருந்து தொடர் பன்மையானது.

எ.கா. : வாழ

2. க என்ற பின்னொட்டும், நடக்க, படிக்க என்றவாறு தொடர்பற்றதாகிறது.

எ.கா. : வாழ்க

3. இயல் என்ற துணைத் தொழிற் பெயரிலிருந்து வந்த இ என்ற பின்னொட்டு, இயல் - இயல் - இய - இ, ஈயல், ஈயர் என்றானது.

எ.கா. : வாழி

வியங்கோள் வினை, அமைப்பொழுங்கை உணர்த்தும்.

எ.கா. : வருக

ஆற்றல் வினைச்சொல் - பாங்கு

துணை வினைச் சொற்களின் பொதுவான எதிர்கால வினை முற்று, கூடு, முடி, படு ஆகியவை, வினையெச்சத்திற்குப் பின்னொட்டாக வைக்கப்பட்டும், படு என்பது எதிர்வினையாக நிகழ் காலத்தில் வரும்.

எ.கா. : செய்யக் கூடும்

எழுத முடியும்

என்னால் எழுந்திருக்கப் படவில்லை

கில், மாட்டு, மாள் என்ற துணை வினையின் இணைவுகள், வினையெச்சத்தின் பின்னொட்டுகளாக அறியப்படும்.

மாட்டு என்பது எதிர்காலத்தில் பயன்படுத்தப்படும்.

எ.கா. : செய்ய கின்றன் - என்னால் முடிந்தது
செய்ய கிற்கின்றேன் - என்னால் முடிகின்றது
செய்ய கிற்பேன் - என்னால் முடியும்
கில் என்பது, பேச்சு வழக்கில் மறைந்து போகின்றது.
செய்ய மாட்டுவேன் - என்னால் செய்ய முடியும்.

காலங்கள் :

இறந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் என தமிழில் முக்காலங்கள் உள்ளன. இவை ஆங்கிலத்தில் ஒவ்வொன்றும் வரையறையற்ற காலம், தொடர் காலம், வினை முடிவுற்றுக் காலம், வினை முடிவுற்றுத் தொடர் காலம் என அறியப்படும்.

எ.கா. : செய்கின்றேன் (வரையறையற்ற காலம்)
செய்து கொண்டிருக்கின்றேன் (தொடர் காலம்)
செய்திருக்கிறேன் (வினை முடிவுற்றக் காலம்)
செய்து கொண்டிருக்கின்றேன் (வினைமுடிவுற்றுத் தொடர் காலம்)

கின்று என்பது, கிறு என பேச்சு வழக்கில் சொல்லப்படும்.

மேற்கண்ட மூன்று காலங்களுக்கான பேச்சு வழக்கு, அறிந்த காலம் தொட்டு, இன்று வரை நடைமுறையில் உள்ளன. பழங்காலத்து இலக்கண முறைகளில் சில, சிக்கலான காலங்களைக் காட்டுவன, விடப்பட்டாலும், செய்யுட்களில் அவை பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆனாலும் அவற்றில் பழந்தமிழ்நாட்டின் பேச்சு வழக்குகளும், மரபுகளும் கூட இடம் பெறவில்லை. நிகண்டுகளிலும், உரைகளிலும் கூட அவை விடப்பட்டுள்ளன.

எதிர்மறை வினை

1. முற்றுவினை, இல்லை என்றவாறு அறியப்படும்.
எ.கா. : வந்தானில்லை - வரவில்லை.
வருகின்றானில்லை - இப்போது வரவில்லை.
வருவானில்லை - வர மாட்டான்.
2. இல்லையில் இணையும் தொழிற்பெயர் - து -
வந்ததில்லை (இறந்தகாலம்)

வருகின்றதில்லை (நிகழ்காலம்)

வருவதில்லை (எதிர்காலம்)

இவை அனைத்து இனத்துக்கும், பாலினத்தும் பொருந்தும்.

3. இல்லையில் முடியும் வினையெச்சம்

எ.கா. : வரவில்லை

இதுவும் மேற்கண்ட அனைத்துக்கும் பொருந்தும்.

4. இணையும் பாங்குள்ள பண்படாவினை - அரு - அரிதான, சிக்கலான பின்னொட்டு

எ.கா. : செய்யறியேன் - செய்யேன்

செய்யறியாய் - செய்யாய்

செய்யறியான் - செய்யான்

ஆற்றல் வினைச் சொற் பாங்கில் அறியப்படும் வினைகள், எதிர்ப்பையும் தடுப்பையும் கொண்டு எதிர்மறையான கருத்தைத் தெரிவிப்பன.

எ.கா. : போகக் கூடாது

வரப்படாது

செய்ய முடியாது

தர மாட்டேன்

வினையடைப் பாங்கு

1. வினையெச்சங்கள் : ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளன.

2. ஆக, ஆய் என்ற பெயர்ச் சொற்களின் பின்னொட்டுகள்

எ.கா. : விரைவு - விரைவாக

நன்று - நன்றாய்

ஆக என்பது, ஆடு என்பதின் வினையெச்சமாகும்.

ஆய் என்பது, ஆ என்பதின் எச்சமாகும்.

3. வினையெச்சம் சில துணை வினைகளோடு பெயரில் இணையும்.

எ.கா. : காலம் - காலம் பெற

வளம் - வளம்பட

4. அ என்ற வினையெச்சப் பின்னொட்டு, பண்படா பெயரடையாகும்.

எ.கா. : மெல் - மெல்ல

5. இணைப் பெயர், பெயரடையாக :

எ.கா. : சிறிது - (பெரிது), சிறிய (பெரிய)

6. சுட்டுச் சொற்கள் : எ.கா. : அங்கு, அன்று

7. வினாச் சொற்கள் : எ.கா. : எங்கு? என்று?

8. சிறக்கச் சரியானது, பெயரடைப் பாங்கு

1. ஒத்த எச்சங்கள்

சேய்மை இடைச் சுட்டு, அ பழங்காலத்து இறந்த நிகழ் காலங்களில் முற்று வினையாக இணைக்கப்பட்டது.

எ.கா. : போன (இறந்த காலம்)

போகின்ற (நிகழ்காலம்)

2. முற்று வினையின் எதிர்காலம்

எ.கா. : போகும்

3. பெயரடையில் பண்படா வேர்கள்

எ.கா. : நல், வெல்

4. சேய்மை இடைச் சுட்டு அ, பண்படா வேர்களுடன் இணைப்பு

எ.கா. : நல்ல

5. சுட்டுப்படி நிலைகள்

எ.கா. : ஆ - அ, அது, அவை

ஈ - இ, இது, இவை

6. சுட்டுச் சொற்கள்

எ.கா. : அந்த - இந்த

7. வினாப்படி நிலைகள்

எ.கா. : யா - எது?

8. வினாச் சொற்கள்

எ.கா. : எந்த - எது?

9. வழக்கிழந்த பெயர்ச்சொற்கள்

எ.கா. : நம், மரத்து

10. மரபு நிலை

எ.கா. : எனது, உங்களுடைய

11. பெயர்கள், பெயரடைகளாக

எ.கா. : பொன் (மோதிரம்)

இடைச் சொல்

1. வியப்பிடைச் சொல் :

ஒலிகள் : எ.கா. : ஆ - ஓ - ஆவா - ஆகா

சொற்கள் : எ.கா. : அய்யோ (அய்யன் என்ற விளிவேற்றுமைச் சொல், அப்பா)

அம்மா (அம்ம என்பதின் வி.வே., தாய் ) வியப்பொலிச் சொல்

2. வேற்றுமை நிகழ்வு

இரண்டாம் வேற்றுமை : அய் - ஆய், ஆ என்ற வினையின் இறந்தகால எச்சம். பெயரடைப் பின்னொட்டு

எ.கா. : பெட்டியாய்ச் செய்தான் - பெட்டியைச் செய்தான்

ஒப்புமை : ஆயினா (தமிழ்) - அய்ன (தெலுங்கு), கடந்தகால பெயரெச்சம், ஆ என்ற வினையினின்றும் நீண்டது.

கருவி வேற்றுமை, உம்மை நிகழ்வு, இல் - ஆல் - ஆன்

இடப்பொருள், வேற்றுமை முடிவில், இல் என்பது, கருவி வேற்றுமைக் கருத்தாக, பேச்சு வழக்கில் வரும்.

எ.கா. : செருப்பில் அடி - செருப்பால் அடி

(உடு) - உடன், (உடு) - ஒடு - ஓடு

நான்காம் வேற்றுமை : கு - ஒக்க என்பதன் திரிபு, ஓ என்பதன் வினையெச்சம், உக்கு என்பது, உரு என்பதன் இறந்தகால வினையெச்சம், செயப்படு பொருள் குன்றாவினை என்ற கருத்தில் கொடை வேற்றுமை என்ற தமிழ்ப் பெயர், ஆங்கிலத்தில், Dative case Date - Datives (Latin) - to give.

உக்கு கோடு என்பது, தாரை வார் (வலது கையால் நீர்வார்த்து கொடையளிப்பது) என்று பொருள்படும்.

நீங்கள் பொருள் நிகழ்வு : இல் - இன், இல் என்பது இடப்பொருளுருபு. இலிருந்து அல்லது இல் நின்று என்பதன் சுருக்கமாகும்.

மரபு நிகழ்வு : சேய்மை இடச்சுட்டு, பெயரடை

ஒருமையாக, மரபு நிகழ்வில் பயன்படுத்தப்படும்.

அ என்ற சேய்மைச் சுட்டு, பெயரடைப் பன்மையாக, பன்மைப் பின்னொட்டில், மரபு நிகழ்வில் வரும்.

இடம் பொருள் உருபு : இடத்தைக் குறித்த அனைத்துத் தமிழ்ச் சொற்களும் பொதுவாக, இடப்பொருள் உருபாகவே முடியும். இவற்றில் இல் என்பது அவற்றில் பொதுவானது. (இல் - தொடக்கப் பொருள், வீடு)

ஒப்புகை : In - Inn (house) - English

3. இடைச் சொற்கள் :

கரம், காரம், காண், ஏனம் முதலியன

எ.கா. : அகரம் - அ என்ற எழுத்து

ஆகாரம் - ஆ என்ற எழுத்து

4. இணைப்பு இடைச் சொற்கள் : உம், ஏ முதலியன

எ.கா. : அறமும் பொருளும்

ஒன்றே கால்

உம் என்பது பண்படா வினை, கூட்டுதல், கூட்டு

ஏ என்பது பண்படா வினை, ஏய் என்றவாறு

5. தொடரியல் வினாக்கள் : ஆ - ஓ

ஆ என்பது, வா என்ற சொல்லின் திரிபு. எது? என்ன?

ஒப்புகை : யார் - ஆர்

ஆ - ஓ பெரியார், பெரியோர்

6. வல்லழுத்த இடைச் சொற்கள் : தான் - ஏ

தான் என்பது தற்சுட்டுப் பெயர் (ஒருமை), ஏ என்பது பண்படா வேர், உயர்வைக் குறிப்பது.

7. சொல்லுருத் திரிபுச் சாரியை

(இல்) - இன் - அன், அட்டு - அற்று, இட்டு - இற்று முதலியன.

இன் என்பது மரபுப் பின்னொட்டு, தவறாகப் பயன்படுத்தப்பட்டதால், தன் வலிமையை இழந்துவிட்டது. அட்டு - இட்டு, அடு - இடு இவற்றின் மாறுபாடுகள், இறுதி வல்லினத்தில் மீள் இரட்டிப்பு ஆகும்.

8. இணைப்புச் சாரியை : அம் - ஆம் முதலியன

எ.கா. : புளியம் பழம்

மண்ணாங் கட்டி

அம் என்பது, இன் என்ற சொல்லின் திரிபு, மரபுப் பின்னொட்டு

ஆ, கம் என்பதன் இடைக் குறை

உள்ளங்கை, உள்+அங்கை (அகன்கை)

9. எண்ணு முறைப் பின்னொட்டு :

ஆகம் என்பதன் இடைக்குறை ஆம், ஆ என்ற வினையிலிருந்து ஆவது என்ற எதிர்கால பங்கேற்புப் பெயர் திரிந்தது.

10. இசைவை வலியுறுத்தும் தனிச் சொற்கள் :

எ.கா. : ஆம் (ஆகம் என்பதன் இடைக்குறை)

சரி (சார் என்பதன் திரிபு)

11. அசைச் சொற்கள்

வந்து (இறந்தாக வினையெச்சம் என வா என்பதிலிருந்து)

போய் (மேலே சொல்லப்பட்டதான போ என்பதிலிருந்து)

12. சந்திப்புகள் அல்லது பிணைப்புகள்

திரள் பிணைப்புகள் :

எ.கா. : என்று (இறந்தகால வினையெச்சமான, என் என்ற வினையிலிருந்து)

என (மேலே சொல்லப்பட்டது போன்றது)

மறு பிணைப்பு (அ) சந்திப்புச் சொற்கள் :

எ.கா. : ஆனால், (ஆ என்ற வினையின் கீழிணைப்பு)

இரு நாளும், (இரு என்ற வினையின் கீழிணைப்பு, உம் சேர்ந்தது)

மாற்றுப் பிணைப்புகள் :

எ.கா. : அல்லது, (பகா ஒருமைப் பெயர், அல் என்பதிலிருந்து)

இல்லாவிட்டால், (விட்டால், விடு என்பதன்

கீழிணைப்பு, இல்லா என்ற பின்னொட்டைக் கொண்டிருப்பது)

**உய்த்துணர் இணைப்புச் சொற்கள் :**

எ.கா. : ஆகையல், தொழிற்பெயரான ஆகை என்பதன் கருப்பொருள். எனவே (அழுத்தம் குறைந்து, என என்பதுடன் ஏ இணைந்தது).

13. தனி ஆள் முடிப்பு :

தன்மை : ஏன் - என் - அன் - அல் (ஒருமை)

ஏம் - எம் - அம் - ஆம் (பன்மை)

உம் என்ற பின்னொட்டு, பழைய இறந்தகால வினைமுற்றான செய்தும் என்பதிலிருந்து விடுவிக்கப்பட்டது.

முன்னிலை : ஈ - ஏ - அய் - ஆய்

ஈ - இ - ஒருமை

உம் - உங்கள்

ஈம் - இம்

ஈர் - இர் - பன்மை

14. ஆம் - பல்வகைப் பயன்பாடுகள் (ஆகம் என்பதின் இடைக்குறை)

பெரும் பின்னொட்டாக.

1. ஆம், தொழிற்பெயர், அல் என்ற பின்னொட்டுடன் இணைந்து இசைவை வலியுறுத்தும்.

எ.கா. : போகலாம்

2. ஆன் என்பது முற்று வினையாகி, ஐயப்பாட்டைத் தரும்.

எ.கா. : வந்தானாம்

ஆம் பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது.

## 24. தமிழ் நெடுங்கணக்கு, தமிழ் இலக்கியப் பண்பாட்டு வளர்ச்சி



சரியானச் சான்றுகள் எதிர்பார்க்கப்படும் நிலைகள் இருந்தாலும், தற்போதுள்ள தமிழ் மொழியின் நெடுங்கணக்கு ஒலிப்புகள், மூன்று பழைய எழுத்து முறைகளைத் தொடர்ந்து வந்துள்ளது. படவெழுத்து முறை, கருத்தெழுத்து முறை, சொல்லெழுத்து முறை என, அவை விரிந்துள்ளன.

### தமிழ் நெடுங்கணக்கின் ஆக்கம்

தமிழின் வரிவடிவ இயல், 12 பிரிவுகளில் அடங்கியுள்ளது. எழுத்துகளைப் பொருத்தவரை, எண்கள், பெயர்கள், வரிசை முறை, தலைமுறைகள், அமைப்புகள், தொகை, தொடக்கம், இறுதி, இடைக்காலம், சடுதி மாற்றம், சொற்களின் இணைப்பு, சொற்களின் அமைப்பு எனப்படும். முதல் பத்தும் எழுத்துகளோடு நேரிடையானத் தொடர்பும், இறுதி இரண்டும் மறைமுகத் தொடர்பும் கொண்டிருப்பவை.

மேற்கண்ட 12 பிரிவுகளும், வரிவடிவியலைப் பொருத்தவரை, தொல்காப்பியத்தில் கணக்கீடு செய்யப்படவில்லை. நன்னூலில் சொல்லப்பட்டிருந்தாலும், அவை தொல்காப்பியத்துக்கு முன்பே அறியப்பட்டிருந்தன.

முதல் தமிழ்ச் சங்கத்துக்கு முன்பே நிலை பெற்றிருந்து, தமிழின் அடிப்படையான உள்கட்டமைப்பைக் கொண்டிருந்தன எனக் கருதலாம்.

உயிரெழுத்துகள், தன்னிலே தெளிவு பெற்றிருந்ததால், முதலில் வைக்கப்பட்டு, பிறகு மெய்யெழுத்துகள் இணைக்கப்பட்டு, அவை உயிரெழுத்துகளின் உதவியின்றி ஒலிக்கப்படாத நிலை உருவாயிற்று.

ஆய்தம் என்ற எழுத்து, ககரத்தின் குறையொலியைக் கொண்டு, மெய்களுக்கு முன்பு வைக்கப்பட்டது.

உயிரெழுத்துகளில், குறில்கள் நெடிலைச் சார்ந்து இருந்தன. நெடில்களே, முதலில் தொல் தமிழரின் வாயில் ஒலிக்கப்பட்டவைகளாகும்.

ஆ, ஈ, ஊ மற்றும் அ, இ, உ ஆகியவையே முதலில் அறியப்படும் உயிர்களாகும். சேய்மை, அண்மை, முன் சுட்டுகளே முறைப்படி முன் வைக்கப்பட்டன.

அ அல்லது ஆ என்ற உயிர்கள், இயல்பாக வலியைத் திறந்தாலே, வெளிப்படும் உயிரொலிகள் ஆகும். தொடரும் இ அல்லது ஈ என்பவை, அ அல்லது ஆ விற்குச் சிறிது எதிர் ஒலிகளைக் கொண்டவை. சுட்டு நோக்கில், உ அல்லது ஊ என்ற உயிரொலிகள், மேற்கண்ட இரண்டு ஒலிகளுக்கும் இடையில், சுட்டுப் பண்பை உணர்த்துவதால், இவை, இறுதியான சுட்டுயிர்களாகக் கருதப்படும்.

ஏ என்பது, ஈ என்ற ஒலியின் மோனை மாற்றாகவும், அதுபோலவே ஓ - உவிற்கும் உள்ளன என்பதால், இவை சுட்டொலிகளுக்குப் பின் வரிசையில் வைக்கப்பட்டன. ஐ, ஔ ஆகியவை, அண்ணவொலி, இதழொலி என்றவாறு, புணரொலிகளாக, முறையே, இவையிரண்டும் உயிரொலிகளின் இறுதியில் வைக்கப்பட்டன.

மெய்களில், வல்லினங்கள், அவற்றையொத்த மூக்கொலிகளைத் தொடர்ந்து, முதலில் வைக்கப்பட்டு, பின்னர்

ஒழுகொலிகளாகி, வல்லொலிகளுக்கும் மூக்கொலிகளுக்கும் இடையொலிகளாக உள்ளன.

அனைத்து மூன்று வகையான மெய்களும், அறிவியல் முறைப்படியே, வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. தொண்டையிலிருந்து உதடுகளுக்கும், அண்ணம், நாக்கு, பற்கள் போன்ற உறுப்புகளுக்கும் இடையே, ஒலிகள் தொடர்புற்று, வெளிப்படுகின்றன.

தோற்றக்கால வரிவடிவம், வகரத்தில் முடிந்து, ழகரம், ளகரம், நகரம், ணகரம் பின்னர் இணைக்கப்பட்டு, இறுதியில் வைக்கப்பட்டன.

லகரம், ளகரமாகி, இறுதியில் ழகரமாயிற்று, ரகரம், றரெமாகி, ணகரத்துக்கும், மூக்கொலிகளுக்கும் தேவையான அமைப்பைத் தந்தன. பல்லீற்று ஒலியான ணகரம் உருவாக்கப்படு முன்பே, நகரம் என்ற பல்லொலி, இடையிலும் இறுதியிலும், அதைப்போல முதலிலும் இடம் பெற்றிருந்தது.

ஒப்புமை : பழுனி, வெரின்

பிற்கால எழுத்து முறைகள், பழங்காலத்தவை போலவே அறியப்பட்டிருந்ததால், ழகரம், ளகரத்துக்கு முந்திச் சென்றது.

ழகரம், ளகரம், லகரம், நகரம் ஆகியவை, முற்காலத்துப்படியே அமைந்திருந்தாலும், ழகரமும், ளகரமும் லகரத்தை முந்திச் சென்றிருக்க வேண்டும். அதுபோல் மகரத்தை றகரமும் நகரமும் முந்தியிருக்க வேண்டும்.

ழகரம், ளகரம், றகரம், நகரம் ஆகியவை காலக் கணக்கீட்டில் தவறிழைக்கப்பட்டதால், இறுதியில் வைக்கப்பட்டன. ஏனென்றால், இவை சமற்கிருதத்தில் அறியப்படவில்லை.

## 25. தமிழ் இலக்கணத்தின் மேதகமை



*1. 1594*, தொல்காப்பிய நூற்பாவின்படி, முதல் தமிழ் இலக்கணம், சிறப்புத் திறன்மிக்க சித்தத் துறவிகளால், இலக்கணத் தொடர்புடைய வடிவரிவ இயல், மெய்மநெறியென்ற கருவிலிருந்து பிறந்த உருபமைப்புகளாகும்.

எடுத்துக் காட்டாக, உயிர், மெய், உயிர் மெய், பெயர், வினை ஆகியவற்றைக் கூறலாம். இவை, இருப்போர், உயிரற்றவை, பகுத்தறிவற்ற உயிர்கள் எனப்பிரிக்கப்பட்டு அறியப்பட்டன. உயிர்கள், உயிர்மெய்கள், அசை உயிர்மெய்கள் ஆகியவையும் வாழ்க்கையின் உயிர்களாகவும், உடல்களாகவும், உயிரும் உடலையையும் கொண்டவைகளாகவும் உருவகம் செய்யப்பட்டன. சொற்களும் அசைகளும் முதன்முதலில் தமிழில், பொருத்தமாக அறியப்பட்டதற்கு நீண்ட காலத்துக்குப் பிறகே, சமற்கிருதம் உள்ளிட்ட இந்திய மொழிகளில் பின்பற்றப்பட்டு, தமிழை முன்வடிவாகக் கொண்டு, தங்கள் வரிவடிவங்களைக் கட்டமைத்துக் கொண்டன.

அக்காலத்துத் தமிழ் இலக்கணம், மூன்று பகுதிகளைக் கொண்டிருந்தது. வரிவடிவம், உருவமைப்பு, பொருளாய் வு அல்லது இலக்கிய ஆய்வு என அவை அறியப்படும். பின்னதே முதன்மையானதும், உரைநடை, அணியிலக்கணம் ஆகியவற்றுக்கும் துணை நின்றன. தொல்காப்பியம் என்ற முந்திய தமிழ் இலக்கண நூல், ஐந்து பகுதிகளைத் தலைப்புகளாகக் கொண்டு, இலக்கிய ஆய்வுகளையும் மற்ற நான்கும் உரைநடை, அணியிலக்கணம் மற்றவற்றையும் பேசுகின்றது. இதன் வழியே தெரிய வருவது யாதெனில், தொன்மைத் தமிழ் இலக்கிய ஆய்வுகளை, இலக்கணத்தின் சிறப்புப் பகுதியாக இணைத்ததோடு, பெரும் சிறப்பையும் கொடுத்தது.

## பழந்தமிழ் இலக்கியங்களின் தன்னிகரில்லா தன்மைகள்

ஆரியர் வருகைக்கு முன்பு படைக்கப்பட்டிருந்த, கணிதம், ஒழுக்கவியல், இலக்கணம், ஏரணம், இலக்கியம், திறனாய்வுகள், மெய்மவியல், நுண்புலப்பொருளியல், ஓகம் என்ற உடற்பேணியல், இசையியல், நாட்டியம், கலைகள், நாடகவியல், மருத்துவம், அறுவை மருத்துவம், உடலியங்கியல், உடற்கூரியல், பாலிய அறிவியல், ஒப்பனைப் பொருளியல், கழிப்பிடம், சமையல், வண்ணப்பூச்சு, தச்சுவேலை, மரக்கலம் கட்டுதல், கனிமங்கள், கட்டடவியல், சிற்பம், கம்மியம், இயந்திரவியல், பொருளியல், அரசியல், நகரப் பாதுகாப்பு, வானியல், கணியவியல், கைவரையியல், குழந்தை மருத்துவம், நிலத்தக நீர்த்தளம் காணல், பொருட் குவை வேட்டை, படைத்துறைத் தொடர்பான, குத்துச் சண்டை, மறப்போர், போர்ப் பயிற்சி, கோழிச் சண்டை போன்ற துறை நூல்கள் முற்றிலுமாக அழிக்கப்பட்டன. இவையன்றி பொதுவானவை, பொழுது போக்கிற்கானவையென படைக்கப்பட்ட இலக்கியங்களில் பெரியவை சிறியவையான காப்பியங்களும், புகழுரைச் செய்யுட்களும், சிற்றின்பம், தெய்வப்பாடல்களும், இசை நாடகங்களும்கூட அழிக்கப்பட்டன.

தொழில்களைச் சார்ந்த வேளாண்மை, நெசவு, கலஞ்செய்தல், மீன்பிடித்தல், மை மாயக்கலை, பேயோட்டு மந்திரம், நீத்தாரியல், மந்திரம் செய்து ஏவுதல், வசியம், நீர் மேலாண்மை, நெருப்பு மற்றும் காற்றைக் கட்டுப்படுத்தல், விலங்குளை கட்டுப்படுத்தல், நச்சுயிர்களின் நஞ்சை மந்திரம் ஓதி நீக்குதல் போன்றவை, பல தலைமுறைகளாக, மரபு வழியில் கடைப்பிடிக்கப்பட்டு வந்தன. அவை, முழுமையாகப் பதிவு செய்யப்படாமல் போயின.

தமிழ்நாடு, காட்டு மூலிகைகள், பச்சிலைகள் செறிந்து, வளமை பெற்றிருந்தது. அவற்றிலிருந்து மருந்துகள் செய்யப்பட்டன. எலும்பு முறிவுகளுக்கும் அவை பயன்படுத்தப்பட்டன. வன்சாறுகள் பிழியப்பட்டன. மரபு வழியில் மருத்துவப் பட்டறிவும் ஏட்டறிவும் கொண்ட மருத்துவர்கள், நாடிகளைப் பிடித்துப் பார்த்து, நோய்களின் தன்மைகளை, அவை எவ்வளவுச் சிக்கல்கள் நிறைந்ததாயினும், உடனடியாகவும், சரியாகவும் கணித்து, மருந்துகள் தந்தனர்.

இப்போதும் மற்போரின் நுணுக்கம் தெரிந்தவர்கள், சிலர் தமிழ்நாட்டில் உள்ளனர். அவர்கள், நரம்பு மண்டல அமைப்புகளைத் துல்லியமாக அறிந்தவர்கள். பகைவரின் உடலில் சில இடங்களைத் தட்டுவதன் மூலம், அவர்களை மயக்கமடையச் செய்துவிடுவர். ஒன்றரை மணி நேரத்துக்குள் அவர்கள் மயக்கம் தெளியாமல் போனால், இறந்துவிடவும் வாய்ப்புகள் உண்டு.

குமரிக் கண்டத்துத் தமிழர்கள், இசையிலும், நாட்டியத்திலும், அறிவியலிலும் கணக்கியலிலும், வானியலிலும், பரந்த அறிவைப் பெற்றிருந்தனர்.

வாரத்துக்கு ஏழு நாட்கள், திங்களுக்கு முப்பது நாட்கள், ஆண்டுக்குப் பன்னிரெண்டு திங்கள்கள் என குமரிக் கண்டத் தமிழர்கள் வகுத்தறிந்த நாள் காட்டி முறையே, இன்று உலகெங்கும் பின்பற்றப்பட்டு வருகின்றது. வார நாட்கள், ஏழு

கோள்களின் பெயரால் அழைக்கப்பட்டன. திங்கள் மாதம், நிலவின் சுழற்சியில் தோன்றும் வளர்பிறை, தேய்பிறை நாட்களின் கணக்கில், முப்பது நாட்களாகக் கணக்கிடப்பட்டது. பன்னிரெண்டு மாதங்களும், பன்னிரெண்டு ஓரைகளின் பெயரால் அறியப்பட்டது. ஞாயிறு ஆண்டு, சூரியனின் தென் பயணம், வடபயணம் ஆகிய இரு நிலைகளைக் கொண்டு கணக்கிடப்பட்டது.

அடியிற்காணும் பட்டியலில் பின்ன அளவுகளும், துணை அளவுகளும், வெளிநாட்டவரை கவர்ந்திருக்க வேண்டும். குமரிக் கண்டத் தமிழர்களின் துல்லியமான கணக்கியல் அறிவு, அத்துறையில் அவர்களின் தேர்ச்சியையும் முதிர்ச்சியையும் காட்டுகின்றன.

**பின்னங்கள் :**

| பெயர் | அளவு |
|---|---|
| முக்கால் | $3/4$ |
| அரை | $1/2$ |
| கால் | $1/4$ |
| முந்தாணி, மூவிசம் | $3/36$ |
| அரைக்கால் | $1/8$ |
| மாகாணி, வீசம் | $1/16$ |
| நான்மா | $1/5$ |
| இருமா | $1/10$ |
| மா, ஒருமா | $1/20$ |
| அரை மா | $1/40$ |
| காணி | $1/80$ |
| அரைக் காணி | $1/160$ |
| முந்திரி / முந்திரை | $1/320$ |

**துணை அளவுப் பட்டியல் :**

| | |
|---|---|
| $6\frac{1}{4}$ தேர்த்துகள்கள் : | 1 நுண்மணல் |
| 100 நுண் மணல் | 1 வள்ளம் |

| | |
|---|---|
| 60 வள்ளல்கள் | 1 குரல் வளைப்பிடி |
| 40 குரல் வளைப் பிடிகள் | 1 கதிர்முனை |
| 20 கதிர் முனைகள் | 1 சிந்தை |
| 14 சிந்தைகள் | 1 நாகவிந்தம் |
| 17 நாகவிந்தங்கள் | 1 விந்தம் |
| 7 விந்தங்கள் | 1 பாகம் |
| 6 பாகங்கள் | 1 பண்டம் |
| 5 பண்டங்கள் | 1 குணம் |
| 9 குணங்கள் | 1 அணு |
| 7 அணுக்கள் | 1 மும்மி |
| 11 மும்மிகள் | 1 இம்மி |
| 21 இம்மிகள் | 1 கீழ்முந்திரி |
| 320 கீழ்முந்திரிகள் | 1 மேல் முந்திரி அல்லது முந்திரி |
| 320 மேல் முந்திரிகள் | 1 (முழு எண்) |
| 1 கீழ் முந்திரி | $\frac{1}{320}\times\frac{1}{320}=\frac{1}{102400}$ |
| 1 தேர்த்துகள் | $\frac{1}{2323824530227200000000}$ |

மிகப்பெரிய எண்கள்கூட, தொல்தமிழர்களால் கணக்கிடப்பட்டிருந்தன. சில வருமாறு :

| | |
|---|---|
| கும்பம் | ஓராயிரம் மில்லியன் |
| கணிகம் | பத்தாயிரம் மில்லியன் |
| தாமரை | பத்துமில்லியன் கோடி |
| சங்கம் | நூறு பில்லியன் |
| வாரணம் | பத்தாயிரம் பில்லியன் |
| பரதம் | நூறு குவாட்ரில்லியன் |

குறிப்பு : மில்லியன், பத்திலக்க, பில்லியன், நூறிலக்கம்

2. அனைத்துத் தமிழ் இலக்கியங்களும் செய்யுள் வடிவில் படைக்கப்பட்டன. அவற்றைப் படைத்தவர்கள், ஆசிரியர்கள் அனைவரும் புலவர்களாவர். தங்கள் படைப்பின் மூலம் தங்கள் கருத்துக்களையும் மக்கள் முன் வைத்தனர்.

செய்யுள் இயற்றும் ஆற்றலும் நுணுக்கமும், முறைகளும், அழகும், முதன்முதலில் மனிதனால் வளர்க்கப்பட்டது என்றால், அது தமிழனால்தான் எனக் கூற இயலும். தமிழில் அறியப்படும் வெண்பா, கலி போன்ற செய்யுளடிகள், மிகவும் நேர்த்தியாக, உலகில் வேறெந்த மொழிகளிலும், இதற்கிணையாக காட்ட இயலாத அளவில் உள்ளன. குமரிக் கண்டத்தில் வாழ்ந்திருந்த தமிழர்களில் நூற்றுக்கணக்கான மற்றும் ஆயிரக்கணக்கானவர்கள் புலவர்களாகவும், பெண்பாற் புலவர்களாகவும் விளங்கினர். முதற்சங்க காலத்தில், ஒவ்வொரு தலைமுறையிலும் ஏராளமான புலவர்கள் அறியப்பட்டிருந்தனர்.

செய்யுட்களின் கருத்துகள் அவரகள் படைத்த வரிகளில் வெளிப்பட்டன. வரலாற்றுக்கு முந்திய, அறியப்படாத காலத்திலிருந்து, செய்யுட்களைப் படைக்கும் ஆற்றல், உலக அளவில் தமிழர்களிடம் மட்டுமே காணப்பட்டது. மாந்தனின் உள்ளுணர்வுகளான இரக்கம், இடுக்கண், மகிழ்ச்சி, நெகிழ்ச்சி, காதல் போன்றவை அவர்களின் மன ஆழத்தில் சிறைப்பட்டு வரிகளாக, சொற்களாக, மற்றவர் புண்படாத வகையில் செய்யுட்களில் வெளிப்படுத்தப்பட்டன. அவர்களின் உள்ளக் கிளர்ச்சிகள், அழகான ஒலி ஓசைகளுடன் செய்யுட்களாக வெளிவந்தன. இவ்வாறு, இனிமையான இசை மொழியில் கண்ணாடிக் கற்களில் பட்டு ஒளிரும் ஒளியைப் போல் புலவர்களின் செய்யுட்கள், தங்கள் பயணங்களைத் தொடர்ந்தன.

தமிழ்ச் செய்யுள்களில் உள்ள சொல்லழகுகள், எதுகை, மோனை, சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள தொடர்புகள்,

தமிழ்ச் செய்யுட்களன்றி உலகின் எம்மொழிகளிலும் காணவியலாது. அக்காலம் முதல் இக்காலம் வரை, தமிழ் மொழியின் செய்யுள் அமைப்பு விதிகள், மாறாமல் மாற்றப்படாமலேயே தொடர்கின்றன. தமிழ்ச் செய்யுட்களின் சொல்லடுக்கு, ஓசை நயம் பொருட் செறிவு ஆகியவை ஒன்றையொன்று தழுவியே செய்கின்றன.

குமரிக் கண்டத்துத் தமிழர்கள், இசையிலும் நாட்டியத்திலும் உயர்ந்த வளர்ச்சியைக் கொண்டிருந்தனர். தமிழ் மொழியும் இவ்விரு கலைகளோடு, இயற்கையிலேயே இணைந்திருந்தது. ஒவ்வொரு சொல்லும் அதற்கேற்ற சைகையும் இக்கலைகளில் பின்னிப் பிணைந்திருந்தன. இவ்விரு கலைகளும், செய்யுள் வடிவில் அறியப்பட்டிருந்ததால், தமிழ், முத்தமிழ் என்று அழைக்கப்பட்டது.

குமரிக் கண்டத் தமிழர்களின் வடபுலப் பெயர்ச்சியும் திராவிட மொழிகளின் வகைளும் :

தமிழினின்றும் தெலுங்கு பெற்ற மாற்றங்களும் திரிபுகளும்

| **தமிழ்** | **தெலுங்கு** |
|---|---|
| தன்மை | |
| நான் | நேனு |
| யாம் | மேமு (உளப்பாடில்லா வடிவம்) |
| நாம் | மனமு (உளப்பாட்டு வடிகம்) |
| முன்னிலை | நீன் - நீ, நீவு |
| நீர் | மீரு |
| படர்க்கை (தற்சுட்டு) | |
| தான் | தானு (ஒருமை) |
| தாம் | தாமு, தமரு (பன்மை) |

**சுட்டுப் பெயர்ச் சொற்கள் :**

| **தமிழ்** | **தெலுங்கு** |
|---|---|
| அவன் | வாடு |
| அவர் | வாரு |

| | |
|---|---|
| அது | அதி |
| அவை | அவி |

தமிழ் உயிர்களின் சொல்லுருத் திரிபுகள், தெலுங்கில் பெயரடைச் சொற்களான சொல்லிடப் பெயர்ச்சிகள் :

எ.கா. : அதினி - தானி, இதினி - தீனி, எதினி - தேனி

உயிர்களின் சொல்லிடப் பெயர்ச்சிப் பொதுச் சொற்கள் தெலுங்கில் :

எ.கா. :

| தமிழ் | தெலுங்கு |
|---|---|
| அரை | ராய் |
| இரண்டு | ரெண்டு |
| இரா | ரே |
| உரல் | ரோலு |
| இலது | லேது |
| உள் | லோ |
| எழு | லே |
| எழுபது | டெம்படி |
| பொழுது | ப்ரோடு |
| விரல் | வ்ரலு |

**இடைக் குறைச்சொற்கள், தெலுங்கில் ஒழுகொலிகளாக :**

| தமிழ் | தெலுங்கு |
|---|---|
| அழுத்து | அட்டு |
| எருது | எட்டு |
| உழுந்து | உட்டுலு |
| எலும்பு | எம்மு |
| குருடு | குட்டி |

| | |
|---|---|
| கொழுப்பு | கொவ்வு |
| சுருட்டு | சுட்டு |
| செருப்பு | செப்பு |
| திருத்து | டிட்டு |
| நெருப்பு | நிப்பு |
| பருப்பு | பப்பு |
| மருந்து | மண்டு |
| விருந்து | விண்டு |

**உயிர்களின் சடுதி மாற்றம் :**

| **தமிழ்** | **தெலுங்கு** |
|---|---|
| அ-ஆ | வனை வானு |
| ஆ-ஏ | ஆண்டு ஏடு |
| ஆள் | ஏல் |
| ஆறு | ஏறு |
| இ - எ - ஏ | இரை எர |
| கிழங்கு | கெட்ட |
| சிறை | செர |
| திற | தெர |
| நிலம் | நேல |
| விலை | வெல |
| உ-ஓ | உடல் ஓடலு |
| துவர் | தொகரு |
| முளை | மொலக |
| முதல் | மொதலு |
| முறை | மொர |
| ஐ-அ : | கடை கட |

| | |
|---|---|
| நடை | நட |
| முறை | மொர |
| வெண்டை | பெண்ட |

**உயிர்மெய்களின் சடுதி மாற்றம் :**

| | |
|---|---|
| ச-க : | வாசல் வாகிலி |
| எச்சில் | எங்கிலி |
| ன - ண : | கண் கண்ணு |
| புண் | பூணு |
| மண் | மண்ணு |
| வெண்ணெய் | வெண்ணெ |
| ழ-ட : | இழு இடு |
| ஊழியம் | ஊழகமு |
| ஏழு | ஏடு |
| கழுவு | கடுகு |
| கழுதை | காடிட |
| கழை | கட |
| கூழ் | கூடு |
| கோழி | கோடி |
| நிழல் | நீட |
| ள - ல : | கள் கல்லு |
| குளம் | கொலனு |
| தள்ளை | தல்லி |
| தேள் | தேளு |
| பள்ளம் | பல்லமு |
| பிள்ளை | பில்ல |
| முள் | முல்லு |

| | |
|---|---|
| வாள் | வாலு |
| ள-ழ-ன: | கொள் கொனு |
| முழுகு | முளுகு |
| ற-த : | ஊற்று ஊத்த |
| சுற்றம் | சுத்தமு |
| புற்று | புட்ட |
| மாற்றம் | மாட்ட |
| ணட-னர : | ஒன்று ஒண்டு |
| குன்று | கொண்ட |
| ன-த : | அவன் வாடு |
| தம்பின் | தம்முடு |

**தமிழின் வல்லொலிகள் தெலுங்கில் :**

| | |
|---|---|
| செய் | சேயி |
| தேங்காய் | தேங்காய |
| பஞ்சம் | பஞ்சமு |
| கும்பு | கும்பு |
| என்றார் | அண்தாரு |

**தமிழ் வினைகள் விரிந்தவாறு தெலுங்கில் :**

| | |
|---|---|
| நட | நடுச்சு |
| முளை | மொளச்சு |

**தெலுங்குத் திரிபுகள் :**

வரு-வார்-வா ரா

கள் (பின்னொட்டு, பன்மை) (களு)-லு

**ஆ-ஆகு என்ற சொற்களின் ஒப்பீடு :**

ஆ, ஆகுஅவு

**ஏவல் வினை :**

ஆ, ஆகு (ஒருமை) - கா

ஆகும், ஆகுங்கள் - கம்மு (தனி)

கண்டி (கூட்டு)

**ஆண்பால் ஒருமை**

| | | | |
|---|---|---|---|
| முற்றுவினை | : | | |
| இறந்தகாலம் | : | ஆயினான் | அயினாடு |
| நிகழ்காலம் | : | ஆகின்றான் | ஆவுத்தாடு |
| எதிர்காலம் | : | ஆவான் | ஆவுத்தாடு ஆகுவான் |
| பெயரெச்சம் | : | | |
| இறந்தகாலம் | : | ஆயின | அயின, அய்ன |
| நிகழ்காலம் | : | ஆகின்ற | அய்யே |
| எதிர்காலம் | : | ஆகும் | அய்யே |
| வினையெச்சம் | : | | |
| இறந்தகாலம் | : | ஆய், ஆகி | அயி, அய் |
| நிகழ்காலம் | : | ஆய்க்கொண்டு | அய்க்கொனி |
| எதிர்காலம் | : | ஆக கா, (செயவென் எச்சம்) | அவ |
| கீழிணைப்பு எச்சம் | : | ஆயினால், ஆயிற்றேல் | ஆனால் ஆயித்தே |

**இணைப்பு வினையெச்சம் :** ஆனால் கானி, அயினானு

உடன்பாட்டு வினை : ஆம் அவுனு

**தொழிற்பெயர் :** ஆதல், ஆகுதல்
அவுத்த, காவடமு

படர்க்கை ஒன்றன்பால் ஒருமை :

எதிர்மறை ஆகாது காது கூட்டுவினை ஆக வேண்டும் காவலனு

மூன்றாம் தமிழ்ச் சங்ககாலத்தில் வேங்கடம் உள்ளிட்ட தென்னிந்தியா முழுவதும், தமிழ் நாட்டின் எல்லை

பரவியிருந்தது. சங்க காலம், கி.மு. 500 முதல் தொடங்கி கி.பி. 400இல் முடிவுற்றதாகச் சொல்லப்படுகின்றது. கன்னடம், தமிழ் நாட்டிலிருந்து கி.பி.700 ஆண்டுகளில் பிரிந்ததாக அதே நூற்றாண்டில் வாழ்ந்திருந்த குமரில பட்டர், திராவிட மொழிக் குடும்பம் பற்றிய தமது ஆந்திர திராவிட பாஷா என்ற நூலில் குறிப்பிடுகிறார். மலையாளம் மிகவும் பிற்காலத்தில் அதாவது கி.பி. 12ம் நூற்றாண்டில் பிரிந்தது. மற்ற மொழிகள் அதற்குப் பின் பிரிந்தவைகளாகும்.

தமிழினின்றும் பிரிந்த திராவிட மொழிகளுள் முதலில் அறியப்பட்டது தெலுங்கு மொழியாகும். வடுகு என்ற சொல், வடகு, வடக்குப் பகுதி மொழி என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். இப்பெயரைச் சூட்டியவர்களும் தமிழர்களே.

நமது நினைவுகள் திருப்பப்படுமானால், விந்தியப் பகுதி இந்தியா, திராவிட நாடு எனப்பட்டது என்பதை அறியலாம். மராட்டியம், குஜராத்தி, தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய ஐந்து மொழிகசள் பேசும் பகுதிகள், பஞ்ச திராவிடம் என்று வட இந்திய அறிஞர்களால் அழைக்கப்பட்டது. அண்மைக் கால மொழி ஆய்வுகளின் அடிப்படையில், பஞ்ச திராவிடம் என்பது ஒவ்வாப் பெயர் என ஒதுக்க இயலாது.

மராத்தி, குஜராத்தி மொழிகள் மட்டுமல்லாது, விந்தியத் தொடரின் வட இந்திய மொழிகளான இந்தி, வங்காளி போன்றவையும், திராவிடத்தின் கிளை மொழிகளே எனலாம்.

## 26. அளவை ஆய்வியல் தேர்வு



ஆரியர் வருகைக்கு முன் அல்ல இரண்டாம் தமிழ்ச் சங்க முடிவுக்குப் பின் தமிழ்மொழி இரண்டாகப் பிரிந்தது. அவை செந்தமிழ் என்றும் கொடுந்தமிழ் என்றும் சொல்லப்பட்டன. கொடுந்தமிழ் பன்னிரெண்டு கிளைகளானதாக தொல்காப்பியம் கூறுகிறது.

சோழ, சேர நாட்டின் தென்பகுதிகளும், பாண்டிய நாடும் செந்தமிழ்ப் பேசும் நாடுகளாகவும் முதலிரண்டு நாடுகளின் வடபகுதிகள் கொடுந்தமிழ்ப் பேசும் நாடுகளாகவும் விளங்கின.

பாண்டிய நாடு, அழிந்துபட்ட தென்கண்டத்துடன் இணைந்திருந்ததால், பாண்டிய நாட்டில் குமரிக் கண்டத்துச் செந்தமிழ் பேசப்பட்டது. வளமான அச்செம்மொழியின் சொற்களில் பல பிற்காலத்தில் வழக்கிழந்து போயின.

கொடுந்தமிழினின்றும் பிரிந்த பல மொழிகள், இறுதியாகத் தமிழினின்றும் விலகி, திராவிட மொழிகளாயின. தங்களுக்கென தங்கள் விருப்பத்திற்கிணங்க, தமிழ்ச் சொற்களைப் பலவாறாகத் திரித்துக் கொண்டன என்றாலும் திராவிட மொழிகளின் சொற்களுக்கான வேர்களும் மூலமும்

தமிழில் இருப்பதால், அளவை ஆய்வியல் தேர்வு என்ற தலைப்பில் இதனை அழைக்க நான் முன் வந்தேன்.

எ.கா. :

| | | |
|---|---|---|
| தெலுங்கு | கன்னடம் | **மலையாளம்** |
| செப்பு | சொல் | பற (சொல்) |
| சேயு | மாடு | செய்(செய்) |
| இல்லு | மனெ | வீடு(இல்லம், வீடு) |

குடியேற்றக் காப்பு

பழந்தமிழே திராவிட மொழிகளுக்குத் தாயாக இருந்தாலும், பழங்காலத் தமிழ்ச் சொற்களில் சில, தமிழ்க் கண்டம் அழிந்த நிலையிலும், திரிபு மொழிகளில் பாதுகாப்பாக உள்ளன.

பல பழந்தமிழ்ச் சொற்களின் வேர்களும், சொற்களும், தமிழில் வழக்கிழந்து போன நிலையிலும், தமிழ் மொழி பிற்காலத்தில் மேலும் பண்பட்ட நிலையடைந்தது. ஆரியத்துக்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்கள் அழிந்த அல்லது அழிக்கப்பட்ட நிலையிலும், பழங்காலத் தமிழ்ச் சொற்கள் இப்போதும் அறியப்படுகின்றன.

எ.கா. : நன் என்பது, நான் என்பதின் வேற்றுமைத் திரிபாகும். அய்து என்ற முன் சொல் ஐந்து எனத் தமிழில் சொல்லப்பட்டாலும், தெலுங்கில் அய்து என்ற முன் தமிழ்ச் சொல் உள்ளது.

பலவாறான சொற்களும், இலக்கண விதிகளும், தமிழிலிருந்தது போன்றே, மலையான மொழி தோன்றிய காலத்தில் அறியப்பட்டிருந்தன. சேர நாடான அக்காலத் தமிழ் நாட்டுக்கும், தற்காலத் தமிழ் நாட்டுக்கும் இடையேயான இடைவெளி பெருகியதால், கி.பி.13ஆம் நூற்றாண்டுக்குப்

பிறகு, மலையாளம் தனி மொழியாயிற்று.

எ.கா. : சில இலக்கண நிலைகள் :

முற்று வினை :

(அனைத்து நிலைகள் எண்களுக்குப் பொதுவானது)

| | | |
|---|---|---|
| இறந்த காலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
| செய்து(செய்கின்று) | செய்யுன்னு | செய்யும் |

முற்று வினை :

| | | |
|---|---|---|
| ஆயால் | குட்டியால் | |
| நிங்கள் | நிங்ஙள் | நிங்கள் |
| சொற்கள் : | போழ் (போழ்து) உள் | |

## 27. திராவிடத்திலிருந்து ஆரியத்துக்கான நிலைத் திரிபு



வட இந்தியாவின் வட்டாரப் பேச்சு மொழிகளில் திராவிடத்தின் கூறுகள் வட இந்தியாவின் மொழிகளில் அறியப்படும் இலக்கணம், அவற்றின் மரபுக் கூறுகள், திராவிட மொழிகளைப் பின்பற்றியே உள்ளன என்பதை இங்கே காணலாம்.

1. பெயர்களின் சொல்லுருத் திரிபுகள், தனித்தனியான எச்சங்களாக, பெயர்களின் வேற்றுமைத் திரிபுகளாக இணைக்கப்பட்டன.

2. சொல்லுருத் திரிபுகளின் பன்மை, வேறுபட்ட நிலையில், பின்னொட்டுகளாக சொல்லுருத் திரிபுகளில் ஒருமையாயிற்று.

3. வட இந்திய மரபுகளில் தன்மைப் பன்மையான இரண்டு பெயரடைகள், ஒன்று இணைப்பாகவும், மற்றொன்று விடுப்பாகவும் உள்ளது.

4. முன்னுருபு பயன்பாட்டில் பின்னருபாயிற்று.

5. வினைக் காலங்களின் அமைப்பு, எச்சங்களாக உள்ளன.

6. உள்ளது கிளத்தலுக்கு முன், பெயரெச்சச் சொற்றொடர் உள்ளது.

7. ஒரு சொல்லுக்கு முன் தழுவும் சொல்லானது, பின் தழுவலாக உள்ளது.

இந்தி மொழியின் அடித்தளமாக திராவிடம்

| தமிழ் | இந்தி | தமிழ் | இந்தி |
|---|---|---|---|
| அடே, | அதே அரே | செல் | சல் |
| (கீழானவரை விளித்தல்) | | செருப்பு | செப்பல் |
| அப்பா | அப்பா | சேர் (அளவு) | செர் |
| அம்மா | அம்மா | அய்யோ | ஹாய் |
| அலை | இல் | ஓரம் | ஓர் |
| அன்னை | அன்னா | அன்னை | அன்னி(நர்ஸ்) |
| கட்டில் | காட் | ஆகு | ஹோ |
| கடு | கடா | ஆம் | ஹாம் |
| கழுதை | கதா | இத்தனை | இத்னா |
| களம் | கலா | இதோள் | இதர் |
| களி (விளையாடு) | கேல் | இப்போது | இப்ப அப் |
| கன்னல் (கரும்பு) | கன்னா | | (கொச்சை) |
| காளம் (கருமை) | காலா | | |
| உதடு | ஒண்ட் | கிழான் | கிசான் |
| உதோள் | உதர் | குதி | கூத் |
| உம்பர் | ஊப்பர் | குமரன் | குமார் |
| உலகு | லோக் | குமரி | குமாரி |
| உளுந்து | உடட் | கூலி | கூலி |

| | | | |
|---|---|---|---|
| எதோ | சூதர் | கொச்சு (சிறிது) | குச் |
| கொட்டறை | கொட்ரி | தயிர் | தகி |
| கோ (பசு) | காய் | தா | தே |
| கோட்டை | கோட் | தாத்தா, தாதை | தாதா |
| சப்பாத்தி | சப்தீ, சிப்தா | துவை | தோ |
| சாயுங்காலம் | சாம், சாயம், (சம) | நாடகம் | நாடக் |
| சவை | சபா | நாடி | தோடி |
| சிறுத்தை | சீட்டா | நாரத்தை | நாரங்கி |
| சீரகம் | சீரா | நாவி | நாவ்,நவு (சம) |
| சுண்டி (சுக்கு) | சோண்ட் | சும்மா | சுப் |
| சோம்பு | சோ சுவப் (சம) | நீல், நீலம் | நீல் |
| சோம்பு | சவும்ப் | நேரம் | தெர் |
| தடி | சடி | நோக்கு | தேக் |
| தன் | தண்ட | பக்கம் | பக்ச |
| தத்தை (கிளி) | தொதா | பக்கல் | பகல் |
| பண் | பன் | பட்டி | பட்டி |
| பதம் | பாத் | படி | பட் |
| பழம் | பல் | படி | பட் |
| பரம் | பர் | மண்டலம் | மண்டல (சம) மண்டல், |
| பால் | பாசு மந்திரம் | மந்திர் | மந்திர (சம) |
| பித்தளை | பீதல் | மயில் | மோர், மயூர (சம) |
| பில்லி (பூனை) | பில்லி | மனம் | மன், மனஸ் (சம) |

| | | | |
|---|---|---|---|
| பிட்ட (தெலு.) | பேட்டா, | பேட்டி | மா ஆம் |
| புள்புர | மாதம் | மாச (சம) | மார |
| புகல் | போல் | புருவம் | பவும் |
| புழு | பில்லூ | பூ | பூல் |
| மணங்கு | மன் | மாமன் | மாமா |
| மந்தி | பந்தர் | மாமா | மாமி |
| மூக்கு | நக் | மாறு | மார் |
| மெல்லம் | முலாயம் | மிளகு | மிர்க் |
| பொய் மை | மை, ம | மீசை | மூஞ்ச் |
| வா | ஆ | முகம் | முக் முக (சம) |
| வாலுகம் | பலுள | முட்டி | முட்டி |
| விதை | பிச,பிசச (சம) | முட்டம் | மோடி |
| வெண்டை | பண்டி | முத்து | முந்த (சம) |
| மூக்கு | நாக் | | |

மூவிடம் சார் மறு பெயர்கள்

| | தமிழ் | இந்தி |
|---|---|---|
| தன்மை | நான் (ஒருமை) | மயின் |
| | நாம் (பன்மை) | ஹம் |
| முன்னிலை | நூன் (ஒருமை) | தூ |
| | நூம் (பன்மை) | தும் |

மேற்கண்ட இந்திச் சொற்களுக்கான வேர்கள் தமிழ் மொழியில் மட்டுமே உள்ளன.

இலக்கண அமைவுகளும் நெறிமுறைகளும்

பழந்தமிழில் இறப்பு வினை, ஆ என்ற பின்னொட்டைக் கொண்டு, வினைப் பொருளில் வழக்கில் இருந்தது. அது தற்போது, இந்தியில் உள்ளது. இடைக் காலத் தமிழில், இறப்பு வினையெச்சம் தவிர்க்கப்பட்டு, பேச்சு வழக்கிலும், உரைநடையிலும் கூட வழக்கில் இல்லாமற் போயிற்று.

இய என்ற தமிழின் வியங்கோள் பின்னொட்டு, ஏவல் பின்னொட்டாக இயெ என்று, வினையில் சொல்லப்பட்டு ஏவலிலும் பணிவு உணர்த்தப்பட்டது. இந்தியில் ஏவல் எதிர் வினைப் பின்னொட்டான மட் என்பது தெலுங்கின் வாடு என்ற சொல்லின் திரிபாகும். சமற்கிருதத்தில், தடைப்படு எச்சமாக, மா எனப்பட்டது. இவ்வழக்கு, சூரசேனி பிராகிருதம் போன்ற முற்கால பேச்சு நடைமுறையைத் தொட்டு நிற்கின்றது.

மாறு அல்லது மாறே என்ற வினையடை எச்சம், காரணத்தைக் குறித்து, கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட, பாலியல் சாராத, பழந்தமிழ் இலக்கியமான புற நானூற்றின் எண்கள்,4,20,22,92,93,271 மற்றும் 380 ஆம் பாடல்களில் சொல்லப்பட்டுள்ளது. மாறே என்ற தமிழ்ச்சொல், இதே பொருளில், மறே என்று இந்தியில் சொல்லப்பட்டுள்ளது. கே என்ற பின்னொட்டு, இந்தியப் பெயர்களுக்குப்பின், தமிழின் இறப்பு முற்று விளையாக அல்லாமல் பயன்படுத்தப்பட்டது.

ஏவல் வினையில் வரும் தொழிற் பெயர்கள் தமிழிலும் இந்தியிலும் பொதுவாகவே உள்ளன. இந்தியில் சொற்களை, சொற்றொடர்களில் பயன்படுத்தும் முறையும், தமிழைப் போலவே உள்ளது. இந்தியிலும், தமிழிலும் உள்ள சில பழமொழிகள், ஒத்த கருத்தையுடையனவாகவே உள்ளன.

# 28. தமிழ் அல்லது திராவிடத்தின் மேற்புலம் நோக்கியப் பரவல்



கால வரிசைப்படியான, ஏற்புடைய தகவல்கள், தென்னிந்தியாவுக்கும் மெசபத் தோமியாவுக்கும் இடையே இருந்த தொடர்புகளை, சுமேரியக் குடியிருப்புகளில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வுகள் உறுதி செய்கின்றன. குறிப்பாக, சுமேரியக் குடியிருப்புகளான கிசு, சுசா ஆகியவை, கி.மு. 5000-3000 ஆண்டுகள் பழமையானவை. அகழ்வாய்வுகளின் வழியே, இந்தியப் பொருட்கள் அங்கே பயன்படுத்தப்பட்டன என்ற செய்திகள் வெளிப்பட்டுள்ளன. ஆர்வத்தைத் தூண்டும் பொருட்களில் சில.

1. மக்களை அடக்கம் செய்த பானைகள் (முதுமக்கள் தாழிகள்)

2. நீள் சதுர குட்டைக் கால்களையுடைய, ஊனுண்ணிகளின் மண் பொம்மைகள்.

3. வெள்ளையும் சிவப்பும் கலந்த மணிகள், கிசு பகுதியில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. சிவப்பு மணியில் வெள்ளைக் கோடுகளுடன் காணப்பட்டன. இந்த

நுட்பம், இந்தியாவில் அறியப்பட்டிருந்தது. இது போன்றே கிரீட் தீவிலும் கண்டெடுக்கப்பட்டன.

4. இந்தியப் பரிசல்கள் போன்றே, அங்கும் வடிவமைப்பில் பொருந்தியவை பயன்பாட்டில் இருந்தன.

5. சுசு நகரத்தில் சுமேரியர் காலத்து பாறை ஓவியம் ஒன்று, இந்திய எழுத்து முறையையும், காளை உருவத்தையும் கொண்டிருந்தது.

6. சுசா நகரத்துக் சங்கு, தெல்லோ நகரத்துச் சங்கு மணிகள், பெகாசுப் பகுதி அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்டன. இந்தியர்கள் பயன்படுத்தியதைப் போன்றே சுமேரியர்கள், சமயக் சடங்குகளிளும், நீத்தார் ஊர் வலத்திலும், போர்களிலும் கூட, சங்குகளைப் பயன்படுத்தியுள்ளனர். சங்கு வளையல்களும் அறியப் பட்டிருந்தன. சங்கை அறுக்கும் நுட்பமும் உத்தியும், இரும்பும் பொருட்களைப் பயன்படுத்தி குறிப்பாக இரும்பு அறம், சங்கறுக்கும் தொழிலில் தென்னிந்தியாவில் அறியப்பட்டிருந்தது.

7. தமிழகத்தின் கருங்காலி மற்றும் தேக்கு மரங்களில் எச்சங்கள் பிர்சு, நிம்ரோது, மற்றும் ஊர் போன்ற நகரங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

தென்னிந்தியாவில் நடைமுறையில் இருந்த சமயம் மற்றும் சமூக அமைப்புகள், அக்கால உலகிற்கு முன்னோடிகளாக இருந்தன. இயற்கை வழிபாட்டு முறை, தமிழ்நாட்டில் மட்டுமல்லாது, உலகெங்கும் அறியப்பட்டிருந்தது. இயற்கை அன்னையை அம்மா என்று தெய்வத் தன்மை கொண்டவளாக அழைத்தனர். அம்மோன் என்ற தெய்வத்துக்கு எகிப்தில், கோயில் இருந்தது. கிரீட் என்ற நடுத்தரைக் கடலில் அமைந்துள்ள தீவில் கண்டெடுக்கப்பட்ட, இயற்கை அன்னையின் மண் உருவப்பொம்மை போன்றே,

மொகஞ்சதாரோவிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளது. தென்னிந்தியாவின் பழங்குடி மக்களுக்கு, அய்யாயி (அய்யாய்) என்ற பெண் தெய்வம், வழிபாட்டுக் குறியதாக இருந்தது தற்காலத்தில் அறியப்படும், காளி பத்திரகாளி அல்லது பகவதி (கேரளம்) ஆகியயோர், பழைய தெய்வத்தின் புதிய பெயர்களைக் கொண்டவர்களே. கோயில்களுக்கு, பெண்களை நேர்த்திக் கடனாக அளிப்பது வழக்கில் இருந்தது. அவர்கள், தேவரடியார்கள் எனப்பட்டனர். சங்க இலக்கியங்கள், இத்தகைய தேவரடியார்களைப் பற்றிக் குறிப்பிடவில்லை யென்றாலும், பரத்தையர் என்ற நடனப்பெண்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. தேவரடியார் நடைமுறை, வட ஆப்பிரிக்கப் பகுதியிலிருந்த, போணீசியர் குடியேற்ற நகரமான சிகாவில் வழக்கில் இருந்தது. மேலும் சிரியாவில் எலியோபொலிசு, கொரிந்தியப் பகுதியின் லிடியா அர்மீனியா ஆகிய பகுதிகளில் இந்நடைமுறை வழக்கில் இருந்தது. கி.பி. இரண்டாம் நூற்றாண்டு வரை, ஆசியா மைனரிலும் தேவரடியார் முறை அறியப்பட்டிருந்தது. தென்னிந்தியாவில், பெண்களை, கடவுளுக்குத் திருமணம் செய்து வைப்பது, ஒரு சமயச் சடங்காகவே இருந்து வந்துள்ளன. இதே நடைமுறைகளை மெசபத்தோமியாவிலும் அறியலாம். இங்கு வேசித்தனம் என்பது, கோயில் மற்றும் சமயம் சார்ந்த சடங்காகவே கருதப்பட்டது. இத்தேவரடியார்கள் மருது - என்ற கடவுளுக்கும், செமசு என்ற கடவுளுக்கும் மனைவிகளாயினர். குழந்தைகளோ, மாந்தப் பிறவிகளாக இருந்தனர்.

கடவுளுக்கு, மயிரைக் காணிக்கையாகக் கொடுக்கும் நடைமுறையும் இருந்தது. பிப்ளோசு என்ற போணிசிய நகரத்திலிருந்த கோயில் ஒன்றில், ஒரு பெண், தனது தலையை சிரைத்துக் கொண்டு, மயிரைக் கடவுளுக்கு அளித்தாள் என்று லூசியன் என்ற ஆய்வாளர் குறிப்பிடுகின்றார். அக்கோயிலின் கடவுள், பாதி மனிதனாகவும், இடுப்புக்குக் கீழே மீனாகவும் இருந்தான். அக்கோயிலின் அருகே, புனிதமான மீன்குளம்

ஒன்றும் இருந்தது. இம்மீன்கடவுள், பிற்கால இந்தியக் கடவுளின் மச்சாவதாரக் கதையை நினைவுபடுத்துகிறது. மெசபத்தோமிய வெள்ளக் கதையில், மீனா என்ற கடவுள் சொல்லப்பட்டிருக்கிறான். மேற்கண்ட கதைகளைப் பற்றிய செய்திகளில், இந்தியாவின் சமய நம்பிக்கைகளும், சடங்குகளும், எவ்வாறு உலக அளவிலும் நடைமுறையில் இருந்தன என்பதை அறியலாம். மயிரைக் கடவுளின் காணிக்கைப் பொருளாக்குவது, குறிப்பாகத் திருமணத்துக்கு முன் பெண் தனது மயிரை அளிப்பது, அக்கால நடைமுறைகளில் ஒன்று. கடவுளுக்கு அளித்த வாக்கின்படி, தன் மயிரைக் காணிக்கையாக அளிப்பது, தென்னிந்தியாவிலும், குறிப்பாக திருப்பதி, சுவாமிமலை வைத்தீசுவரன் கோயில் போன்ற கோயில்களில் இப்போதும் வழக்கில் உள்ளன. கன்னிப் பெண்கள், மணமான பெண்கள், சிறு குழந்தைகள் ஆகியோர், இவ்வாறான வாக்குறுதிகளைக் கடவுளுக்கு அளித்து, நிறைவேற்றுகின்றனர்.

தீ மிதிப்பது என்ற சமயச் சடங்கு குறிப்பாக, திரவுபதி அம்மனுக்கென நடைபெறும் நிகழ்வு தற்காலத்தில் தமிழ்நாட்டில் நடைமுறையில் உள்ளது. இதுபோன்ற தீ மிதி நிகழ்வுகள், கப்படோசியா என்ற நகரிலிருந்து ஆர்டெனிசு கோயில்களில் நடைபெற்றதாக, சுமேரிய வரலாறு தெரிவிக்கின்றது.

அடுத்து நாம், பாம்புகள் தொடர்பான சமயச் சடங்குகளைக் காணலாம். அக்காலத்து நாகர்கள் என்ற பழங்குடியினர், பாம்பு வழிபாட்டை, இயற்கை வழிபாடாகவே கருதினர். தொன்மக் கதைகளில், சிவனுடனும், கந்தனுடனும் பாம்பு என்ற நாகம் தொடர்பு கொண்டிருந்ததை அறியலாம். தற்போதும் தென்னிந்தியாவில், நாகத்தின் உருவம் கொண்ட நாகக்கல்லை, மக்கள் வழிபட்டு வருகின்றனர். இந்நாகக் கற்கள் பலவாறான வடிவங்களில் உள்ளன. சிலவற்றை ஒற்றை நாகம் நிற்பது போலவும், மேலும் சிலவற்றில் இரண்டு

நாகங்கள் பின்னி பிணைந்திருப்பது போலவும் காணப்படுகின்றன. இவ்வாறான நாகக் கற்கள், கோலிலின் உள்ளேயுள்ள அரசமரம் அல்லது வேப்பமரம் ஆகியவற்றின் கீழ் வரிசையாக வைக்கப்பட்டுள்ளன. தென்னிந்தியாவிலும், குறிப்பாக மலபார் பகுதிகளிலும், இந்நாகக்கற்கள் பரவலாக வழிபடப்படுகின்றன. இது, வளமைக்கான சமயச் சடங்காகக் கருதப்படுகின்றது. குழந்தையற்ற பெண், நாகக் கடவுளை வேண்டினால், குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கை உள்ளதால், நாகக் கடவுளுக்குப் பலவாறான காணிக்கைகளைச் செலுத்தி, வேண்டுதல் செய்கின்றனர். சிந்துவெளியில், வண்ணப்பூச்சுகள் கொண்ட மண்பானைகள், தட்டுகள் களிமண் பலகைகளில் நாகத்தின் உருவங்கள் வரையப்பட்டுள்ளதை அறியலாம். கிரீட் தீவில், நாகவழிபாடு, சிறப்புக்குரியதாக இருந்தது. இரண்டு கோடரிகள் என்ற முத்திரையில் நாக வழிபாடு தொடர்புடையதாகக் கருதப்படுகிறது.

## 29. வேத ஆரியத்தில் இடமாற்றம்

(Advent of the Vedic Aryan)



| தமிழ் | வேதம் |
|---|---|
| அடர் | அத்வன் |
| அப்பம் | அபூப |
| அம் | அப் |
| அம்பு | அம்பு |
| அரவம் | ரவ |
| அன்னை | நனா |
| ஆணி | ஆணி |
| ஆம் | அப் |
| ஆயிரம் | சகசுர |
| இலக்கு | லக்ச |
| உதவி | ஊடா |
| உரு | உருவ |
| உருவம் | ரூப |
| உலகம் | லோக |

| | |
|---|---|
| கடு-கடுகு கடுகம் | கதுக |
| கருமம் | கர்மம் |
| கருள் | க்ருசு |
| கலுழன் | கருட |
| கலை | கலா |
| கன்னி | கனி |
| கால் - காலம் | காலா |
| கூடல் | குட |
| கும்பம் | கும்ப |
| குமரன் | குமார |
| குமுதம் | குமுத - குமுத் |
| கோட்டம் | கோச்ட |
| கொப்பம் | கூப |
| சமர் - சமர | சமர |
| சாமி | சுயாம |
| சாலை | காலா |
| சுவணம் | அபர்ண |
| சுல் | க்சுல்ல, க்சுல்லக |
| சுர் | சூர |
| சொலவம் | சுலோக |
| தண்டம் | டண்ட |
| தயிர் | ததி |
| தாயம் | தாய |
| திடம் | த்ரட |
| திரு | சிரீ |
| திறம் | ச்திர |
| தீர்வு-தீவு | த்வீப |
| தும்பரம் | உடும்பர |
| துவள் | த்வர் |
| தூண்-துணம் | தூண |

| | |
|---|---|
| தமிழ் | வேதம் |
| தூணி | தூணி |
| தூணி | த்ரோண |
| தூதன் | தூதா |
| தோள் | தோச |
| நால் - நலா | நானா |
| நாவல் | நாவல் |
| நாளம் | நால |
| நில்-கிலம் | நீல |
| படி | ப்ரடி |
| படிமை | ப்ரதிமா |
| படம் | பட |
| பரம் | பர |
| பழம் | பல |
| பாகம் | காக |
| பாதை | பாத |
| மண்டலம் | மண்டல |
| மடு-மட்டு | மது |
| மந்திரம் | மந்த்ர |
| மயிர் | சுமதரு |
| மயில் | மயூர |
| மா | மா |
| மாகம் | மாக |
| மாதம் | மாசு-மாச |
| மாயை | மாயா |
| முகம் | முக |
| முத்து-முத்தம் | முக்த |
| மேழம் | மேச |
| மேழகம் | மேசக |
| மோதிரம் | மூத்ர |
| வட்டம் | வ்ரட்ட |

| | |
|---|---|
| வளை | வல |
| விரல் | ப்ரிசு |
| விடை | வீச |
| விட்டு | விந்து |
| விந்து | பிந்து |
| பிண்டம் | பிண்ட |
| மத்து | மன்த |

**வினைச் சொற்கள்**

| **தமிழ்** | **வேதம்** |
|---|---|
| அகவு | க்வ |
| அடு, அடை | அசு |
| அரி | க்ர் |
| அருந்து | அட், அசு |
| அலப்பு | லப் |
| இய்-இயல் | அய் |
| உகு | உக்சு |
| உய் | ஊக் |
| உகு | ருக் |
| உள்-ஒன் | உசு |
| ஊர் | ரூக் |
| கல்-கன் | கன் |
| காய் | கசு |
| குரு | க்ருத் |
| சலசல | சலசல |
| சலி-செல் | செல் |
| சை | சி |
| சார் | சிரீ |
| சாவி | சூப் |
| சிதை | சிட் |
| சுள் | சுள் |
| செவியுறு | சுரு |

| | |
|---|---|
| சேமம் | க்சேம |
| சொலி | சுவல் |
| தகு | தக் |
| தாவு | தாவ் |
| துண்டு | துட் |
| தீ-தீய் | டி, டிவ, ட்ய, ட்யத் |
| து | து |
| துர | தூர் |
| நடி | நர்ட் |
| நாள் | நசு |
| நுண்டு | நுசு |
| நை | நசு |
| பகு | பச்சு |
| மசக்கு | மிக்சு |
| படர் | பட் |
| படு | பட் |
| பர | பட் |
| பிசை | பிசு |
| பிடு | பிட் |
| புகு | புசு |
| புரி | ப்ரி |
| பூ | பூ |
| பெரு | ப்ர்க் |
| மகிள் | மக் |
| மட | மட் |
| மிட | ம்ரிட் |
| மதி | மத் |
| மாய் | மீ |
| விடு | விசு |
| வியல் | வியக் |

# 30. சமற்கிருதத்தின் தொடக்கம்



வேத ஆரியர்கள், பல்வேறு குழுக்களாக இந்தியாவுக்குள் நுழைந்த போதும், அவர்கள், இந்தியப் பழங்குடியினரோடு ஒப்பிடும்போது மிகச்சிறிய எண்ணிக்கையிலேயே இருந்தனர். திராவிடர்களே பெரும்பான்மையினராக இருந்தனர். அதனால், இயல்பாகவே, தங்கள் முன்னோர்களின் மொழியைத் துறந்து, இந்தியப் பழங்குடியினருடன் கலந்தனர். அவர்களுடைய மொழி, கிரேக்க, ஈரானிய மொழிகளோடு தொடர்பு கொண்டிருந்தது. தேவைப்பட்ட போது மட்டும், தங்கள் தாய் மொழியில் சில சொற்களைப் பயன்படுத்தி வந்தனர்.

வேத மொழி, திராவிட மொழியுடன் கலந்த வெளிப்பாடாகவே இருந்தது. அவர்கள் கையாண்ட பேச் சொலிகளும், கடன் பெற்ற சொற்களும் அதனை உறுதிப்படுத்துகின்றன.

இந்தியப் பழங்குடியினர் பேசி வந்த பழைய மொழிகள், வேத காலத்தில் நான்கு அல்லது ஐந்து மொழிகளாக அறியப்பட்டிருந்தன. பிராகிருதம், முன்பே உருவாக்கப்பட்டது, என்றவாறு பொருள்படும். வேத ஆரியர்கள், தங்கள் முன்னோர்களின் வழக்கிழந்த மொழியோடு, பிராகிருத மொழியைக் கலந்து, அடுத்தடுத்த ஆரியரின் தலைமுறைகள், செம்மைப்படுத்தப்பட்டன என்ற பொருள் கொண்ட சமறுகிருதம் என்ற மொழியை வளர்த்து, இலக்கியங்களைப் படைத்துக் கொண்டனர்.

# 31. வேத ஆரியர்களின் தென்னிந்தியப் புலப்பெயர்ச்சி சமற்கிருதம் முழுமை பெறல்



வட இந்தியாவில் ஆரியர்கள் நுழைந்த காலத்தில், அங்கு வாழ்ந்திருந்தவர்கள், திராவிடர்களே. வட இந்தியாவிற்கும், தென்னிந்தியாவுக்கும் தொடக்ககாலம் முதலே தொடர்புகள் இருந்து வந்துள்ளன.

வேத ஆரியர்கள், வட இந்தியாவில் வாழ்ந்திருந்த திராவிட அறிஞர்களிடமிருந்து, இலக்கண அறிவைப் பெற்றுக் கொண்டனர். பின்னர், பிரதி சாக்கியம் என்ற செம்மையற்ற வேத இலக்கணத்தை எழுதிக்கொண்டனர். முதல் சமற்கிருதக் காப்பியமாக, கி.மு.11 அல்லது 12ஆம் நூற்றாண்டில், வால்மீகியின் இராமாயணம் அறியப்படுகின்றது. ஆனாலும் சமற்கிருதத்தின் மொழி நிறைவு, வேத ஆரியர்கள், தென்னிந்தியாவுக்கு வந்து, தமிழர்களுடன் தொடர்பு கொண்ட பிறகே நடந்துற்றது. ஆயிரக்கணக்கானத் தமிழ்ச் சொற்கள், கடனாகப் பெறப்பட்டு உருவான சமற்கிருதத்தின் விரிவான இலக்கண ஐந்திரம் என்பது, தமிழ் மண்ணில் தான் தொகுக்கப்பட்டது. தமிழ் எழுத்து முறையைப் பின்பற்றிய சமற்கிருத வரிவடிவம், தொடரியல் உருபாக்கம் ஆகியவையே, அட்டத்யாயி என்ற நூலை எழுத உதவியது.

ஐந்திரம் என்ற நூல், தமிழின் மூலத்தைத் தெளிவாகக் கொண்டிருந்ததால், திட்டமிட்ட அழிப்பு முயற்சிகளால், முற்றிலுமாக அழிக்கப்பட்டதாகக் கருதப்படுகின்றது. பாணிணியின் இலக்கண நூல் வெளிவந்த நிலையில், அதன் முதல் 14 வகையான இலக்கண விதிகள், தமிழ் மூலத்தைக் கொண்டிருந்தது தெளிவாகத் தெரிந்தது. ஐந்திர நூலின் அனைத்துப் படிகளும், தேடிக் கண்டுபிடிக்கப்பட்டு, மொத்தமாக, மதுரைக்கு அருகிலுள்ள திருமால் குன்றம் என்ற இடத்திலிருந்த ஆழமான குளத்தில் வீசப்பட்டன.

மூன்று நிலைகளில், தமிழ்ச் சொற்கள், இந்திய ஆரிய மொழியில் இணைக்கப்பட்டன. திராவிட நாடோடிக் குழுக்கள் ஐரோப்பாவை நோக்கி புலம்பெயர்ந்து சென்றபோது, ஆரியத்துக்கு முன்பு அறியப்பட்டிருந்த ஆயிரக் கணக்கான தமிழ்ச் சொற்களைக் கொண்டு சென்றனர். தமிழ்ப் பரவலின் முதல் நிலை அதுவாகும். வேத ஆரியர்கள் வட இந்தியாவில் நுழைந்து தங்கள் இருப்பை உறுதி செய்து கொண்டபோது, பல புதிய தமிழ்ச் சொற்கள், வட இந்தியாவிலிருந்தவர்கள் வழியே ஆரியத்தில் கலந்தது. இது இரண்டாவது நிலையாகும். இறுதியாக, வேத ஆரியர்கள் தென்னிந்தியாவுக்குப் புலம் பெயர்ந்து வந்த போது, நேரிடையாகவும், மிகக் கூடுதலாகவும் தமிழ்ச் சொற்கள் ஆரியத்தில் கலந்தன. இது மூன்றாவது நிலையாகும்.

## சமற்கிருதத்தின் கூட்டுத் தன்மை

உலக அளவில், ஆரியக் குடும்ப மொழிகளில், சமற்கிருதமே முதன்மையானது என்ற தவறான நம்பிக்கை எழுந்துள்ளது. உண்மையில், சமற்கிருதம், செயற்கையான, கடன் பெற்ற சொற்களைக் கொண்ட மொழியென்பதும், அதில், ஐந்தில் இரண்டு பங்கு, மேலை மற்றும் மேலை மைய மொழிகளிலிருந்தும், ஐந்தில் இரண்டு பங்கு, திராவிட மொழிகளிலிருந்தும், மீதமுள்ள ஐந்தில் ஒரு பங்கே புதிய படைப்புச் சேர்க்கை என்றும் அறியப்படும்.

தமிழினின்றும் கடனாகப் பெறப்பட்ட சொற்கள், சமற்கிருதத்தில், திரிபுகளாகவும், பலவாறு மறைந்தும் அடியிற்கண்டவாறு காணப்படுகின்றன.

**1. எழுத்துகள் மாற்றம்**

| | | | |
|---|---|---|---|
| எ.கா. | முகம் | - | முக |
| | மடி | - | ம்ரு (இறத்தல்) |
| | மாதம் | - | மாசம் |
| | காய் | - | காசு (ஒளிர்தல்) |
| | காழி | - | நாடி (அளவை) |

சில சொற்கள், தமிழின் உயிர்மெய் வேர்களிலிருந்து திரிபுபட்டுள்ளன

| எ.கா. வேர்ச்சொல் | தமிழ் | சமற்கிருதம் |
|---|---|---|
| பகு | பக்கம் | பக்ச |
| | பாகம் | பாக |
| சட்டு | சட்டம் | |
| | சடம் | சட (உயிரற்ற) |
| | சடலம் | சரீரம் (உடல்) |
| | சடரம். | |

எழுத்துச் சேர்க்கை

| எ.கா | தமிழ் | சமற்கிருதம் |
|---|---|---|
| | காயம் | ஆகாச |
| | தாமரை | தாமரச |
| | பூதி | விபூதி |
| | மானம் | அனுமான, |
| | | உபமான, |
| | | சமான சம்மான, |
| | | ப்ரமான, பரிமான |

பல மாற்றப்பட்ட தமிழ்ச் சொற்களின், ர-ரு ஆகியவை, சமற்கிருதத்தில் புதிய உயிர் மெய்யாக வழக்கில் வந்தன.

| | | | |
|---|---|---|---|
| எ.கா | திடம் | - | த்ருத |
| | படி | - | ப்ரதி |

| | | |
|---|---|---|
| பவழம் | - | ப்ரவால |
| புடவி | - | ப்ருத்வி |
| புட்டம் | - | ப்ருச்ட |
| மேடு | - | ம்ருடு |
| மதங்கம் | - | ம்ருதங்க |
| விடை | - | வ்ருக |

**எழுத்துகளின் நீக்கம்**

பொது விதியாக, சொற்களில் உயிர்மெய் ஈறுகள், தமிழைப் போல் அல்லாமல், சமற்கிருதத்தில் முற்றிலுமாக விடப்படுகின்றன.

எ.கா. மண்டலம் - மண்டல

மண்டகம் - மண்டபம் - மண்டப

சில சொற்களில், சில எழுத்துக்களே விடப்படுகின்றன.

எ.கா. அருந்து - அத்

செவியுறு - ச்று

சில சொற்கள், மாறாமலேயே உள்ளன.

எ.கா. அம்பு - அம்பு

ஆணி - ஆணி

பல விளிச் சொற்கள் தெளிவான சொல்லடைவுகளாக திரிபுபட்டுள்ளன.

எ.கா. அத்ர (இங்கே), அதுனா (இப்பொழுது)

இச்சொற்கள், அண்மையைச் சேய்மைகளாகச் சுட்டுகின்றன. விந்தியப் பகுதிகளைத் தவிர்த்த இந்தியா வெங்கும் ஒருமொழியின் கிளைகளே பேசப்பட்டு வந்தன. வட இந்திய மொழிகளில் மேஞ்சிறப்பு என்னவெனில், அவை சமற்கிருதம் அல்லது பிராகிருதம் ஆகியவற்றிலிருந்து கிளைத்திருப்பதுதான். தென்னிந்திய மொழிகள், திராவிட மொழிகள் என்ற அளவில், வட இந்தியாவில் பேசப்பட்டு வந்த திராவிட மொழிகள், தென்னிந்திய மொழிகளைவிட,

சமற்கிருதக் தாக்கங்களால் பெரிதும் திரிபுபட்டன என்று கூறுவேன். புதிய கற்கால அளவில், வட இந்தியாவில் பேசப்பட்ட மொழிகள் சமற்கிருத, பிராகிருதத் தாக்கங்கள் இன்றி, தென்னிந்திய மொழித் தொடர்புகளையே கொண்டிருந்தன. பிராகிருத மொழியின் இலக்கியங்களில் காணப்படும் சொற்களில் சிலவற்றை நோக்கும்போது, அவை செயற்கையாக உருவாக்கப்பட்ட சொற்களாகவே உள்ளன. இருப்பினும் அக்செயற்கையான சொற்களை, கீழ் நிலையிலிருந்த மக்கள் அறிந்திருக்கவில்லை. அச்செயற்கையான சொற்களில் பல சமற்கிருதத்துடன் இணைந்திருந்த போதிலும், வட இந்திய மக்களின் பேச்சு மொழியினின்றும் முற்றிலும் மாறு பட்டிருந்ததை, அசோகனின் கல்வெட்டுகள் வெளிப்படுத்துகின்றன. இந்த பேச்சு வழக்கு மொழிகள், காதியன் (Gaudian) மொழிகளாக, பஞ்சாபிலிருந்து ஓரிசா வரை, வடஇந்தியாவில் பேசப்பட்டு வருகின்றன. இவை, தென்னிந்திய திராவிட மொழிகளின் கட்டமைப்போடு, நெருங்கிய தொடர்புடையவையாகவும் உள்ளன.

மொழிக் குடும்பங்களிடையே காணப்படும் ஒற்றுமைகள், பேச்சு வழக்கின் ஒப்புமையில் மட்டும் தீர்மானிக்கப்படவில்லை. ஆய்வுகளின் அடிப்படையில் நோக்கும் போது, அம்மொழிகளின் அடிப்படை கட்டமைப்புகள், உருவமைப்புகள், பால் தொடர்பானவை, பல எண்ணிக்கையிலான பெயர்ச் சொற்கள், பெயரடைகள், செய்வினை, செயப்பாட்டு வினை, எண்ணிக்கை, முக்காலங்கள் பற்றிய வினைச் சொற்கள், வினைச் சொற்களின் எச்சங்கள், உருபனியல் அமைப்புகள், சொல்லடுக்குகள், அவை சொற்றொடர்களில் பயன்படுத்தப்பட்டுள்ள முறைகள், தோற்றம் மற்றும் மரபியல் தொடர்பானவை அனைத்தும் ஒற்றுமைப்படுகின்றன. வடஇந்திய, தென்னிந்திய மொழிகளை ஒப்பாய்வு செய்யும் போது, அடிப்படையான இலக்கண விதிகளும் கட்டமைப்புகளும் ஒரு சில சொற்களைத் தவிர்த்து,

இரண்டு மொழிகளுக்கிடையேயான தொடர்புகள் ஒன்றுபோல் ஒற்றுமைப்படுவதால் ஒன்றிலிருந்து மற்றொரு மொழிக்கு, மொழி பெயர்ப்பதில் இடையூறுகள் எவையும் இல்லை. ஆனால், சமற்கிருதம் அல்லது ஆங்கில மொழியிலிருந்து, முற்கால, தற்கால இந்திய மொழிகளுக்கு, மொழி மாற்றம் செய்ய இயலாத நிலையுள்ளது. ஆங்கிலமும் பாரசீகமும் இந்திய செர்மானிய மொழிக் குடும்பத்தில் வருவதாலும், அவை பகுப்பாய்வு நிலையில் இருப்பதாலும், இவை, இலக்கணக் கட்டமைப்பில், தென்னிந்திய மொழிகளோடு ஒற்றுமைப்படுகின்றன.

ஒரு மொழி, மற்றொரு மொழியினின்று, பெரும்பாலான சொற்களைக் கடனாகப் பெறுவதற்கு வாய்ப்புகள் உண்டு என்பதை, மொழிகள் பற்றிய ஒப்பாய்வுகளால் அறியலாம். ஆனால் இலக்கணக் கட்டமைப்பு என்பது. அதனை உருவாக்கியவர்களின் மொழி அறிவுத் திறந்தாலும், பட்டறிவாலும், அறிவார்ந்த சிந்தனைகளாலும் உருவாக்கப்பட்டது. இதனை கடன் பெற்ற மொழிகள், தங்கள் விருப்பம் போல் மாற்றிக் கொள்ளவோ, திருத்தவோ இயலாது. எந்த அயல் நாட்டு மொழியும், இந்த விதிகளை மீறவும் முடியாது. இந்தியாவில் பேச்சு வழக்கிலும் இலக்கிய நடைமுறையிலும் உள்ள மொழிகள், அசோகன் காலம் முதல் இன்றுவரையிலும்கூட, மாற்றம் பெறாமல், ஒன்று போலவே அறியப்படுகின்றன.

இதனையே நான் கருத்தில் கொண்டு, இந்தியாவில் பேசப்படும் அனைத்து மொழிகளும் (நிசாட மொழி உட்பட) ஒரு குடும்பத்தைச் சார்ந்து பின்னர் கிளைத்தவைகளே என்றும், அவை, இந்திய செர்மானிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்தவை அல்ல என்றும் முடிவுக்கு வந்தேன். எனவே, இந்திய மொழிகள், தேசி என்றவாறு அடிப்படைக் கட்டமைப்பைக் கொண்டவை யென்றும், இவை புதிய கற்காலத்தில் இந்தியாவில் வளர்ச்சியுற்றன என்றும் கருதுகிறேன்.

ஆயிரக்கணக்கான தமிழ்ச் சொற்கள், சமற்கிருத மொழியில் இடம் பெற்றிருந்தாலும், சமற்கிருத மொழியியலாளர்கள், இதனை ஏற்றுக் கொள்வதில்லை. சமற்கிருத மொழியிலுள்ள அனைத்துச் சொற்களும், வேர்ச் சொற்களும், சமற்கிருத மொழியிலேயே உள்ளனவென்றும், அவை மற்றெந்த மொழிகளுக்கும் உரிமையானவை அல்லவென்றும், அவை தங்களுடைய மொழியின் சொத்தே என்றும் உரிமை கொண்டாடுகின்றனர்.

| | | |
|---|---|---|
| எ.கா. | தமிழ் | சமற்கிருதம் |
| | சிவ (சிவந்த ஒன்று) | சிவ (நல்ல ஒன்று) |
| | நாகம் (நகர், நகர்தல் என்ற சொல்லில் இருந்து) | |

நாக (நாகம், நாக மலை என்ற சொல்லில் இருந்து)

சமற்கிருத மொழி பற்றிய என்னுடைய ஆய்வுகள், சமற்கிருதத்தின் தோற்றம் வளர்ச்சி என்ற நூலில், விரிவாகப் பதிவு செய்துள்ளேன்.

**சமற்கிருத இலக்கிய வளர்ச்சியும் முன்னேற்றமும்.**

இந்திய ஆரியர்களின் முதல் இலக்கியத் தொகுப்பான வேத மந்திரங்கள், எழுதப்படாமலேயே (எழுதாக் கிளவியாக), பல காலம் இருந்ததற்கான காரணம் யாதெனில், அதனைப் பதிவு செய்வதற்கான எழுத்து வடிவங்கள் அறியப்படவில்லை என்பது தான். வேத மந்திரங்களை, ஆரியர்கள் கமுக்கமாகவே வைத்திருக்க விரும்பினர். எவ்வாறெனில், அவை, காற்றலைகளில் மிதந்திருந்தவையென்றும், தங்களுடைய மனித ஆற்றலுக்கு மேம்பட்ட அறிவினால் அவற்றை ஈர்த்துப் படித்துணர்ந்ததாகவும் கூறிக்கொண்டனர். மேலும், வேத மந்திரங்கள் மற்ற இந்திய இலக்கியங்களைக் காட்டிலும் தரம் குறைந்தவையென்பதையறிந்திருந்ததால், அவற்றை வெளிப்படுத்தவும் தயங்கினர். அதனால், அதனை மெருகூட்ட, இணைப்புகளையும் மாற்றங்களையும் எப்போதெல்லாம் தேவையோ அப்போதெல்லாம் மாற்றம் செய்து கொண்டனர்.

பிராமணங்களும், ஆரண்யங்களும், உபநிசத்துகளும் பின்னர் எழுதப்பட்டன. இவையனைத்தும், உடற்பயிற்சியில் தெளிவு பெற்றிருந்த தமிழ் முனிவர்களின் மூலமான மெய்ம நெறியைத் தழுவி எழுதப்பட்டன. மிக எளிமையான வேத வழிகளுக்கும், முதிர்ந்த மெய்ம நெறியான உபநிசத்துகளுக்கும் இடையே, இணைக்க இயலாத இடைவெளியிருந்தது. சில மெய்ம நெறிகள், தமிழ்ச் சொற்களின் திரிபுகளைக் கொண்டு உருவாக்கப்பட்டன. எடுத்துக் காட்டாக, மாயை என்பது மாயா என்றும் அழிமுனை என்பது, அசுமுனா என்றும் திரிக்கப்பட்டன. ஆரியர்களின் மகாவாக்யா (பெரும் சொற்றொடர்) வில் சொல்லப்பட்டுள்ள தத்துவமசி என்ற சொல், தான் - நூன் - இருத்தி ஆகிய மூன்று தமிழ்ச் சொற்களின் கூட்டுத் திரிபாக உள்ளது.

ஏரண விளக்கங்கள் தமிழினின்றும் மொழி பெயர்க்கப்பட்டு, பல படிநிலைகளாக உள்ளன. தமிழ் அமைப்பு முறைகளே, வைகேடிகம் என்ற சமற்கிருத நூலில் தாளாண்மை செய்யப்பட்டுள்ளது.

அடுத்து, 18 புராணங்களும், 18 துணைப் புராணங்களும், தமிழ்ச் சூழலில், தமிழ் மூலத்தில் அறியப்படுகின்றன.

### சமற்கிருத எழுத்துமுறை

சமற்கிருத எழுத்து முறையிலான குறிப்புகள், தமிழ் நாட்டில் முதன்முதலாக, கிரந்தமுறையில் மாற்றம் பெற்றவைகளாக, தமிழ் வரிவடிவங்களையொத்தும், தமிழின் உருப் படிவங்களைப் பின்பற்றியும் அமைக்கப்பட்டன. முதலில் தமிழகம் வந்த ஆரியக் குடியேற்றத்தினர், தேவையான, திருத்தங்களை, ஆரிய மொழியியலுக்கு ஏற்றவாறு மாற்றம் செய்து கொண்டனர்.

விரிவானதும், குழப்பம் மிகுந்ததுமான சமற்கிருத எழுத்துமுறை, உயிர்மெய்களின் சில அசைகளைக் கொண்டு, ஒலியுள்ள, ஒலியற்ற நிறுத்தங்களைக் கொண்டுள்ளன தமிழினின்றும் திரிபுபட்ட நிலையை, மறைக்க முயன்றுள்ளன.

## சமற்கிருத இலக்கியத்தின் வளமைச் சேர்ப்பு

தென்னிந்தியாவுக்குப் பலம்பெயர்ந்த வேத ஆரியர்கள், தமிழ் இலக்கியங்களை ஆழ்ந்தும் விரிவாகவும் கற்றனர். பின்னர், தமிழிலிருந்த கலை, அறிவியல் சார்ந்த அனைத்து நூல்களையும், சமற்கிருதத்தில், தங்கள் கருப்பொருள் போல் காட்டுவதற்கென மொழிபெயர்த்தனர். தமிழைக் கற்ற அளவில், சில துணை நூல்களையும், தமிழ்ச் சாயலில் சில நூல்களையும் படைத்து, தமிழர்கள், தங்கள் மேல் ஐயம் கொள்ளாத வகையில் பார்த்துக் கொண்டனர். கூடவே, அத்தமிழ் நூல்களில், ஆரியக் கொள்கைகளையும் புகுத்தினர். தங்களை இவ்வுலகின் தேவர்கள் அல்லது கடவுளர் என்று சொல்லிக் கொண்ட நிலையில், அது உண்மைதானா என்றும் ஆய்வு செய்யவோ, கேள்விகளைக் கேட்கவோ எவரும் முன்வரவில்லை, தமிழ்நாட்டு மன்னர்களால், மிகுந்த சிறப்புகள் அளிக்கப்பட்டு, போற்றப்பட்டனர்.

அகத்தியர், மருத்துவ இயலையும், நாரதர் இசையியலையும், தமிழினின்று, சமற்கிருதத்தில் மொழி பெயர்த்தனர் என்று சொல்லப்படுகின்றது. சமற்கிருதத்தில் அறியப்படும் நாட்டியவியலும், நாடகவியலும் பரதன் என்பவனால் எழுதப்பட்டது என்று சொல்லப்பட்டாலும், பரதன் என்ற பெயரைக் கொண்ட தமிழ் ஆசிரியனே எழுதியதை, மொழி பெயர்த்துக் கொண்டனர் என்றும் அறியலாம்.

இடக்கிடப்பியல் பற்றுகள் (topographical accounts) உள்ளிட்ட, பதிவு செய்யப்படாத கலை மற்றும் அறிவியல் செய்திகள், சமற்கிருதத்தில் குறைவாகவே எழுதப்பட்டன.

ஒரு தமிழ்ப் படைப்பு, சமற்கிருதத்தில் மொழிமாற்றம் செய்யப்பட்டபோது, அதில் புதிய செய்திகளை இணைத்து, புதிய பெயரீட்டு முறையைப் புகுத்தி (nomenclature), மொழி பெயர்க்கப்பட்டது. சமற்கிருத மூலமே எனக் காட்ட முயன்றுள்ளனர். இசைத்துறையில், ஆரியர்களின் இது போன்ற

உத்தியை வேறெங்கும் காணவியலாது. குமரிக் கண்டத்துத் தமிழ் இசை வாணர்கள், இசையுணர்வில், தன்னிகரற்ற மெல்லிசை அறிவைக் கொண்டிருந்தனர். ஆயிரக்கணக்கான வகைகளில், இசைநுணுக்கங்களை அறிந்து, நான்கு பிரிவுகளாக அவற்றை வகைப்படுத்தியிருந்தனர். ஆயப்பாலை, வட்டப் பாலை, சதரப்பாலை, முக்கோணப் பாலை என்பனவாகும். இவற்றின் நுணுக்கங்களை அறியாத ஆரியர்கள், ஆர்வமிகுதியால், அவற்றை அறியமுயன்று, தோல்வியுற்று, தொல் தமிழ் இசையைப் புரிந்து கொள்ள இயலாத நிலையில், அவற்றை அழித்துவிட்டனர்.

தென்னிந்திய இசை, பொதுவாக, கர்நாடக இசையென்று அழைக்கப்படும். இது சமற்கிருதக் கலைச் சொற்களால் மாற்றம் செய்யப்பட்ட தமிழ் இசையே எனலாம். மிகவும் அழகான, பொருத்தமான பெயர்களைக் கொண்டிருந்த தமிழ் இசைப் பண்களுக்கு சமற்கிருதப் பெயர்களை வலிந்து புகுத்தி மாற்றம் செய்தனர். மாற்றம் பெற்ற தமிழ்ப் பெயர்களாவன எ.கா. கேள்வி - சுருதியெனவும், நிலை-தாயி எனவும் திரிக்கப்பட்டுள்ளன.

## 32. தொல்காப்பியக் காலம்



கண்ணனுடைய அண்ணன் பலராமன் பற்றிய ஓலைச் சுவடிகளின் குறிப்புகள் தொல்காப்பியத்தின் 285 ஆவது விதியில் சொல்லப்பட்டுள்ளபடி, நான்மறை முற்றிய என்ற அடைமொழி, நான்கு வேதங்களை முற்றிலுமாக அறிந்த என்ற பொருளைத் தரும். ஆதங்கோட்டாசான் தொல்காப்பியத்துக்கு அளித்த பாயிரத்தில் புலவர்களும் இலக்கண ஆசிரியர்களும் நிறைந்திருந்த அவையில், தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்டு ஒப்புதல் பெறப்பட்ட செய்தியின் படியும், ஐந்திரம் நிறைந்த என்ற அடைமொழியின் படியும் தொல்காப்பியத்தைப் படைத்த தொல்காப்பியர், கி.மு.1000-500 ஆண்டுகளில் வாழ்ந்திருந்தார் என்று அறியலாம். மகாபாரதம், அட்டத்யாயி ஆகியவையும் இதே கால அளவில் சொல்லப்படுகின்றன.

பேராசிரியர் இராமச்சந்திர தீட்சிதர், தென்னிந்திய வரலாற்றுக்கு ஏற்புடைய, நம்பகத்தன்மையுடைய ஆசிரியராகக் கருதப்படுபவர். அவருடைய கூற்றின்படி, மூன்றாம் தமிழ்ச் சங்கம், கி.மு.500 ஆண்டுகளில் தோற்றம் பெற்றது என்று சொல்லப்படும். தொல்காப்பியரின் இலக்கணம்,

மூன்றாம் தமிழ்ச் சங்கத்துக்கு முன் வைக்கப்பட்டாலும், அதற்குச் சில நூற்றாண்டுகள் முன்பே அவர் வாழ்த்திருந்தவராவார்.

தொல்காப்பியம், தமிழ்நாடு, தன்னாட்சி உரிமை கொண்ட, அமைதியான, வளமான நாடுகளாக பாண்டிய நாடு சோழநாடு, சேரநாடு ஆகியவற்றையும் மன்னர் மரபுகளையும், வான்புகழ் மூவர் தண் பொழில் வரைப்பு என்றவாறு சுட்டுகிறது. சங்க இலக்கியங்கள் தரும் செய்திகளின்படி, மூவேந்தர்களும் தமக்குள் போர் வெறி கொண்டிருந்தனர் என்றும், அவர்களுக்குத் துணையாகச் சில சிற்றரசர்களும் இருந்தனர் என்றும் கூறுகிறது. மூவேந்தர்கள், முடிசூடத் தன்னுரிமைப் பெற்றிருந்த காலத்துக்கு முன்னர், தொல்காப்பியர் வாழ்ந்திருக்க வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது.

செய்யுள் வழக்கில், உயர்திணைப் பன்மைச் சொற்களை, தொல்காப்பியர் முற்றிலுமாகத் தவிர்த்திருந்தாலும், மூன்றாம் தமிழ்ச்சங்கப் பாடல்கள், திருக்குறள் உள்ளிட்டவைகளில், பரவலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. தொல்காப்பியப் பயன்பாடு, நீண்டநாள் இடைவெளியில், பிற இலக்கியங்களால் தவிர்க்கப்பட்டுள்ளன எனலாம்.

தூய்மையும், அழகான நடையையும் கொண்டுள்ள தொல்காப்பியம், மூன்றாம் தமிழ்ச் சங்கத்துக்கு நெடுங்காலத்துக்கு முன்பே அறியப்பட்டிருந்தது.

தமிழ் நாட்டின் நான்கெல்லைகள், தொல்காப்பியர் காலத்தில், நாற்பெயர் எல்லை, என்று 1136 அவது நூற்பா குறிப்பிட்டு மேற்கு மலைத் தொடருக்கும் கடலுக்கும் இடையே இருந்த நீளமான நிலப்பகுதி, பெரும்பாலான மக்களால் குடியிருப்புப் பகுதிகளாக மாற இருப்பதையும் குறிப்பிடுகின்றது.

தொல்காப்பியர் காலத்து வட எல்லைகளாக வடுக நாடும், தென் எல்லையாக குமரியாறும், கிழக்கே வங்கக் கடலும்,

மேற்கே மேற்கு மலைத்தொடரும் அமைந்திருந்ததை நாற்பெயர் எல்லை என்ற சொல் குறிப்பிட்டு, நான்கு எல்லைகளும் வெவ்வேறு பெயர்களால் அறியப்பட்டிருந்தன.

சில புவியியல் நிகழ்வுகளால், மேற்குக் கடற்கரை, கடல் உள்வாங்கி, மேலும் விரிந்தது. பரசுராமன் கடல்மீது அம்பெய்து கடல்நீரை வற்றச் செய்து, நிலப்பகுதியை விரிவுபடுத்தினான் என்றும், தனது தவவலிமையில் அதனை நிகழ்த்தினான் என்றும் சொல்லப்படுகிறது.

கொங்கு நாடு தொடக்கத்தில் சேர நாட்டுடன் இணைந்து, திருச்சிராப்பள்ளி மாவட்டம், கரூரைத் தலைநகராகக் கொண்டிருந்தது. மேற்குக் கடற்கரை விரிவடைந்தவுடன் மக்கள் பெருமளவில், அங்கே குடியேறினர். கொங்கு நாடு, தமிழகத்தின் மையப்பகுதியாக இருந்த போதிலும், சேரர்கள், தங்கள் தலைநகரை, துறைமுக நகரமான வஞ்சிக்கு மாற்றியதோடு, வஞ்சியையும் கரூர் என்றே அழைத்தனர். அது பற்றியே கேரளத்தின் கிழக்குப் பகுதி மக்கள், கிழக்கு - மேற்கு என்ற சொற்களை இப்போதும் பயன்படுத்தி வருகின்றனர்.

தொல்காப்பியம், சமற்கிருதத்தைத் தவிர்த்த வேறெந்த வெளிநாட்டு மொழிச் சொற்களையும் கொண்டிருக்கவில்லை. 1081ஆம் விதியில் சொல்லப்படும் ஓரை என்ற சொல், முற்றிலும் தூய்மையான தமிழ்ச் சொல்லாகும். இது, விண்மீன் கூட்டங்களையும், வானத்து உறுப்புகளையும் குறிக்கின்றது. ஓரா என்ற கிரேக்கச் சொல், நேரத்தைக் குறிப்பதாகச் சொல்லப் படுவதற்கும், ஓரைக்கும் தொடர்பேதுமில்லை.

மேற்கண்ட காரணங்களின் அடிப்படையில், தொல்காப்பியர், கி.மு. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தார் என்ற முடிவுக்கு வரலாம்.

## ३३. தொல்காப்பியப் பிழைகள்



தொல்காப்பியர் சமற்கிருத மொழியாளர் என்பதால், சில தவறுகளைத் தமது படைப்பில் செய்துள்ளார்.

*1. சகரம் என்பது சொல்லுக்கு முதலில் வராது (62)*

பல அறிஞர்கள், தமிழ் இலக்கணம், செய்யுள் வழக்கிற்காகவே உருவாக்கப்பட்டது என்பதை அறிந்திருக்கவில்லை. செய்யுளில் பேச்சு வழக்கும், கொச்சைச் சொற்களும் இடம் பெறுவதில்லை. எனவே, தொல்காப்பியத்தை ஓர் அகராதி போன்றே கருதுகின்றனர். அதில் குறிப்பிட்ட சொல் எதுவும் இல்லையென்றால், அச்சொல், அக்காலத்தில், தமிழில் வழக்கில் இல்லை யென்றும், தொல்காப்பியர் காலத்துக்கு முன்பும் அறியப்படவில்லை யென்றும் முடிவு செய்து விடுகின்றனர்.

முதல் தமிழ்ச் சங்கத்துக்கு முன்பே, தமிழில் அறியப்பட்டிருந்த சகரத்தில் தொடங்கும், தூய்மையான பேச்சு வழக்குச் சொற்கள் வருமாறு

| | | | |
|---|---|---|---|
| சக்கை | சந்து | சமையம் | சவலை |
| சகடி | சந்தை | சரக்கு | சவை |
| சச்சரவு | சப்பட்டை | சரடு | சல் |

| | | | |
|---|---|---|---|
| சட்டம் | சப்பரம் | சரள் | சன்னை |
| சட்டி | சப்பாணி | சரி | சளி |
| சட்டை | சப்பு (வினை) | சருகு | சற்று |
| சடங்கு | சப்பு (பெயர்) | சல்லடை | சறுக்கு |
| சடுகுடு | சப்பை | சல்லி | சன்மை |
| சந்தி | சம்பு | சலங்கை | சவம் |
| சண்டு | சம்பா | சலவன் | |
| சண்டை | சமட்டு | சலவை | |
| சண்ணு | சம்மட்டி | சலி | |
| சதரம் | சம்பளம் | சலுகை | |
| சதுப்பு | சம்மணம் | சவ்வு | |
| சடை | சமம் | சவள் | |
| சந்தனம் | சமை | சவளம் | |
| சமர்த்து | சவளி | சனர் | |

**ஒலிக் குறிப்புகள்**

| | | |
|---|---|---|
| சக்கு | சடக்கு | சவக்கு |
| சகசக | சரசர | சளசள |
| சத்து | சரட்டு | சளப்பு |
| சடக்கு | சரேல் | சளார் |
| சடசட | சல்சல் | |
| சடார் | சல்சல | |

செத்தான் (இறந்தான்) என்பதின் முதற்சொல் சத்தான் என்பதாகும். ஒப்பாய்வு மொழியியல் பற்றி அறியாதவர்களால், தொல்காப்பியத்தைச் சரியாகப் புரிந்துகொள்ள இயலாது.

2. நுந்தை - நுண்டை என்ற சொற்களின் முதல் உயிர் அசையான உ என்ற குறில் (67), எப்போதும் ஈற்றில் வரும்.

3. வ என்ற உயிர் மெய், நான்கு சொற்களின் ஈற்றில் வரும் (81). வகரத்தில் முடியும்படி ஐந்து சொற்கள் உள்ளன.

கூட்டுச் சொல் எண்ணான தொண்ணூறு, ஒன்பதும் பத்தும் சேர்ந்தது (445)

தொண்டு=நூறு=தொண்ணூறு, உண்மையில் இது 900 என்று சொல்லப்பட வேண்டும்.

தொண்டு என்பது, எண் ஒன்பதைக் குறிப்பதாகும்.

அறியப்படாத சூழலில், தொன்பது, வழக்கிழந்து போயிற்று

தொண்டு என்பது ஒன்பதையும்,

தொன்பது என்பது தொண்ணூறையும்,

தொள்ளாயிரம், ஒன்பதாயிரம் என்றும்

சொல்லப்பட்டிருக்க வேண்டும்.

தொல்காப்பியர் இதனை மாற்றியமைத்துள்ளார்.

தொல்காப்பியரே, தொண்டு என்ற சொல்லை, ஒன்பது என்ற பொருளில் பல

இடங்களில் பயன் படுத்தியுள்ளார்.

தொண்ணூறு - தொள்ளாயிரம் எனத் தவறாகக் கூறியுள்ளார்.

5. தொள்ளாயிரம் என்பது, 9+100

தொண்டு + ஆயிரம், தொள்ளாயிரம், 9000(463)

6. OD (your) என்பது முதல் வேற்றுமையான நீயிர் என்பதிலிருந்து வந்தது. (326)

நூம் - நும், நீ + இர் = நீயிர்

7. வேணவா என்ற சொல், வேட்கை + அவா எனப்பிரியும்.

வேண் + அவா = வேணவா

8. செய்யும் என்ற பெயரெச்சம், நிகழ்காலத்திலும், எதிர்காலத்திலும் வரும். செய்கின்ற அல்லது செய்கிற என்பது, நிகழ்காலப் பெயரெச்சமாகும்.

**தொல்காப்பியத்தில் ஆரியச் சிந்தனைகள்**

1. தொல்காப்பியத்தின் முதல் நூற்பா, இறுதி அதிகாரம், இரண்டாவது பிரிவில், சமற்கிருதச் சொற்கள், தேவையில்லாமல், தமிழ்ச் சொற்களுக்கு மாற்றாக, செய்யுள் மொழி நடையில் இடம் பெற்றுள்ளன.

2. 19 ஆவது நூற்பா, இரண்டாம் அதிகாரம், மூன்றாம்

பிரிவில், பிராமணர்களின் ஆறு கடமைகள், தேவையில்லாமல் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

3. 71வது நூற்பா, இறுதி அதிகாரம், மூன்றாம் பிரிவில், அந்தணர் என்ற சொல் பிராமணத் துறவிகள் என்றவாறு சொல்லப்பட்டுள்ளது. அந்தணர்கள், பூணாலும், கமண்டலமும், முக்கோலும், உட்காரும் பலகையும் கொண்டிருந்தனர் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

4. தொல்காப்பியத்தில் சில சமற்கிருதச் சொற்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, சூத்திரர் வைசியர், ஞாபகம் போன்ற சொற்கள், தமிழில் வழக்கில் உள்ளன போல், நேர்மைப் படுத்தப்பட்டுள்ளன.

தொல்காப்பியத்தில் ஆரியச் சமற்கிருதம் பற்றிய மேற்கோள்கள்

1. 102 ஆவது நூற்பா, இறுதி அதிகாரமான எழுத்துகள் பற்றிய குறிப்பில், வேத மந்திரங்கள் பற்றிச் சொல்லப்பட்டுள்ளதால், தொல்காப்பியர் அவற்றை அறிந்திருந்தவர் என்று அறியலாம். பிராமணர் அல்லாத ஒருதமிழருக்கு, அக்காலத்தில் இவை பற்றியெல்லாம் அறிந்திருக்க வாய்ப்பில்லை.

2. இரண்டாம் நூற்பா, மூன்றாம் அதிகாரம், மூன்றாம் பிரிவில், திருட்டுத் தனமான காதல் பற்றி, தமிழருக்கும் ஆரியருக்கும இடையே ஒப்புமை சொல்லப்பட்டுள்ளது.

அகத்தியர் காலத் தமிழ் (கி.மு.10000 -5000)

அகத்தியர் காலம் அல்லது தமிழின் பொற்காலம் என்பது, முதற் சங்க காலமே என்பதை ஐயத்துக்கிடமின்றி அறியலாம். அக்கால அளவில், எந்த வெளிநாட்டுத் தொடர்பும் எவ்வகையிலும் அறியப்படவில்லை. ஆரியன் என்ற சொல்கூட அப்போது வழக்கில் இல்லை இலக்கியப் படைப்புகள் முழுவீச்சில் வெளிப்பட்டிருந்தன. மக்கள், வளமையின் எல்லைகளைத் தொட்டிருந்தனர். முறையான நேர்மையான அரசு நடைபெற்று வந்தது. தமிழகம் முழுவதும், உண்மையில் ஒரு கற்பனைப் பொன்னாடாகவே இருந்தது எனலாம்.

## 34. தமிழ் ஆரிய மயமாதல்



தென்னிந்தியாவுக்கு வந்த வேத ஆரியர்கள், குற்றமற்றவர்கள் என்றும், தெய்வத் தொடர்புடையவர்கள் என்றும தமிழ் நாட்டு மன்னர்கள் நம்பியதால், தொடக்கத்தில் அவர்களுடைய சமயச் சடங்குகளை ஏற்றுக்கொண்டனர். பின்னர் அவர்களின் ஊடுருவல், அனைத்துத் துறைகளிலும் நுழைந்து, தமிழ் நாட்டின் சமயச் சார்பற்ற நிலையிலும் மிகுந்தது.

வேத ஆரியர்கள் செய்த முதல் வேலை, தமிழகத்திலிருந்த கோயில்கள் அனைத்திலும், தமிழ் வழிபாட்டு முறையை அகற்றி, சமற்கிருதத்தைத் திணித்ததுதான். அத்துடன், பொது விழாக்களும், ஆரியச் சடங்களுக்குட்படுத்தப்பட்டன. இதுவே, தமிழின் அறிவிற்குத் தொடக்கமாகி, இன்றுவரை அந்நிலை தொடர்கின்றது.

தமிழ் மொழியின் சொற்கள், தேவையில்லாமல், சமற்கிருதத்துக்கு வலிந்து மாற்றப்பட்டன. தமிழர்கள் தங்கள் தாய் மொழியை மறக்கவும், சமற்கிருதச் சொற்களைப் பயன் படுத்தவும், ஆரியர்களின் நடைமுறைகளைப் பின்பற்றவும்

தூண்டப்பட்டனர்.

தமிழ் இலக்கியாங்களைத் தமிழர்களே படைத்திருக்க, அப்படைப்புகளுக்கு ஆரியப் பிராமணர்கள் உரைகளை எழுதி, தமிழரின் கொள்கை, சிந்தனைகளுக்கு மாறான தம் கொள்கையை புகுத்தினர். இந்நடைமுறைகளால், பல தமிழ்ச் சொற்கள், மறைக்கப்பட்டு, வழக்கிழந்து போயின. எடுத்துக்காட்டாக, எகினம், ஓதிமம், குருகு போன்ற, வாத்தைக் குறித்த சொற்கள் மறக்கப்பட்டு, அன்னம் என்ற சமற்கிருதச் சொல் புகுத்தப்பட்டது.

சில சிறப்புக்குரிய தமிழ்ச் சொற்கள், தங்கள் பெருமைகளை இழந்தன. எடுத்துக்காட்டாக, உயிர் மெய் என்ற சொல், ப்ராணி என்று திருத்தப்பட்டது.

சாதிக் கோட்பாடுகள், இலக்கியத்திலும் புகுத்தப் பட்டது. அதன்படி, நான்கு வகையான செய்யுட்கள், பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரருக்கு முறையே, வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்று வரையறுக்கப்பட்டன.

செய்யுளின் வரி எண்ணிக்கைகள் கூட, சாதிக்கேற்றவாறு அமைக்கப்பட்டன. எடுத்துக்காட்டாக, கலம்பகம் என்ற செய்யுள் வகை, 100, 95, 90, 70, 50, 30 என்றவாறு அமையபாடப்பட்டது. தெய்வத்தன்மை பெற்ற துறவர், பிராமணர், மன்னர், அமைச்சர், வணிகர், வேளாளர் என்றவாறு வரிசைப் படுத்தப்பட்டன. சூத்திரருக்குப் பாடப்படவில்லை.

தமிழில், வனப்பு என்ற எட்டு வகையான பாடல்கள், முறையே, அம்மை, அளகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இலைபு என்பன மரபு வழியில்அறியப்பட்டு, தொல்காப்பியத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றை சமற்கிருத முறைப்படி, பெருங்காப்பியம், சிறு காப்பியம் எனப் பிரித்துவிட்டன.

இடக்கிடப்பியல் சார்ந்த தொன்மங்கள் (புராணங்கள்), தமிழ் நாட்டின் பழைய இடப் பெயர்களை அழித்ததோடு, தமிழ்ப் பேரரசர்களையும் வெற்றியாளர்களையும், அசுரர்கள் எனப் பதிவு செய்தன. சமற்கிருதம் தெய்வமொழியென்றும், ஆரியர்கள் தெய்வத் தன்மை கொண்டவர்கள் என்றும், பூவுலகின் கடவுளர்கள் என்றும் போற்றும் நிலை உருவாக்கப்பட்டது. தமிழ் மக்கள், கல்வியறிவற்றவர்களாவும், சிந்தனைத் திறனற்றவர்களாகவும் மாற்றப்பட்டனர்.

தமிழ், ஆரியமயமாக்கலின் அடுத்த கட்டமாக, மாந்தப் பெயர்கள், குறிப்பாக மன்னர்களின் பெயர்கள், இடப்பெயர்கள், சமற்கிருத மொழியில் சொல்லப்பட்டன. தமிழரின் கலைகள், அறிவியல், இலக்கணம், தமிழ்ப் படைப்புகள் போன்றவை, சமற்கிருதப்புராண முறைகளைப் பின்பற்றி மாற்றம் செய்யப்பட்டன. மன்னனுடைய ஆணைகள், பொதுமக்களுக்கு அளிக்கப்பட்ட கொடைகள் போன்றவை, சமற்கிருதத்தில் எழுதப்பட்டன.

**தமிழைத் தாழ்த்துதல்.**

1. தமிழ் வளர்ச்சி தடுத்து நிறுத்தப்பட்டது.
2. மூன்றாம் தமிழ்ச் சங்கம் கலைக்கப்பட்டது.
3. திருக்குறளின் சிறப்புகள் அடையாளங் காணப்படாமை.
4. தமிழையும் திராவிட மொழிகளையும் வேறுபடுத்தியது.
5. சமற்கிருத ஆசிரியர்களின் அறிவுத் திருட்டு
6. சமற்கிருத நூல்களை முற்காலத்தவையாகவும், தமிழ் நூல்களைப் பிற்காலத் தவையாகவும் காலவகைப் படுத்தியது.
7. தமிழர் வரலாற்றை அழித்தது.
8. ஆரிய மூலங்களைத் தமிழிலும், தமிழ் இலக்கியங்களிலும் இணைத்தது.
9. ஆரிய வழிபாட்டு முறைகளைத் தமிழ் நாட்டில் புகுத்தியது.

10. தமிழ் இலக்கியங்களை மறைத்தது, அழித்தது.
11. தமிழ்ப் புலவர்களை, இலக்கியம் தொடர்பான குழுக்களினின்றும் நீக்கியது.
12. தமிழ்ப் புலவர்களின் வேலை வாய்ப்புகளை ஒழித்தது.

**தமிழின் சீர்குலைவு**

1. முத்தமிழுக்கும் இடையே தொடர்பும் இணைப்பும் குறைந்தது.
2. மெல்ல மெல்ல தமிழ்ப்புலவர்களின் எண்ணிக்கை சரிந்தது.
3. தமிழ் இலக்கணம் குறைவுபட்டது
4. செய்யுள்களில் தரம் குறைந்து போனது
5. தமிழ்க்கல்வி மறுக்கப்பட்டது.
6. தொடர்ந்து தமிழ் பேசும் நிலப்பரப்பு குறைந்து வந்தது.
7. பழங்காலத் தமிழ் இலக்கியங்கள் அழிக்கப்பட்டது.
8. மிகுதியான தமிழ்ச் சொற்தொகுதிகள் வழக்கிழந்து போனது
9. தமிழ்ச் சொற்கள் வழக்கற்றுப் போனது.
10. தமிழ்ச் சொற்றொருதிகள் கலப்புற்றது.
11. பொது அறிவிப்புகளிலும் பதிவுகளிலும் தவறுதலான தமிழ்ச்சொற்களைப் பயன்படுத்தியது.
12. எழுதப்பட்ட தமிழில் பிழைகள் மலிந்தது.
13. சில தமிழ் ச் சொற்களின் தோற்றம் அறியப்படாமற் போனது.
14. சமற்கிருத வழியில், தமிழைக் கற்றது.
15. மொழியியல் துறையில் தேக்கம் ஏற்பட்டது.

**தவறான தமிழ்க் கொள்கை**

பேராசிரியர் கே.ஏ.நீலகண்ட சாத்திரி, எம்.ஏ. தனது தென்னிந்திய வரலாறு என்ற நூலின் 125 ஆவது பக்கத்தில் தமிழ் நாட்டில் திருமணம் என்ற சடங்குகள் நிறைந்த நிகழ்வுகள், ஆரியர்களால் தோற்றுவிக்கப்பட்டதென தொல்காப்பியம் உறுதிபடக் கூறுகிறது, என்று எழுதுகிறார்.

இந்தத் தவறான விளக்கம், 1091 நூற்பா, தொல்காப்பியத்தில், அய்யர் என்ற சொல்லால் எழுந்தது.

டாக்டர் பி.பி. சுப்பிரமணிய சாத்திரி, "தமிழு க்கும் சமற்கிருதத்துக்கும் இடையேயுள்ள உறவுகள் பற்றிய உசாவல்", என்ற நூலின் 53 ஆம் பக்கத்தில், பொருளதிகாரம் என்பது யாப்பியல் சார்ந்த அறிவியல் என்று கூறுகிறார். இவர் தொல்காப்பியத்தைச் சரியாகப் படிக்கவுமில்லை, அதன் பொருளை உள்வாங்கிக் கொள்ளவுமில்லை. குறிப்பாக, அதன் மூன்றாம் பகுதி இலக்கியப் படைப்புகள் பற்றிய பொதுவானவற்றைப் பற்றிப் பேசுகிறது.

பொருளதிகாரம் இலக்கியப் பொருண்மைகளின் அறிவியலாகும், தமிழ் இலக்கணத்தின் பயன்பாட்டு நிறைவேற்றமும் உச்சமும், தமிழின் பெருமைக்கும் தமிழர்களின் புகழுக்கும், காலகாலத்துக்குமான பெரும் உயர்வைச் சேர்க்கும்.

# 35. முதல் மொழியான தமிழின் செம்மொழித் தன்மைகளுக்கான சான்றுகள்



1. குமரிக் கண்டத்தில் தோற்றம் கண்டது தமிழ்.
2. மொழியியலில், மிகவும் எளிமைத் தன்மை வாய்ந்தது தமிழ்.
3. உலகளாவிய சிந்தனை கொண்டது தமிழ்.
4. ஆரிய மொழிக் குடும்பத்துக்கு அடித்தளமாக இருப்பது தமிழ்
5. தூய்மையும் தொன்மையும் கொண்ட உருபனியல், தமிழின் சிறப்பு.
6. அம்மா, அப்பா என்ற தமிழ்ச் சொற்களே, உலக மொழிகளில் திரிந்தும் திரியாமலும் உள்ளன.
7. முதல் வேற்றுமை முடிப்பு இல்லாதது தமிழ்.
8. உருபனியலில் பால் வேற்றுமையில்லாதது.
9. இடுகுறிப் பெயர்கள் தமிழில் இல்லை.
10. இணைப்புகளைப் பிரிக்கும் சிறப்புடையது.
11. தமிழின் தோற்றத்தை, மொழிவழி சென்று ஆராய இயலும்.
12. இயற்கையான, ஏரண வழுச் சொற்களைக் கொண்டது தமிழ்.
13. இரட்டை எண் தமிழில் இல்லை.
14. தனித்தன்மையுடனும் இயற்கையாகவும் வளரும் தமிழ்.
15. செம்மொழித் தன்மையில் உயர்நிலையில் உள்ளது தமிழ்.

## 36. தமிழ் சமற்கிருதத்தைவிட இறைவழித் தோற்றம் கொண்டது



தமிழ்

1. தனித்தன்மையானது, தொன்மையானது
2. பேச்சு வழக்கில் வாழும் மொழி.
3. குமரிக் கண்டத்தில் தோன்றியது.
4. எழுத்து வடிவம் பொதுமக்களால் புரிந்து கொள்ளக் கூடியது.
5. உலகம் பொதுமை பதிவுத் தன்மை கொண்டது.
6. அனைவரும் துறவு கொள்ளலாம்.
7. உயர்கல்வி அனைவருக்கும் பொதுவானது.
8. ஏழைகளும் எளியவர்களும் கொடைகளால் ஊக்கம் பெறலாம்.
9. வாய்மையில் விருப்பம்.
10. அன்பின் அடிப்படையில் வீடுபேற்றைப் பெறுவது.
11. சைவம் வைணவம் ஆகியவை ஒரு கடவுட் கொள்கையைக் கொண்டவை.
12. இலக்கிய விளக்கங்கள் இயற்கையானவை

சமற்கிருதம்

1. திரிவு பெற்றது
2. அரை செயற்கை இலக்கிய மொழி
3. இந்தியத் தோற்றம்.
4. எழுத்துக் கல்வி மறைபொருளானது
5. சமூகத்தில் பல பிரிவுகளைக் கொண்டு பிறப்பால் பிளவுகளைத் தோற்றுவிப்பது.
6. பிராமணர்கள் மட்டுமே துறவு கொள்ள இயலும்
7. பிராமணர்களுக்கு மட்டுமே உரியது.
8. பிராமணர்கள் மட்டுமே கொடைகளைப் பெற முடியும்.
9. வஞ்சகத்திலும் அறிவுக் திருட்டிலும் விருப்பம்.
10. உலக ஆன்மா வழியில் பெறுவது
11. பல கடவுளர், துணைக் கடவுளர் வேள்வி, படையல்.
12. கற்பனைத் தன்மை கொண்டவை.

# 37. முடிவு



கடந்து வந்த பக்கங்களில், பழந்தமிழ் திராவிட மொழிகளுக்குத் தாயாகவும், இந்திய ஐரோப்பியர்களின் முன்னோர்கள், தமிழர்களாகவும் இருப்பதைப் பற்றிக் காட்டியுள்ளேன். ஆரியக் குடும்பத்தின் தியூத்தானிய மொழி, அக்குடும்பத்தினின்றும் முன்பே விலகிய தென்றும், சமற்கிருதத்தைவிட, தமிழோடு அம்மொழி நெருங்கியிருப்பதையும் எடுத்துக் காட்டியுள்ளேன்.

தற்காலத் தமிழர்கள், நேரிடையான முரண் கொள்கையில், தமது குமரிக்கண்ட முன்னோர்களைவிட, சிந்தனையிலும், அறிவிலும் மாறுபட்டுள்ளனர். நெடுங்காலம் வேரூன்றிப் போயிருந்த ஆரியரின் சமூகச் சாதிப் பிரிவினைக் கொள்கையால், தமிழர்கள், பின்னுக்குத் தள்ளப்பட்டு, தன்மான உணர்வுகளையும் இழந்து போயினர்.

ஆங்கிலேயர் ஆட்சி அகன்ற பிறகு, தமிழ்ப் பகைவர்களின் எண்ணிக்கை பல மடங்கு பெருகி வருகின்றது. தமிழின் மீது உண்மையான பற்று கொண்ட தமிழறிஞர்கள் கூட, தமிழைப் பொதுவில் தாங்கிப் பிடிக்க அச்சப்பட்டு, அமைதி காக்கின்றனர். தங்களுடைய

பிழைப்புக்கான வேலை பறிபோய் விடுமோ என அஞ்சுகின்றனர்.

தமிழ் தனது பழைய உயர்ந்த புகழ், பண்பாட்டுத் தனித்தன்மை ஆகியவற்றைத் தமிழர்கள் உயர்த்திப் பிடிக்க முன்வராவிட்டால், தமிழ் மொழிக்கும் தமிழ் இலக்கியங்களுக்கும் எதிர்காலமில்லை.

தமிழ் புறக்கணிக்கப்படுவதால், தமிழோடு அதன் முடிவு நின்றுவிடப் போவதில்லை. ஆனால் அறிவியல் முன்னேற்றங்களான அதன் மூன்று கிளைகள், முறையே, பரந்துவாழும் மாந்த இனத்தின் அறிவின் பாற்பட்ட ஈர்ப்பு, உலக வரலாறு, மொழிகளுக்கான ஒப்பியல், சமூகப் பண்பாட்டு மாந்தவியல் ஆகியவை உறுதியாகத் தடுக்கப்படும்.

ஆதலால், அறிவார்ந்த சமூகத்தின் முன் என் வேண்டுகோளை வைக்கின்றேன். குறிப்பாக, மேலை நாட்டு அறிஞர்கள், தங்கள் கவனத்தைத் தமிழின் பால் திருப்பவேண்டும். மறைந்து கிடக்கும் உண்மைகளை வெளிக்கொணர முயல வேண்டும். இம் முயற்சிகள், பாண்டியன் கடலில் எடுக்கப்பட்ட வலம்புரி முத்துக்களை விட உயர்ந்த மதிப்பினைக் கொண்டவையாக அமையும்.

காய்தல் உவத்தல் அகற்றி யொரு பொருட்கள்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே - காய்வதன் கண்
உற்ற குணந்தோன்றா தாகும் உவப்பதன் கண்
குற்றமுந் தோன்றாக் கெடும் - நீதி நெறி.

விளக்கம்

குற்றம் காணுதல், ஏற்றல் ஆகிய நோக்கை நீக்கி, ஒன்றை ஆய்வு செய்வதே அறிவுடையோர் மேற்கொள்ளும் செயலாகும். குற்றம் மட்டுமே காணின் அதனுடே உள்ள நல்லவை வெளிப்படா. ஆய்ந்து ஏற்பதன் மூலம், குற்றங்கள் மறைந்தொழியும்.

**பின்னிணைப்பு**

தமிழ் மொழியின் மறுமலர்ச்சி, 1916 ஆம் ஆண்டிலிருந்து, பல்லவபுரத்தைச் சேர்ந்த மறைந்த மறைமலை அடிகளால் தொடங்கப்பட்டது. தமது வாழ்நாளில், மிகச்சிறந்த தமிழ்க் காப்பாளராக விளங்கிய அடிகள், ஆரியர் வருகைக்கு முன்பிருந்த தமிழை, தூய்மையான தமிழை, மறுபடியும் அரங்கேற்றத் தொடங்கினார். மயக்கமும், ஐயப்பாடுகளும் மறைந்தொழிய, தமிழை, தற்காலப் புதிய சிந்தனைகளை வெளிப்படுத்தப் பயன்படுத்தினார். கருத்தாழம் கொண்ட தமது வளமையான பல்வேறு இலக்கியப் படைப்புகளை தனித்தமிழால் மட்டுமே எழுதி, தமிழின் தகுதியை உயர்த்தினார்.

மறைமலை அடிகளாரின் தனித்தமிழ் இயக்கம், ஆங்கிலேயர்ஆட்சிக்காலத்தில், திணிவு வேகத்தைக் கொடுத்தாலும், அரசு அம்முயற்சிகளுக்கு ஒத்துழைப்பு அளிக்காததால், இணக்கமான தாங்கு பயன் கிடைக்கவில்லை.

உண்மையின் முரண்கள் என்னவெனில், சூழ்நிலைகள், தமிழுக்கு எதிரானவையாகவே மாறின. குறிப்பாக, இந்திய விடுதலைக்குப்பின், முரண்பட்ட சிந்தனையுள்ள தமிழறிஞர்கள், தொல் மரபுகளை மீறி மேல்நிலை பெற்றனர். இதன் வெளிப்பாடு, கோலாலம்பூரின் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் மெய்யானது. அம்மாநாட்டை நடத்தியவர்கள், மறைமலையடிகளின் தனித்தமிழ்ப் பற்றாளார்கள், அம்மாநாட்டில் பங்கேற்க விடாமல், தடுத்துவிட்டனர்.

# 38. என் முடிவுரை



தேவ நேயப் பாவாளர் பற்றி ஏற்கனவே என் முன்னுரையில் எழுதியுள்ளேன். பாவாணரின் ஆழமான தமிழ் அறிவுக்கு நிகரான ஆங்கில அறிவும் அவரிடம் இருந்ததை, “The Primary Classical Language of the World” என்ற நூலில் வாயிலாக அறிந்து வியப்புற்றேன். பொதுவாக, ஆங்கிலம் கற்றவர்களால், ஆங்கிலத்தில் எழுத இயல்வது இயற்கையே. ஆனால், ஆங்கிலேயரும் வியக்கும் வண்ணம், ஆங்கில இலக்கிய நடையில் எழுதுவதென்பதும், குறிப்பாக, தமிழைப் பற்றிய செய்திகளை, ஆங்கிலத்தில் கொடுப்பதென்பதும் அரிதினும் அரிதான முயற்சியே. அம்முயற்சியில் பாவாணர் முழு வெற்றியை ஈட்டியுள்ளார்.

நான் தமிழைப் பற்றியும் உலகவரலாறு பற்றியும் படிக்கத் தொடங்கிய போது, நான் தேர்வு செய்த நூல்களில் முதன்மையானவை தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களுமே. தமிழின் தோற்றம், வளர்ச்சி, செம்மை பற்றியும், அது இந்திய மற்றும் ஐரோப்பிய மொழிகளோடு

தொடர்பு கொண்டிருந்தது பற்றியும் எனக்குச் சரியான புரிதலைக் கொடுத்தவை, பாவாணரின் தமிழ் வரலாறு மற்றும் தமிழர் வரலாறு ஆகிய நூல்களே. ஏற்கனவே, நல்லூர் ஞானப்பிரகாச அடிகளாரின் வேர்ச் சொல் விளக்கங்கள் பற்றிப் படித்திருக்கிறேன். அடிகளார் மொழி பற்றியே தன்னுடைய கவனத்தைச் செலுத்தியிருந்தார். பாவாணர், ஒரு படி கூடுதலாகச் சென்று, வரலாற்றையும் ஓரளவுக்கு இணைத்தார்.

மொழியும் வரலாறும் இரட்டைக் குழவிகள் என்பர். ஒன்றை விடுத்து ஒன்றை ஆய்வு செய்ய இயலாது. பாவாணரின் ஆய்வுகள் மொழி பற்றி முழுமையாகவும், வரலாறு பற்றி ஓரளவிற்கும் உள்ளன. கடந்த ஆண்டுகளில், என்னுடைய ஆய்வுகளைத் தொடங்கும் போது, பாவணருடைய பிற நூல்களைப் படிப்பதை நான் தவிர்த்து விட்டேன். பாவாணருடைய தாக்கங்கள் என்னுடைய ஆய்வுகளில் கலந்து விடக் கூடாது என்ற நோக்கமே காரணமாகும். ஏறக்குறைய 50 நூல்களை நான் எழுதிய பிறகே, பாவாணருடைய நூல்கள் அனைத்தையும் படித்து முடித்தேன். என்னுடைய ஆய்வுகளில் நான் குறிப்பிட்டிருந்த பல செய்திகளை பாவாணர் ஏற்கனவே குறிப்பிட்டிருந்ததை உணர்ந்தேன். வரலாற்றுத் தொடர்பான செய்திகளை விரிக்காமல், சுருக்கியிருந்தார். பின்னரே, எனது ஆய்வுப் பயணம் சரியான திசையில் தான் செல்கிறது என்பதை அறிந்து மகிழ்ந்தேன்.

இருபது ஆண்டுகளுக்கு முன்பு எபிறேய மொழியைக் கற்க முயன்றேன். அதில் முழு புலமை பெற இயலவில்லை யென்றாலும், ஓரளவுக்கு அம்மொழியைப் புரிந்து கொள்ளும் தகுதி கிடைத்தது. எபிறேய மொழி, கி.மு.2500 ஆண்டுகளில் வழக்கில் இருந்தது எனலாம். இன்று பல முறை வழக்கிழந்த

பின்னரும், புதுப்பிக்கப்பட்டு, இசறாயல் நாட்டின் ஆட்சி மொழியாகவும், மக்களின் பேச்சு மொழியாகவும் உள்ளது. உலக மொழிகளில் பழமையானவை, இன்றும் பேச்சு எழுத்து வழக்கில் உள்ளவை எவை யென்றால், அவை தமிழும் எபிறேயமும் மட்டுமே. எபிறேய மொழியின் வாயிலாக, நடுத்தரைக் கடல் நாட்டுப் பழைய, வழக்கிழந்து போனாலும், எழுத்து முறையிலான பதிவுகளில் உள்ள சுமேரியம், அக்காடியம் (பாபிலோனியம்), எகிப்தியம், போனிசீயம், அறமாயிக், கிரேக்கம், இலத்தீன் போன்ற மொழிகளைத் தொடர முடிந்தது.

பாவாணர், தமிழ், தென்னிந்திய மொழிகளுக்குத் தாயாகவும், இந்திய மொழிகளுக்கு மூலமாகவும் உள்ளதெனக் குறிப்பிட்டார். தற்கால மொழியியல், வரலாற்று ஆய்வுகள், **தமிழ், இந்திய மொழிகளுக்குத் தாயாகவும், உலக மொழிகளுக்கு மூலமாகவும் உள்ளதென உறுதி செய்துள்ளன.** எனவே, 60 ஆண்டுகளுக்கு முன்பு பாவாணர் செய்த ஆய்வுகளைவிட, கூடுதலான தரவுகள் இப்போது கிடைத்து வருகின்றன. அதனால், பாவாணரின் ஆய்வுகளில், சில திருத்தங்கள் இணைக்கப்பட்டு வருகின்றன. மொழி, வரலாறு, அறிவியல், வானியல், நிலவியல், கடலியல் போன்ற துறைகளில், நடந்த நூற்றாண்டுகளில் சொல்லப்பட்ட பல செய்திகள், தவறானவை, புரிதலற்றவை என்றவாறு பல செய்திகள் ஒதுக்கப்பட்டன. ஆய்வுகள் அனைத்தும் திருத்தங்களுக்கும் புதிய செய்திகளுக்கும் கட்டுப்பட்டவையே. 1924இல், வெகனர் என்பவர், எரிமலை வெடிப்பு, நில அதிர்வுகள், ஆழிப் பேரலைகள் பற்றிய கொள்கை யொன்றை வெளியிட்டார். உடனே அவற்றை அறிவியலாளர்கள் ஏற்றுக் கொள்ளாமல் புறந்தள்ளிவிட்டனர். 1962 ஆம் ஆண்டில்

அவருடைய கொள்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது. நிலத்தட்டு நகர்வுகள் (Movements of Techtonic plates) என்ற அவருடைய கொள்கை இன்று பல ஐயப்பாடுகளுக்கு விடையளித்துள்ளது.

தொல்காப்பியர் பற்றிய பல செய்திகளை, பாவாணர் அளித்துள்ளார். தொல்காப்பியம் தமிழர் வரலாற்றின் முது கெலும்பு என்றும், தொல்காப்பியம் அறியப்படாது போயிருந்தால், தமிழரின் வரலாறு பின்னுக்குத் தள்ளப்பட்டிருக்கும் என்றும் பாவாணர் கூறினார். ஆனாலும், தொல்காப்பியத்திலிருந்த சில தவறுகளை அவர் சுட்டிக்காட்டத் தயங்கவில்லை. தொல்காப்பியர் பற்றி பாவாணர் குறிப்பிட்டிருந்த சில செய்திகளில் எனக்கு முரண்பாடுகள் உண்டு. எந்தவொரு ஆய்வாளரின் ஆய்வுகளிலும் சில சறுக்கல் தோன்றுவது இயற்கையே. என்னுடைய ஆய்வுகளும் கூட இந்த விதிக்குட்பட்டவையே.

தொல்காப்பியர் காலத்தில் சகரம் சொல்லிற்கு முதலில் வராது என்று சொல்லப்பட்டிருந்தாலும், தொல்காப்பியரே சில சகரச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார் என்பதை பாவாணர் எடுத்துக்காட்டி, சகரச் சொறகள் பலவற்றைப் பட்டியலிட்டுள்ளார். தொண்டு என்ற எண் தொல்காப்பியரால் ஒன்பது என மாற்றப்பட்டதையும் பாவாணர் ஏற்றுக் கொள்ளவில்லை. இது ஏரணக் கொள்கைக்கு (logic) முரணானது என்றும் குறிப்பிட்டுள்ளார். பல சமற்கிருதச் சொற்களை, தொல்காப்பியர் பயன்படுத்தியுள்ளார் என்றும் குறிப்பிடுகின்றார்.

திருக்குறள், 1330 பாக்களைக் கொண்டது என வரையறுக்கப்பட்டுள்ளது. அதைப்போல, தொல்காப்பியம் எத்தனை வரிகளைக் கொண்டது என்பதை, இதுவரை எவரும்

